ஸ்ரீரஸ்து

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# அண்ணஸ்வாமி அமுத மொழியாயிரம்

(பிற்பகுதி 501 முதல் 1000 வரையிலுமுள்ள அமுதமொழிகள்)



ஸ்ரீ காஞ்சீ பிரதிவாதி பயங்கரம்

மஹாமஹிமோபாத்யாய பத்மவிபூஷண

ஸ்ரீமதுபயவே அண்ணங்கராசாரியர் ஸ்வாமி

மதராஸ் ரத்னம் பிரெஸ் ப்ராஞ்சிலும்

திருவல்லிக்கேணி குரு அச்சகத்திலும்

பதிப்பிக்கப்பட்டது.

விலை 5 ரூ.

ஆனந்த ஸு ஐப்பசி மீ

1974

# முன்னுரை

பன்மொழிப் புலமை சான்ற மகாமஹோபாத்யாய பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியார் ஸ்வாமியின் "அமுத மொழி யாயிரம்' என்னும் அருமையும் பெருமையும் வாய்ந்த தொகுப்பு நூலின் இரண்டாம் பகுதி, நம்மனோர் செவிக்கும் நெஞ்சுக்கும் பெருவிருந்தாக வெளிவந்துள்ளது. ஸ்வாமி பற்பல சமயங்களில் அருளிய பிரவசனங்களிலிருந்தும், எழுதி யுதவிய கட்டுரைகளிலிருந்தும் வெளிவந்த அரும்பொருள்களைத் திரட்டிச் சேர்த்துக் கோவைப்படுத்தி நமக்கு நூல் வடிவில் உபகரித்துள்ள ஸ்ரீ T. A. அனந்தாழ்வான், ஸ்ரீ M. A. வேங்கட கிருஷ்ணன் ஆகியோருக்குப் பொதுவாக அறிஞர் உலகமும் சிறப்பாகத் திருமாலடியார் குழாமும் கடப்பாடுடையவையாகும்.

ஐந்நூற்றொன்று முதலாக ஆயிரத்தொன்று வரையுள்ள அமுதமொழிகள் யாவும் மணிகளை நிரல்படக் கோத்தாற் போல் ஒளி தந்து நமது அறிவைப் பிரகாசிக்கச் செய்கின்றன; அமுதமாய் நம் உள்ளத்தை இன்புறுத்துகின்றன; தொடர்ந்து வாசிக்க வேண்டும் என்னும் ஆர்வத்தை உண்டாக்கி நம்மை ஈடுபடுத்துகின்றன. 'மணிவண்ணன்' என்று ஆன்றோர் எம்பெருமானை அழைத்ததில் உள்ள தத்துவார்த்தங்களை எவ்வளவு அழகாக ஸ்வாமி விளக்கியுள்ளார்! "மையோ! மரகதமோ! மறிகடலோ! மழைமுகிலோ!" என்றார் கம்பரும். இவைகளுக்கெல்லாம் விளக்கம் இந்நூலகத்தே உளது.

எம்பெருமானை ஆழ்வார்கள் வ்ருஷபமாகவும், சிம்மமாகவும், வண்டாகவும் பேசியுள்ளது முதலாகப் பல அரிய கருத்துக்கள் மிளிர்கின்றன. பாகவதர்களின் ஏற்றம் பற்றிய விசேஷார்த்தங்கள் 633 முதல் உள்ளன. திருநெடுந்தாண்டகத்தில், "அறுகால சிறு வண்டே! தொழுதேன் உன்னை" என்பதற்குப் பட்டர் அருளிய ரசோக்தியான அர்த்தம் நம்மை இன்புறுத்துகின்றது. ஆழ்வார்களும் ஆசாரியர்களும் தமிழை வளர்த்த பெருமையை பற்பல

இடங்களில் கண்டு அனுபவிக்கலாம். "சரணாகதி தீபிகை" என்னும் விஷயம் தெள்ளமுதாகும்.

ஸ்ரீமந் நிகமாந்த மகாதேசிகன் தேவப்பெருமாள் விஷயமாக அருளிய "ந்யாஸ தசகம்", நம் பெருமாள் விஷயமாக அருளிய "பகவத் த்யான ஸோபானம்" முதலான ஸ்தோத்ரங்களில் மிளிரும் பொருள் நயங்கள் கற்பார் உள்ளத்தைக் கனிவிக்கும் தன்மை வாய்ந்தவை. இங்ஙனே பல அரிய விஷயங்கள் ஆறு, ஏழு, எட்டாம் நூறு அமுத மொழிகளாக அமைந்துள்ளன. ஒன்பதாவது நூறு ஸ்ரீராமாயண விசேஷார்த்தங்களைக் கொண்டு திகழ்வது. விபீஷணனுக்கு முதல் மகுடாபிஷேகம் நடத்தி வைக்கும் சமயத்தில் பெருமாள் அரக்கரது பலாபலங்களை உள்ளபடி சொல்லுமாறு கேட்டது பற்றி ஸ்ரீபிள்ளை லோகாசாரியர், ஸ்ரீமணவாள மாமுனிகள் ஆகியோரின் ஸ்ரீ ஸூக்திகளை எடுத்துக் காண்பித்து விளக்கம் தருவது முதலான பல அரிய அமுத மொழிகள் உள்ளன.

பத்தாவது நூறில் முதல் எழுபத்தைந்து, எம்பெருமானார் தரிசனத்தின் ஸாரப் பொருள்களாக ஸ்ரீஸ்வாமி அருளிய அமுத மொழிகளைக் கொண்டுளது. நமது ஸம்பிரதாயத்தின் ஸாரமான விஷயங்களை யாவரும் எளிதில் தெரிந்து புரிந்துகொள்ளும்படி விஷயங்கள் இதில் அடங்கியுள்ளன. வேதாந்த ஸாரமான சுகதரிசனத்தை நமக்கு அளித்த ஸ்ரீபகவத் ராமாநுஜர் அன்று அமுதம் வழங்கி இன்றும் நம்மைக் கடாக்ஷித்துக் கொண்டிருக்கிறார். ஸ்ரீ அண்ணா ஸ்வாமி ஸம்பிரதாய விஷயங்களை "அமுத மொழியாயிரம்" தந்து நம்மை இப்பொழுது வாழ்வித்துக் கொண்டிருக்கிறார்.

திருமாலடியார் ஒவ்வொருவரும் இந்நூலினைப் பெற்றுப் போற்றிப் பயனடைய வேண்டுமென்பது அடியேனுடைய விண்ணப்பம். நூல் நிலையங்கள் யாவும் இந்நூலினைப் போற்றிக் கொள்ளுதல் வேண்டும்.

ஆழ்வார்கள் வாழி! அருளிச் செயல் வாழி! அண்ணாஸ்வாமியின் அமுத மொழிகள் அனவரதம் வாழி!

**S. V. வரதராஜ ஐயங்கார் M.A., M.O.L.,**

40, தெளிசிங்கப் பெருமாள்
கோயில் தெரு, திருவல்லிக்கேணி.
*21—10—'74*

## பதிப்புரை

நமது நண்பரான ஸ்ரீமான் D. கிருஷ்ணமூர்த்தியவர்கள் இரண்டு மூன்று ஆண்டுகட்குமுன்பு 'அண்ணாஸ்வாமியமுதமொழியாயிரம்' என்னும் பெயரால் ஸ்ரீஸ்வாமிகளின் பல நூல்களிலிருந்து அமுதமொழிகளைத் திரட்டியெடுத்து அவை ஐந்நூறு கொண்ட முற்பகுதியை வெளியிட்டிருப்பது உலகம் பரவியுள்ளது. பிற்பகுதியையும் வெளியிடப் போகிறாரென்று உலகம் எதிர்பார்த்திருக்கையில், இப்பணி அடியோங்களுக்கே ப்ராப்தமாயிற்று. ஸ்ரீஸ்வாமியின் பல நூல்களிலிருந்து பின்னையும் ஓர் ஐந்நூறு அமுத மொழிகளைத் திரட்டிப் பிற்பகுதியாக இதோ வெளியிடப்படுகின்றது.

**இப்பகுதியில் தொகுக்கப்பட்டுள்ள விஷயங்களுக்கு**
**அட்டவணை**

இங்ஙனம்,

T. A. அநந்தாழ்வான்.

M. A. வேங்கடகிருஷ்ணன்.

ஸ்ரீ:

அண்ணஸ்வாமியின்

# அமுதமொழியாயிரம்

(பிற்பகுதி)

## (ஆருவது நூறு)

---

### மணிவண்ணன் விசேஷார்த்தம்.

மல்லாண்ட திண்டோள் மணிவண்ணு வென்றழைத்துப்
பல்லாண்டு பாடியநம் பட்டர்கோன்—சொல்லால்
மணிவண்ண னென்றறியும் மாலிடத்தே தோன்றும்
மணிவண்ணஞ் சொல்லுகேன் வாய்ந்து.

* மணியை வானவர்கண்ணனை * என்று நம்மாழ்வாரும், * மல்லாண்டதிண்டோள் மணிவண்ணு * என்று பெரியாழ்வாரும், * மாலேமணிவண்ணு * என்று ஆண்டாளும் இங்ஙனே மற்றும் பலரும் எம்பெருமானை மணிவண்ணனுகக் கூறியுள்ளார்கள். இதற்கு, இந்திரநீலக்கல்லின் நிறம்போன்றழகிய நிறமுடையவன் என்று ஒரு பொருள். [மணி—ரத்னம்.] ரத்தினத்தின் தன்மைபோன்ற தன்மையுடையவன் என்பது மற்ருெரு பொருள். ரத்தினத்திற்கும் எம்பெருமானுக்கும் ஒப்புமை பலபடிகளாலே சொல்லத் தகுதியுண்டு. எங்ஙனேயென்னில் ;—

501. ரத்னமானது தன்னைப் பெற்றவர்களையும் பெற விருப்பமுடையாரையும் இரவும் பகலும் கண்ணுறங்க வொட்டாது. ரத்னமென்பது மிகச் சீரியபொருளாதலால் அதனை ஆர்ஜிக்கவேண்டிய காலத்தில் அதுவே சிந்தையாகக் கண்ணுறங்காமையும், ஆர்ஜித்தபின் அதனைக் காப்பதற்காகக் கண்ணுறங்காமையும் உலகில் பிரசித்தம் ; எம்பெருமான் திறத்திலுமிது காணலாம். எம்பெருமானைப் பெற நினைக்கும் முமுக்ஷுக்கள் * கண்ணாரக்கண்டு கழிவதோர் காதலுற்றார்க்குமுண்டோ கண்கள் துஞ்சுதலே * என்று நம்மாழ்வாரருளிச் செய்தபடியே கண்ணுறங்கார்கள். அப்பெருமானைப்பெற்ற முக்தர்களும் நித்யர்களும் * ஸதா பச்யந்தி ஸூரய: * என்ற

சுருதியின்படியும் * உறகலுறகலுறகல் ஒண்சுடராழியே சங்கே * என்கிற பெரியாழ்வார் திருமொழியின்படியும் இமையாத கண்ணினராய்க் கண்துஞ்சாமே காப்பிடுவர்கள்.

502. ரத்னமானது எவ்வளவு விலையுயர்ந்ததாயினும் தலைப்பில் முடிந்து ஆளலாம்படி அடங்கியிருக்கும். எம்பெருமானும் எவ்வளவோ பரத்வம் பொலிய நிற்பவனுயினும் * பத்துடையடியவர்க்கு எளியவன் * என்கிற நம்மாழ்வார் திருவாக்கின்படியே ஆச்ரிதர்களுக்கு எளியனுய்ப் பரம விதேயனுயிருப்பன். *ஆயர்புத்திரனல்லன் அருந்தெய்வம் பாயசீருடைப் பண்புடைப்பாலகன் மாயனென்று மகிழ்ந்தனர் *(பெரியாழ்வார் திருமொழி) என்னும்படியான பரத்வம் விளங்காநிற்கச்செய்தேயும் உரலிலே கட்டியடிக்கலாம்படி அடங்கியிருந்தமை முதலான ஸௌலப்ய காரியங்கள் பலவும் நினைக்கத்தக்கன.

503. ரத்னமானது கடல் மலை முதலிய இடங்களில் உள்ளது. கடல் ரத்நாகரமென்றே பெயர்பெற்றதாதலால் கடலில் ரத்னமிருப்பது ஸித்தம். * ஊரும்வரியரவமொண் குறவர் மால்யானை பேரவெறிந்த பெருமணியை * (முதல் திருவந்தாதி) என்பது முதலான பாசுரங்களினுல் மலையில் ரத்னமிருப்பதும் ஸித்தம். எம்பெருமானும் திருப்பாற்கடலிலும் திருவேங்கடம் திருமாலிருஞ்சோலை முதலான மலைகளிலும் விளங்குபவன். * மலைமேல்நிற்பாய் கடல் சேர்ப்பாய் * என்ற திருவாய்மொழியும் இங்கே நினைக்கத்தக்கது.

504. ரத்னமானது தன்னையுடையவனை மார்பு நெறிக்கப் பண்ணும். ரத்னமுடையவர்கள் மஹாதனிகர்களாதலால் செருக்குற்றிருப்பர்களன்றே. எம்பெருமானும் தன்னையுடையவர்களை * எனக்காரும் நிகரில்லையே * மாறுளதோ விம்மண்ணின்மிசையே * எனக்கென்னினி வேண்டுவதே * இனி யாவர் நிகரகல்வானத்தே * என்று மார்பு நெறித்துப் பேசப்பண்ணுவன். நாலுநாளில் அழிந்துபோகக்கூடிய ரத்னத்தைப் பெற்றவர்கள் மார்பு நெறிக்கக் கண்டால் என்றுமழியாத சாச்வத(ராம)ரத்னத்தைப் பெற்றவர்கள் மார்பு நெறிக்கச் சொல்ல வேணுமோ!

505. ரத்னமானது தன்னைக் கைக்கொண்டவனைப் பலரும் அநுவர்த்திக்கும்படி பண்ணும். மஹா தனிகர்களைப் பலரும் அநுவர்த்தித்துக் கிடப்பர்களன்றே. எம்பெருமானும் தன்னையுடையார்களை உலகமெல்லாம் அநுவர்த்திக்கும்படி பண்ணுவன். * மைத்ரேய: பரிபப்ரச்ச ப்ரணிபத்யாபிவாத்ய ச * * தத் வித்தி ப்ரணிபாதேந பரிப்ரச்நேந ஸேவயா, உபதேக்ஷ்யந்தி தே ஜ்ஞாநம் ஜ்ஞாநிநஸ் தத்வதர்சிந: * இத்யாதிகள் காண்க. பகவானைக் கைக்கொண்ட மஹான்களை உலகமெல்லாம் அநுவர்த்திக்கக் காணுநின்றோமே.



506. ரத்னமானது இடையில் ஒரு புருஷனைக்கொண்டே வாங்கப்படும். ['தரகர்கள்' என்று சிலருண்டே; அவர்கள் மூலமாகவே பெரும்பாலும் ரத்ன வியாபாரம் நடைபெறும்.] எம்பெருமானும் புருஷகாரமுகமாகவே பெறப்படுவன். *வேதம் வல்லார்களைக்கொண்டு விண்ணோர்பெருமான் திருப்பாதம் பணிந்து * என்றார் நம்மாழ்வார். ஸ்ரீராம ரத்னத்தைப் பெற வந்த விபீஷணுழ்வான் * *நிவேதயத மாம் க்ஷிப்ரம் விபீஷணமுபஸ்திதம்* * என்று புருஷகார புரஸ்காரங்கொண்டமை ஸ்ரீராமாயண யுத்தகாண்டத்தில் அறியத்தக்கது.

507. ரத்னமானது மோதிரம், தோடு, ஹாரம் முதலான சிலசில ஆச்ரயங்களில் அதிகமான மதிப்புப்பெறும். எம்பெருமானும் ஆழ்வார்களின் திருவாக்கில் புகுந்து புறப்பட்ட திருப்பதிகளிலே அதிகமான மதிப்புப்பெறுவன்.

508. ரத்னமானது ஒளியைவிட்டிராது; எப்போதும் ஒளியோடுகூடியே யிருக்கும். எம்பெருமானும் பிராட்டியை விட்டு இரான். *தேவத்வே தேவதேஹேயம் மநுஷ்யத்வே ச மாநுஷீ * * அநுஜநுரநுரூபசேஷ்டா...இந்திரா * இத்யாதி ப்ரமாணங்களின்படியே பிராட்டியோடுகூடியே யிருப்பனெம்பெருமான். * அநந்யா ராகவேணுஹம் பாஸ்கரேண ப்ரபா யதா * என்கிற ஸீதாபிராட்டியின் வசனத்தாலும் * அநந்யா ஹி மயா ஸீதா பாஸ்கரேண ப்ரபா யதா * என்கிற ஸ்ரீராகவன் வசனத்தாலும் பிராட்டியை ஒளியின் ஸ்தானத்திலே உணரலாம்.

509. ரத்னத்திலே ஒளியானது சில ஸமயங்களிலே உத்பூதமாயிருக்கும், சிலஸமயங்களிலே அநுத்பூதமாயிருக்கும். அப்படியே பிராட்டி எம்பெருமானிடத்திலே சிலஸமயங்களில் ஸ்பஷ்டமாய்த் தோன்றியிருப்பள்; வாமநாவதாராதி ஸமய விசேஷங்களில் மறைந்திருப்பள். * க்ருஷ்ணுஜிநேந ஸம்வ்ருண்வந்

வாமனோ வக்ஷஸி ச்ரியம் * என்றார்கள் மஹர்ஷிகள். வேதாந்த தேசிகன் தேஹளீசஸ்துதியில் * பிக்ஷோசிதம் ப்ரகடயந் ப்ரதமாச்ரமத்வம் க்ருஷ்ணாஜிநம் யவநிகாம் க்ருதவாந் ப்ரியாயா:, வ்யக்தாக்ருதேஸ் தவ ஸமீக்ஷ்ய புஜாந்தரே தாம் த்வாமேவ கோபநகரீச! ஜநா விதுஸ் த்வாம்* என்றருளிச்செய்த ச்லோகரத்நமும் இங்கே அநுஸந்தேயம்.

510. ரத்னமானது ஒளியால் மேன்மைபெறும், ஒளிமிக்க ரத்னத்திற்கே யன்றோ மதிப்பு அதிகம். எம்பெருமானும் பிராட்டியினாலேயே பெருமேன்மை பெறுகிறான். * திருவில்லாத் தேவரைத் தேறேல்மின் தேவு * என்கிறார் திருமழிசைப்பிரான். * வேதாந்தாஸ் தத்வ சிந்தாம் முரபிதுரஸி யத்பாத சிஹ்னைஸ் தரந்தி * என்றும் * அபாங்கா பூயாம்ஸோ யதுபரி பரம் ப்ரஹ்ம ததபூத் * என்றும் அருளிச்செய்கிறார் பட்டர் ஸ்ரீகுணரத்நகோசத்திலே. *ச்ரத்தயாதேவோ தேவத்வமச்நுதே* என்கிறான் வேதபுருஷன். இந்த வேத வாக்கியமானது *ச்ரத்தயா அதேவ: தேவத்வம் அச்நுதே* * என்று பத விபாகமுடையது. தேவ: என்று பதவிபாகம் பண்ணுவது இவ்விடத்து ஸ்வரமர்யாதைக்குச் சிறிதும் சேராது. *ச்ரத்தா* என்பது பிராட்டியின் திருநாமங்களில் ஒன்று. எம்பெருமான் பிராட்டியின் ஸம்பந்தம் பெறுவதற்கு முன்பு தேவத்வமில்லாதவனாயிருந்து பிராட்டியின் சேர்க்கையினாலேயே தேவத்வம் பெறுகிறானென்கிறது இந்த ச்ருதி. * அப்ரமேயம் ஹி தத் தேஜோ யஸ்ய ஸா ஜநகாத்மஜா * என்கிற மாரீச வசனமும் ஸ்ரீராமபிரானுக்குப் பிராட்டியினாலேயே பெருமேன்மை யென்று நன்கு விளக்குகின்றது. இராவணன் மாரீசனிடம் வந்து 'இராமனை அடர்க்க நீ துணைநிற்கவேணும்' என்று வேண்ட அப்போது மாரீசன் சொன்ன அற்புதமானமொழி இது. இராமன் ஸீதாபிராட்டியைக் கைப்பிடிப்பதற்குமுன்னம் விச்வாமித்திரனது வேள்வியிலே என்னால் காணப்பட்டான்; அப்போதே அவன் அநபிபவநீயனாயிருந்தான்; பின்னை அவன் ஸீதாபிராட்டியைக் கைப்பிடித்தவனுமாயினன்; அதனால் அப்பெருமானுக்கு விளைந்த புகர் பேசத்தரமோ? என்றான். * ஸ்வயா தீப்த்யா ரத்நம் பவதபி மஹார்க்கம் * என்கிற ஸ்ரீகுணரத்ந கோச ஸ்ரீஸூக்தியும் இங்கே சேர்த்து அநுஸந்தேயம்.



511. ரத்னமானது தன்னையிழந்தவனைக் கதறிக் கதறி அழப்பண்ணும்; உயர்ந்த ரத்னத்தை இழந்தவன் கதறிக்கதறி யழுவது தவிர வேறென்ன செய்யமுடியும்? எம்பெருமான் படியுமப்படியே. ஸ்ரீராமரத்நத்தை யிழந்த பரதாழ்வான் ஸபையிற் புரண்டு கதறியழுதமை * *விலலாப ஸபா மத்யே* * இத்யாதிகளில் ப்ரஸித்தம். * ஏரார்ந்தகருநெடுமால் இராமனாய் வனம் புக்கவதனுக்காற்றாத் தாரார்ந்த தடவரைத்தோள் தயரதன்தான் புலம்பிய வப்புலம்பலும் ஸ்ரீராமாயணாதி ப்ரஸித்தம். *பழுதே பல பகலும் போயினவென்று அஞ்சியழுதே னென்கிறார்கள் அறிவிற் சிறந்தவர்கள். * எழில்கொள் நின்திருக்கண்ணிணைநோக்கந் தன்னையுமிழந்தேனிழந்தேனே *இன்பத்தையிழந்த பாவியேனென தாவி நில்லாதே * என்று தெய்வத் தேவகி புலம்பியபுலம்பல் ப்ரஸித்தம். * உன்னைக் காண்பான் நானலப்பாய் ஆகாயத்தை நோக்கியழுவன் * என்று கதறுகிறார் நம்மாழ்வார். * ஏகஸ்மிந்நப்யதிக்ராந்தே முஹூர்த்தே த்யாநவர்ஜிதே, தஸ்யுபிர் முஷிதேநேவ யுக்தம் ஆக்ரந்திதும் ந்ருணாம் * என்று எம்பெருமானுடைய சிந்தனையை ஒரு நொடிப்பொழுது இழந்தாலும் கதறிக்கதறி யழவேணுமென்கிறார்கள் மஹர்ஷிகள். ஆகவே இழவில் கதறியழப்பண்ணுந் தன்மை ஒக்கும்.

512. ரத்னமானது அதமன் கையிலே கிடைத்தவளவில் அற்ப விலைக்கு மாறும்; மத்யமன் கையில் கிடைத்தவளவில் உள்ளபடியான விலைக்கு மாறும்; உத்தமன் கையில் கிடைத்தவளவில் விலைக்கு ஆட்படாமல் ஸ்வயம்போக்யமாகும். [இதன் விவரணம்;] மீன் பிடிக்கிற செம்படவன் கையிலும் விலையுயர்ந்த ரத்னம் கிடைப்பதுண்டு; அவன் அதன் மதிப்பை யறியாதவனாகையாலே அற்ப விலைக்கு அதை விற்றுவிடுவான். * "மாமதியம் திளைக்குங்கொடி மாளிகைசூழ் தெருவில் செழுமுத்து வெண்ணெற்கெனச் சென்று முன்றில் வளைக்கை நுளைப்பாவையர்மாறு நாங்கூர்" என்ற திருமங்கையாழ்வார் பாசுரத்தாலும் இது அறிய வெளிது. அதே ரத்னம் ஒரு வியாபாரியின் கையில் கிடைத்தால் அவன் அதன் மதிப்பை யறிந்தவனாகையாலே உள்ளபடியான விலைக்கே விற்பன். அதே ரத்னம் ஒரு மஹாராஜன் கையில் கிடைத்தால் அவனுக்கு அதை விற்று ஆகவேண்டிய தொன்றுமில்லாமையாலே விலை

கோராமல் அதை ஹாரத்திலேயழுத்தி ஸ்வயம் போக்யமாக அணிந்துகொள்ளுவன். இம் மூன்றுபடிகளையும் உலகில் எளிதாகக் காணாநின்றோம். எம்பெருமான்படியுமிப்படியே. க்ஷுத்ரர்கள் எம்பெருமான் பக்கலிலே ஐச்வர்யம் ஸந்தானம் என்றிங்ஙனே அற்பபலன்களைப் பெற்றுப்போவர்கள். சிலர் மோக்ஷத்தை வேண்டிப் பெற்றுப்போவர்கள். அவன்பக்கலில் நாம் வேண்டுவதொன்றுண்டோவென்று அற்பபலன்களையும் விரும்பாமல் உயர்ந்த பலனான மோக்ஷத்தையும் விரும்பாமல் * இச்சுவை தவிர யான் போய் இந்திரலோகமாளுமச்சுவை பெறினும் வேண்டேன் * என்றும் *எம்மாவீட்டுத்திறமும் செப்பம்* என்றும் *வைகுண்டவாஸேபி ந மேபிலாஷ: * என்றும் பரமபதத்தையும் வெறுத்துத் தள்ளி * எனக்குத் தேனேபாலே கன்னலேயமுதே * என்று ஸ்வயம் போக்யமாக அநுபவித்து அத்தலைக்கு மங்களாசாஸனம் செய்வது தவிர வேறொரு பேறில்லை யென்று அதுவே போது போக்கா யிருப்பர்கள் உத்தமாதிகாரிகள். *த்வய்யேகஸ்மிந்நபி விஜஹதோ முக்தவத் ஸாதநத்வம் * என்று தேசிகன் பணித்த கணக்கிலே எம்பெருமானிடத்திலுங்கூட உபாயத்வபுத்தியைப் பண்ணாதே உபேயத்வ புத்தியையே பண்ணியிருக்கும் ஸத்ஸம்ப்ரதாய ரஸிகர்கள் மஹாராஜஸ்தானத்திலே மதிக்கப்படுவர்கள். அநுபாயங்களானவற்றிலுங்கூட உபாயத்வ புத்தியைப் பண்ணி நிற்குமவர்கள் வியாபாரிகளின் ஸ்தானத்திலே எண்ணப்படுவர்கள். க்ஷுத்ரபலார்த்திகள் செம்படவன்போல்வாரான நீசர்களின் ஸ்தானத்திலே நினைக்கப்படுவர்கள். மேலே விவரித்த மூன்றுபடிகளுக்கும் ரத்னம் இணங்கி யிருப்பதுபோல எம்பெருமானும் இணங்கியிருத்தல் நன்கு உணரத்தக்கது.

513. ரத்னமானது சேற்றிலே கிடந்தால் மதிப்பறியாதவர்களாலே நிஹீநமாகக் கருதப்பட்டு, மதிப்பறியுமவர்களாலே உள்ளபடியே கருதப்படும். எம்பெருமான்படியுமிப்படியே. * மாய வன்சேற்றள்ளல் பொய்ந்நிலத்தே * என்று நம்மாழ்வாரருளிச்செய்தபடியே சேற்றுநிலமாகிய இவ்விருள்தரு மாஞாலத்திலே எம்பெருமான் வந்து சேர்ந்தால் மதிப்பறியாத மாபாவிகள் * *அவஜாநந்தி மாம் மூடா: மாநுஷீம் தநுமாச்ரிதம்* * என்று கீதையில் அவன்தானே அருளிச்செய்தபடியே குறைய நினைப்பர்கள். அந்த கீதையிலேயே * *தத்வதர்சிந:*



என்று போற்றப்பட்ட மாஞானிகள் * எத்திறமுரலினோடிணைந்திருந்தேங்கியவெளிவே !* என்றும் * பிறந்தவாறும் வளர்ந்தவாறும் !* என்றும் மோஹித்துக்கிடந்து பேசி மதிப்பறிவில் குறையாதே யிருப்பர்கள்.

514. க்ருத்ரிமமான கல்லும் ரத்னமென்று பேர்சுமந்து போலியாக நின்றாலும் வாசியறியமாட்டாதவர்களே பிரமிக்கும்படியாய் விலக்ஷணர்கள் அதில் கால்தாழாதே யிருப்பர்கள். அதுபோலவே, தேவதாந்தரங்களும் பகவானென்று பேர்சுமந்து போலியாக நின்றாலும் ராஜஸ தாமஸர்கள் அவற்றிலே பிரமித்திருப்பர்களேயன்றி சுத்த ஸாத்விகர்களான விலக்ஷணர்கள் அவற்றை அடுப்பிடுகல்லோபாதியாக நினைத்துக் கண்ணெடுத்தும் பாரார்கள். ''நீயாய் நீ நின்றவாறு'' என்றது காண்க.

இங்ஙனேமற்றும்பலபல உவமைப்பொருத்தங்கள்கண்டுகொள்க.

---

## முகில்வண்ணன் விசேஷார்த்தம்

எம்பெருமானை ஆழ்வார்கள் முகில்வண்ணனென்றும் மேகவண்ணனென்றும் அழைத்து அநுபவிப்பர்கள். *ஒக்குமம்மானுருவமென்று உள்ளங்குழைந்து நாணாளும், தொக்க மேகப் பல்குழாங்கள் காணுந்தோறும் தொலைவன் நான் * என்ற திருவாய்மொழியின்படி காளமேகத்தினுருவம் போன்ற உருவமுடையவன் என்கிற பொருள் தவிர, மேகத்தின் ஸ்வபாவம் போன்ற ஸ்வபாவமுடையவன் என்கிற பொருளும் ஏற்கும். அந்த வொற்றுமைநயம் பலபடியாக ஈண்டு விவரிக்கப்படுகின்றது.

515. மேகமானது பெய்யவேண்டு மிடமளவும் சென்று பெய்யும். எம்பெருமானும் * வந்தருளியென்னெஞ்சிடங்கொண்ட வானவர் கொழுந்தே * மண்மீதுழல்வாய் * என்கிறபடியே தனது க்ருபாரஸத்தை வர்ஷிக்க வேண்டுமிடங்களேறச் சென்று வாழவுலகினில் பெய்திடுவன்.

516. மேகமானது மின்னலுள்ள காலம் நீர் நிரம்பப் பெற்றிருக்கும். எம்பெருமானும் மின்னல்போன்ற பிராட்டியோடு கூடியிருக்கும் காலத்திலே க்ருபாரஸம் விஞ்சியிருக்கப் பெறுவன். (* *இந்திரயா தடித்வாந்* * என்றார் பட்டர்.)

" இவள் ஸந்நிதியாலே காகம் தலைபெற்றது ; அதில்லாமையாலே ராவணன் முடிந்தான் " என்கிற முமுக்ஷுப்படி திவ்ய ஸூக்தி காண்க. " ஆவியைச் சனகன்பெற்ற அன்னத்தை அமிழ்தின்வந்த தேவியைப் பிரிந்தபின்னைத் திகைத்தனைபோலுஞ் செய்கை " என்று பெருமாளை நோக்கி வாலி கூறினதாகக் கம்பர் பேசியுள்ளதுங் காண்க. அந்தச் செய்யுளின் கருத்தை லக்ஷ்மீஸஹஸ்ரத்தில் * த்வய்யேவாயததே க்ருபா ரகுபதே: * என்கிற ச்லோகத்தினால் வேங்கடாத்வரியும் வெளியிட்டார்.

517. மேகமானது தான் மொண்ட இடத்திலும் பெய்யும் ; எம்பெருமான் தான் ஞானவெள்ளத்தை மொண்டுகொண்ட இடத்திலும் உபதேச வெள்ளத்தைப் பெய்திடுவன். விபவாவதாரத்தில் தனக்கு ஞானமளித்த வஸிஷ்டாதிகளுக்கும் தான் ஞானமளிக்கத் தொடங்கினமை ஸ்ரீராமாயண ப்ரஸித்தம். சித்ரகூடத்திலே வஸிஷ்ட முனிவன் பெருமாள் பக்கலிலே சில தர்ம ஸூக்ஷ்மங்கள் கேட்கப்பெற்றானாயிற்று. * ஸோஹம் தே பிதுராசார்ய: தவ சைவ பரந்தப, மம த்வம் வசநம் குர்வந் நாதிவர்த்தேஸ் ஸதாம் கதிம் * என்று செருக்கிக்கிளர்ந்த வஸிஷ்டனையும் வாய்மூடுவித்தான் இராமபிரான் சில தரும மருமங்களைச் சொல்லி. அது அயோத்யாகாண்டத்தில் காணத்தக்கது.

518. மேகமானது பெய்யப்பெறாத காலத்திலேவறக்கும் ; எம்பெருமானும் அடியார்களுக்கு அருள் செய்யப்பெறாத காலத்திலே நெஞ்சுலர்ந்து பேசுவன் ; த்ரௌபதிக்கு ஆபத்திலே அருகேயிருந்து உதவப்பெறாத குறையினால் * கோவிந்தேதி யதாக்ரந்தத் க்ருஷ்ணா மாம் தூரவாஸிநம், ருணம் ப்ரவ்ருத்தமிவ மே ஹ்ருதயாத் நாபஸர்ப்பதி * என்றானே.

519. மேகமானது இன்னபோது பெய்யுமென்று ஒருவராலும் அறுதியிட வொண்ணாததாயிருக்கும் : பெய்யவேண்டிய காலத்தில் பெய்யாதொழியவும், பெய்வதற்கு ப்ரஸக்தி இல்லாத காலத்தில் அசிந்திதமாக வந்து தாராளமாகப் பெய்யவுங்கடவது மேகம். எம்பெருமான்படியு மப்படியே. [* வந்தாய்போலே வாராதாய் வாராதாய்போல் வருவானே * என்றாரே நம்மாழ்வார்.] த்ரௌபதிக்கு ஆபத்திலேவந்து முகங்காட்டா தொழிந்தான் ; அபேக்ஷாநிரபேக்ஷமாகத் * தாவியன்றுலகமெல்லாம் தலைவிளாக்கொண்டான்.



520. 'வனத்திடரை ஏரியாக வெட்டியாயிற்று, நீ மழை பெய்தாகவேணும்' என்று வளைப்பிட வொண்ணாதது மேகம். எம்பெருமான்படியு மப்படியே. 'நாங்கள் கரும ஞான பக்தி யோகாதிகளைக் குறையற அனுட்டித்தாயிற்று, இனி நீ அருள் செய்தே யாகவேணும்' என்று வளைப்பிட்டால் அந்த வளைப்புக்காகக் காரியஞ்செய்யுமவனல்லனே எம்பெருமான். * வனத்திடரை ஏரியாம் வண்ணமியற்று மிதுவல்லால், மாரி யார் பெய்கிற்பார் மற்று * என்றாரே பூதத்தாழ்வார், ஆழ்வானும் ஸ்ரீவைகுண்டஸ்தவத்தில் * *யா கர்மணா மதிக்ருதி:* * இத்யாதி ச்லோகத்தாலே இதுதன்னை ஸூசிப்பித்தருளினார். *பெண்ணுலாஞ் சடையினானும் பிரமனும் காண்பான் எண்ணிலா வூழியூழித் தவஞ்செய்தார் வெள்கி நிற்பவன்றோ விண்ணுளார் வியப்பவந்து ஆனைக்கன்று அருளை யீந்தது.

521. மேகமானது ஜலஸ்தல விபாகமின்றியே எங்கும் பெய்யும் ; எம்பெருமானும், வஸிஷ்டன் சண்டாளன் அறிஞர் அறிவிலிகள் என்னும் வாசியின்றிக்கே * *அநாலோசித விசேஷாசேஷ லோகசரண்ய !* * என்னும்படியே எங்கும் ஒரு நிகராக அநுக்ரஹசீலன். * தாசாய கீசாய ச ராக்ஷஸாய * என்றார் வேங்கடாத்வரி. ஆசார்யஹ்ருதயத்தில் " வேடன் வேடுவிச்சி பக்ஷி குரங்கு சராசரம் இடைச்சி இடையர் தயிர்த்தாழி கூனி மாலாகாரர் பிணவிருந்து வேண்டடிசிலிட்டவர் அவன்மகன் அவன்தம்பி ஆனை அரவம் மறையாளன் பெற்ற மைந்தன் " என்றருளிச் செய்ததொரு கோவையைக் காணும்போது நிர்விசேஷமாக அருள்செய்யுமிடம் ஸம்ப்ரதிபந்நமாமே.

522. மேகமானது சில காலங்களிலே கர்ஜித்துப் போய் விடும், பெய்யாது ; பெய்யுங்காலத்திலே ஆடம்பரமின்றிக்கே சொரிந்திடும். * கர்ஜதி சரதி ந வர்ஷதி வர்ஷதி வர்ஷாஸு நிஸ்ஸ்வநோ மேக: * என்றான் பண்டிதராஜன். எம்பெருமான் குசேலனுக்கு அருள்செய்தபடி இங்ஙனமேயாம்.

523. மேகமானது விராடபர்வ காலக்ஷேபத்திற்கு வந்து நிற்கும். [விராட பருவம் பாராயணம் செய்தால் மழை பெய்யுமென்பது ப்ரஸித்தமன்றோ]. எம்பெருமான் பகவத் விஷய காலக்ஷேபங்களிலே வந்து நிற்பன். மணவாளமாமுனிகளின் ஈடு காலக்ஷேபகோஷ்டியிலே *ஸ்ரீசைலேச தயாபாத்ரமென்று

கர்ஜித்துக்கொண்டு வந்ததன்றோ * ஸ்ரீரங்கதாமநி தயாரஸ நிர்ப்பரஃ சீதலகாளமேகஃ *.

524. மேகமானது சுக்திகளிற் பெய்து முத்தாக்கும். * அடியார்க்கு இன்பமாரியாகிய எம்பெருமானுடைய கடாக்ஷ தாரையும் ஆழ்வாராசார்யர்களிடத்தே ப்ரவஹித்து மிக்க பயன் விளைத்தது; முத்தன்ன வாக்குகளைப் பயந்ததன்றோ.

525. மேகமானது * மேகத்தை வேங்கடக்கோன் விடு தூதில் விண்ணப்பம் * இத்யாதிப்படியே தூதுவிடப்பெறும். எம்பெருமான்தானும் * இன்னார் தூதனென நின்றான்; * கோதை வேலைவர்க்காய் மண்ணகலங் கூறிடுவான் தூதனாய் மன்னவனால் சொல்லுண்டான். * பாண்டவ தூதனென்றே அழியாத பேர்பெற்றுத் திருப்பாடகத்தில் விளங்காநின்றானே.

526. மேகமானது மழைபெய்து சிலர்க்குத் தீங்கை விளைக்கும், சிலர்க்கு நன்மைபயக்கும். *த்வயி வர்ஷதி பர்ஜந்ய! ஸர்வே பல்லவிதா த்ருமாஃ, அஸ்மாகமர்க்கவ்ருக்ஷாணாம் பூர்வபத்ரேஷு ஸம்சயஃ * என்றான் ஒரு மஹாகவி. மழைபெய்ய எல்லா மரங்களும் தளிர்க்கும்; எருக்கிலை போல்வன வீழ்ந்தொழியும். ஆகவே மழை சிலர்க்குத் தீங்கு, சிலர்க்கு நன்மை. எம்பெருமான்படியு மப்படியே. * *பரித்ராணாய ஸாதூநாம் விநாசாய ச துஷ்க்ருதாம்* * என்று தானே சோதிவாய்திறந்து பணித்தானே. * கஞ்சன்நாள்கவர் கருமுகிலெந்தாய் * தாயர் மகிழ ஒன்னார்தளர * இத்யாதி ஸ்தலங்களில் நமது தீபிகையுரைகாண்க.

527. மேகமானது, * எத்தனையும் வான்மறந்தகாலத்தும் பைங்கூழ்கள் மைத்தெழுந்த மாமுகிலே பார்த்திருக்கு மென்கிற படியே பயிர்கள் வேறு புகலற்று எதிர்பார்க்கப் பெற்றிருக்கும். எம்பெருமானும் * களைவாய்துன்பம் களையாதொழிவாய் களைகண் மற்றிலேன் * என்று சாதகவ்ருத்திகளான அநந்யகதிகளால் ப்ரதீக்ஷிக்கப்பட்டிருப்பன்.

528. மேகமானது விருப்பமில்லாதவன்று எத்தனை கண்ணநீர் விழவிட்டாலும் வாளாகிடக்கும்; எம்பெருமான் படியுமிதுவே. பரதாழ்வான் * *ஏபிச் ச ஸசிவைஸ் ஸார்த்தம் சிரஸா யாசிதோ மயா, ப்ராதுச் சிஷ்யஸ்ய தாஸஸ்ய ப்ரஸாதம் கர்த்துமர்ஹஸி* * என்று பலருடனே சித்ரகூடகிரிஸரத்திலே போந்து கண்ணநீரை விழவிட்டு வேண்டினவிடத்தும் * *ஸ காமம் அநவாப்யைவ* * என்னும்படியே மநோரதம் நிறைவேறப்பெறுமலே மீண்டு போம்படி யாயிற்றன்றோ.



529. மேகமானது கடலிற்படிந்து அங்கு நின்றும் எழுந்து தோன்றி வர்ஷித்துவிட்டு மீண்டும் கடலிற்புகும்; எம்பெருமானும் அவதாரகந்தமான திருப்பாற்கடலிலே படிந்து * *ஏஷ நாராயணஃ ஸ்ரீமாந் க்ஷீரார்ணவ நிகேதநஃ, நாகபர்யங்க முத்ஸ்ருஜ்ய ஹ்யாகதோ மதுராம் புரீம்* * என்கிறபடியே ஸ்ரீராமக்ருஷ்ணாதி ரூபேண தோன்றிக் கண்காணவந்து க்ருபா ரஸத்தை வர்ஷித்துவிட்டு மீண்டுமங்கே புகுவன். நம்மாழ்வார் பெரியதிருவந்தாதியில் * பின்துரக்குங் காற்றிழந்த சூல்கொண்டல் போந்தும் போய், வன்திரைக்கண் வந்தணைந்தவாய்மைத்தே * என்ற பாசுரத்தினால் இவ்வர்த்தத்தை விளக்கியருளினமை காண்க. இங்கு நமது திவ்யார்த்ததீபிகை அநுபவிக்கத்தக்கது.

530. மேகமானது தான் தோன்றினவாறே மயில்களைச் சிறகுவிரித்து ஆடப்பண்ணும். * கார்முகில்போல் வண்ணன் கண்ணனெம்மானைச் சொல்லிப்பாடி யெழுந்தும் பறந்தும் துள்ளாதார் தம்மால் கருமமென்சொல்லீர் * என்கிற திருவாய்மொழியின்படியே எம்பெருமானைக் கண்டமாத்திரத்திலே தத் பக்ஷபாதிகள் எழுந்தும் பறந்தும் துள்ளுவர்கள். ... *

இங்ஙனேமற்றும்பல உவமைப்பொருத்தங்களுங் கண்டுகொள்க.

---

## கடல்வண்ணன் விசேஷார்த்தம்

531. ஆழ்வார்கள் எம்பெருமானைக் கடல்வண்ணனென்று பலகாலுமழைப்பர்கள். அன்றியும், ஸ்ரீராமபிரான் விபீஷணாழ்வானுடைய வார்த்தையைக் கேட்டு ஸமுத்ரராஜனை நோக்கிச் சரணாகதி பண்ணினானென்பதை வெளியிட்ட வால்மீகி மஹர்ஷியும் கம்பரும் ஸ்ரீராமபிரானையும் ஒரு கடலாகப் பேசினார்கள். "*அஞ்ஜலிம் ப்ராங்முகஃ க்ருத்வா ப்ரதிசிச்யே மஹோததேஃ*" என்பது வால்மீகி முனிவரின் வாக்கு. இதில் *ப்ரதிசிச்யே* என்றதனால், அந்தக் கடலை நோக்கி மற்றொரு கடல் எதிரே பள்ளிகொண்டதுபோலும் என்பதாகக் கருத்து ஏனிக்கின்றதென்று மஹான்கள் வியாக்கியானம் செய்

தார்கள். கம்பரும் * வருணனை வழிவேண்டு படலத்தில் " கருணையங் கடல் கிடந்தனன் கருங்கடல்நோக்கி " என்றூர். திருவாய்மொழியில் 6-9-3 பாசுரத்தின் நம்பிள்ளையீட்டிலும் " ஒரு கடல் ஒரு கடலோடே ஸ்பர்த்தித்துக் கிடந்தாப்போலே யிருக்கை " என்றருளிச் செய்யப்பட்டுள்ளது. வேதாந்த தேசிகனும் ரகுவீரகத்யத்தில் " ப்ரதிசயந பூமிகா பூஷித பயோதி புளிந!" என்றூர், * ப்ரதிசயந பூமிகா * என்ற விதில் * ப்ரதிசிச்யே * என்ற வால்மீகி வாக்கின் பொருளே விவக்ஷிதம். அது கீழே விவரிக்கப்பட்டது. * ப்ரதிஜலதிதோ வேலாசய்யாம் * என்ற பட்டர் ஸ்ரீஸூக்தியும் காண்க. ஆக இப்படிப்பட்ட முன்னோர் மொழிகளுக்குச்சேர எம்பெருமானுக்கும் கடலுக்குமுள்ள ஒற்றுமை நயத்தைப் பலபடியாக விளக்குவோம்.

532. பெரிய திருமொழியில் (2-8-5). " நீண்ட மலைகளும் மாமணியும் மலர்மேல் மங்கையும் சங்கமும் தங்குகின்ற, அலைகடல் போன்றிவர் " என்ற பாசுரத்தில் திருமங்கையாழ்வார்தாமே பகவானுக்கு ஸமுத்ர ஸாம்யத்தை ஒருவாறு அருளிச்செய்தார்.

533. கடலானது மைநாகம் முதலிய மலைகளையுடையது; எம்பெருமான் " ஈரிரண்டு மால் வரைத்தோள் செங்கண் திருமுகத்துச் செல்வத் திருமால் " என்கிறபடியே மலைபோன்ற திருத்தோள்களையுடையவன். " நகுகதிர்வழங்கு தகடுபடு செம்பொன் நவமணி குயின்ற தொடியணியணிந்த ககனவிலிடு நீல வெற்பொத்திருந்தன" என்றூர் பிள்ளைப்பெருமாளையங்காரும்.

534. கடலானது சிறந்த நவமணிகளையுடையது; எம்பெருமான் * குருமாமணிப்பூண் என்கிற கௌஸ்துப மணியையும் *செங்கமலக்கழலில் சிற்றிதழ்போல் விரலில் சேர்திகழாழிகளுங் கிண்கிணியும் அரையில் தங்கிய பொன்வடமும் தாள நன் மாதுளையின் பூவொடு பொன்மணியும் மோதிரமுங் கிறியும் மங்கலவைம்படையுந் தோள்வளையுங் குழையும் மகரமும் வாளிகளும் சுட்டியும்" என்னும்படியானதிவ்யாபரணமணிகளையுமுடையவன்.

535. கடல் லக்ஷ்மீ ப்ரஸூதி க்ருஹமாகையாலே பெரிய பிராட்டியார்க்கு உறைவிடம்; எம்பெருமான் * அகலகில்லேனிறையு மென்று அலர்மேல் மங்கையுறைமார்பன்.



536. கடல், சங்கு தங்குமிடம்; எம்பெருமானும்*வெள்ளைச் சுரிசங்கு ஏந்துமவன். " மத்யமாநசல பேநில ஸிந்து..." இத்யாதி வரதராஜஸ்தவ ஸ்ரீஸூக்தியும், " ஹாரஸ்பாரித பேநம் அம்சுலஹரீமாலர்த்தி முக்தாபல ச்ரேணீ சீகர துர்த்திநம் தத இதோயா வ்கீர்ண ரத்நோத்கரம், ஆவிః கௌஸ்துபலக்ஷ்மி ரங்கவஸதேர் நிஸ்ஸீமபூமாத்புதம் வக்ஷோ மந்தரமத்யமாந ஜலதி ச்லாகம் விலோகே மஹி," என்கிற ஸ்ரீரங்கராஜஸ்தவ ஸ்ரீஸூக்தியும் இங்கு ஸ்மரிக்கத் தகும். நமது வியாக்கியானங்கள் காண்க.

537. கடல் முன்னீர் என்று பெயர் பெற்றிருக்கும்; எல்லாவற்றுக்கும் முன்னே உண்டான நீர் என்பது பொருள். " அப ஏவ ஸஸர்ஜ ஆதௌ " என்று மஹரிஷிகளும் " நன்மைப் புனல்பண்ணி " என்று ஆழ்வார்களுங் கூறினது காண்க. இங்ஙனே கடல் முதன்மை பெற்றிருப்பதுபோல எம்பெருமானும் " முனைவன் மூவுலகாளியப்பன் " என்னும் படியே ஆதிபகவானுயிருப்பன்.

538. கடல் முன்னீர் என்பதல்லாமல் முந்நீர் எனப்படுவதுமுண்டு; [நகரத்தில் வாசி காண்க.] ஆற்றுநீர் ஊற்றுநீர் மழைநீர் என்னப்படுகிற மூன்று வகைப்பட்ட நீரையுடையது கடல் என்றபடி. எம்பெருமானும் நீர்போன்ற கருணரஸம் மூன்றுவகையாக இருக்கப்பெற்றவன்; (1) இயற்கையான இன்னருள், (2) பிறர்படுந் துயரத்தைக்கண்டு தோன்றுகின்ற அருள், (3) பிராட்டியின் புருஷகாரத்தாலே தோற்றுவிக்கப்படுமருள்—என மூவகைப்படும் பகவானது கருணரஸம்.

539. கடல் சிறுமீன் முதலாகத் திமிங்கிலம் வரையிலும், கிளிஞ்சல் முதலாக மணி மாணிக்கம் வரையிலும் அதம உத்தம விபாகமில்லாமல் அனைத்துக்கும் தன்பக்கல் இடங்கொடுத்திருக்கும். எம்பெருமானும் " சிவனொடு பிரமன் வண் திருமடந்தைசேர் திருவாகம் " "ஏறுளுமிறையோனுந் திசைமுகனுந் திருமகளும், கூறுளுந் தனியுடம்பன் " " பச்யாமிதேவாந் தவ தேவ! தேஹே " இத்யாதிப்படியே ஸர்வாபாச்ரயமாயிருப்பன்.

540. கடல் தேவர்களுக்குச் சாவாமருந்தான அமுதத்தைச் சுரந்தளித்தது. எம்பெருமானும் " உண்பது சொல்லில் உலகளந்தான் வாயமுதம் " " தன்னைப் பெற்றேற்குத் தன்

வாயமுதம் தந்து என்னைத் தளிர்ப்பிக்கின்றான்" என்னும்படியே பேரன்புடையார்க்குச் சாவாமருந்தான வாயமுதத்தை யளிப்பன்.

541. கடல் அளவிடமுடியாத ஆழமுடையது "ஸமுத்ர இவ காம்பீர்யே" என்கிறபடியே எம்பெருமானது கம்பீரத் தன்மையும் பாசுரமிட்டுப் பேச வொண்ணாதது, *கொள்ளமாளாவின்பவெள்ளமாகையாலே இதிலே யிழிவார்க்கு உள்ளாழம் காண்பரிது.

542. கடல் தன்பக்கலுள்ளதை மேகங்களுக்குக் கொடுப்பதுஞ் செய்யும்: மேகம் பெய்யும் நீரைத் தான் வாங்கிக்கொள்வதுஞ் செய்யும். எம்பெருமானும் "அர்த்திதார்த்த பரிதாந தீக்ஷிதம்" "ஸகல பலப்ரதோ ஹி விஷ்ணு:" என்கிறபடியே கொடுக்கவும் வல்லவன்; "கரோமி யத்யத் ஸகலம் பரஸ்மை நாராயணாயேதி ஸமர்ப்பயாமி" என்று கொடுப்பார் கொடுப்பவற்றைக் கொள்ளவும் வல்லவன். * தத் குருஷ்வ மதர்ப்பணம் * என்றானே கீதையில்.

543. கடல் மழைநீர் தன்னிடத்து விழப்பெற்றாலும் அதனால் ஒரு அதிசயமும் உண்டாகப்பெறாது; "வர்ஷபிந்தோரிவ அப்தௌ ஸம்பந்தாத் ஸ்வாத்மலாபோ ந து கபளநத:" என்கிற பட்டர் ஸ்ரீஸூக்திப்படியே பெய்யும் முகிலுக்கு ஆத்ம லாபமே யத்தனை. எம்பெருமானுக்கு நாம் எவ்வளவு ஸமர்ப்பித்தாலும் அதனால் நாம் க்ருதார்த்தர்களாவது தவிர பகவானுக்குப் புதிதாகச் செல்வநிறைவு ஒன்றுமில்லையாம்.

544. கடல்நீர் நம்போல்வார் வாயில் புகமாட்டாது கசக்கும்; ஆனாலும் "ஆசாந்த ஸிந்தோ: கும்பீஸூநோ:" என்கிறபடியே குறு முனிவனுக்கு உணவாயிற்று; எம்பெருமானும் "தோன்றல் வாளரக்கன் கெடத் தோன்றிய நஞ்சினை" என்கிறபடியே ஆஸுர ப்ரக்ருதிகளுக்கு விஷமாயிருந்தாலும் சுவையறிவார்க்கு "அமுதிலுமாற்ற வினியன்" "எனக்குத் தேனே பாலே கன்னலேயமுதே திருமாலிருஞ்சோலைக் கோனே யாகி" என்னும்படி பரமபோக்யனானவன்.

545. கடல் அஞ்சினார்க்குப் புகலிடமாயிருக்கும்; இந்திரனிடத்து அஞ்சின மைநாககிரி முதலியவற்றிற்குப் புகலிடமாயிருந்ததே. எம்பெருமானுக்கு இத்தன்மை ஸ்வபாவ ஸித்தம். "அஞ்சினேற்கு அஞ்சலென்று காவிபோல் வண்ணர்



வந்து என் கண்ணுள்ளே தோன்றினாரே" "ஆர்த்த த்ராண பராயணஸ் ஸ பகவாந் நாராயணோ மே கதி:" இத்யாதிகாண்க.

546. கடல்நீர் மாமுகிலின் வாய்வழியாக வந்தாலன்றி ஆர்க்கும் உபஜீவிக்க வொண்ணாது; எம்பெருமானும் ஆழ்வாராசார்யர்களின் திருவாய் வழியாக வந்தாலன்றி உபஜீவிக்கலாகான். (இவ்விடத்தில் "லக்ஷ்மீநாதாக்க்ய ஸிந்தௌ சடரிபு ஜலத: ப்ராப்ய காருண்ய நீரம் நாதாத்ரௌ அப்யஷிஞ்சத்" என்கிற ச்லோகத்தின் விரிவான பொருளும் "மேகம் பருகின ஸமுத்ராம்பு போலே நூற்கடற் சொல் இவர்வாயனவாய்த் திருந்தினவாறே ஸர்வதா ஸர்வோபஜீவ்யமாமே" என்கிற ஆசார்யஹ்ருதய திவ்யஸூக்தியின் சீரிய பொருளும் அநுஸந்தேயம்.

547. கடல் பெரும்பாலும் குளிர்ச்சி மிக்கிருக்கச் செய்தேயும் ஒரு புறத்தில் பாடபாக்நி பொங்கநிற்கும். எம்பெருமானும் தண்ணளியே வடிவாயிருக்கச்செய்தேயும் "நீரிலே நெருப்புக்கிளருமா போலே குளிர்ந்த திருவுள்ளத்திலே அபராதத்தாலே சீற்றம் பிறக்க" வெவ்வியனாயிருப்பது முண்டிறே.

548. கடல் சந்திரனைக் கண்டால் பொங்கிக்கிளரும்; எம்பெருமானும் ஞானிகளைக் கண்டால் "தோள்களாயிரத்தாய் முடிகளாயிரத்தாய்" என்னும்படியே சதசாகமாகப் பணைப்பன்.

549. நாமெல்லாரும் கடலின் கரையிலே நிற்கவேண்டுமே யல்லது உள்ளே புகமுடியாது; நிலவர்களே உட்புகுந்து ரத்னங்களைத் திரட்டிக் கொணர்வர்கள். அதுபோலே பகவத் விஷயத்திலே நாமெல்லாம் மேலெழநிற்க, நம்பிள்ளை போலும் மஹாசாரியர்களே ஆழ அவகாஹித்து வேதார்த்த நிதிகளை வாரிக்கொணர்ந்து கொடுப்பர்கள்.

550. கடல் விஷத்தையும் தந்தது, அமுதத்தையுமளித்தது. எம்பெருமானும் * பயக்ருத் பயநாசந: * என்கிறபடியே பயத்தையும் விளைவிப்பன், பயநாசமும் பண்ணித்தருவன், "நல்குரவுஞ் செல்வும் நரகும் சுவர்க்கமுமாய், வெல்பகையும் நட்பும் விடமும் அமுதமுமாய்" என்றார் நம்மாழ்வாரும். "பவ மோக்ஷணயோஸ் த்வயைவ ஜந்து: க்ரியதே ரங்கநிதே!" என்றார் பட்டரும் ஸ்ரீரங்கராஜஸ்தவத்தில்.

551. கடல் எத்தனை தடவை பார்க்கப்பட்டாலும் த்ருப்தி தரமாட்டாது ; காணுந்தோறும் அபூர்வதர்சநமாகவே யிருக்கும். எம்பெருமான்படியு மப்படியே ; "எப்பொழுதும் நாள் திங்கள் ஆண்டூழியூழி தொறும், அப்பொழுதைக் கப்பொழுதென்னாரா வமுதமே" அன்றோ.

552. கடலுக்கு ஒரு பக்கத்தில் வரவுகளும் ஒரு பக்கத்தில் செலவுகளுமாயிருக்கும் ; [பலநதிகள் வந்து சேர்வது வரவு; மேகம் நீர் முகந்துகொண்டு போவது செலவு.] எம்பெருமானுக்கும் அர்ச்சாவதாரங்களில் இங்ஙனேயாயிருக்கும். திருவேங்கடமுடையான் ஸந்நிதி போன்ற ஆலயங்களில் உண்டியில் வரவுமுண்டு ; பலவகைச் செலவுமுண்டு.

553. கடல்வழியே போவார்க்குப் பெருஞ் செல்வம் கிடைக்கும்; "திரைகடலோடியும் திரவியம் தேடு" என்றார்கள்; அநுபவத்திலும் இது காணா நின்றோம்; இவ்வண்ணமே எம்பெருமான் வழியே போவார்க்கும் மஹார்த்தங்கள் கிடைக்கும்; "நின்னையே தான்வேண்டி நீள்செல்வம் வேண்டாதான் தன்னையேதான் வேண்டும் செல்வம்" என்றார் குலசேகரப் பெருமாள்.

554. "அப்திர் லங்கித ஏவ வாநரபடை: கிந்து அஸ்ய கம்பீரதாம் ஆபாதாள நிமக்ந பீவரதநுர் ஜாநாதி மந்தாசல:" (முராரி) என்கிறபடியே வாநர வீரர்கள் கடலைக் கடந்துவிட்டாலும் அவர்களுக்கு உள்ளாழம் தெரியாது ; அடிவரையில் அழுந்தின மந்தரகிரிக்கே அந்த ஆழம் தெரியும்; அதுபோலவே எம்பெருமான் விஷயத்தில் நாமெல்லாம் கவிகள் இயற்றித் துதி செய்து விட்டாலும் அவன்படிகளை நாம் சிறிதுமறியோம் ; ஆழ்வார்கள் என்று திருநாமம் பெற்று அவ்விஷயத்தில் ஆழ மூழ்கியிருக்கும் மஹான்களே ஆழமறிவார்கள். "பாலிற் கிடந்ததுவும் பண்டரங்கமேயதுவும், ஆலில் துயின்றதுவும் ஆரறிவார்—ஞாலத்தொரு பொருளை வானவர்தம் மெய்ப்பொருளை. அப்பிலரு பொருளை யானறிந்த வாறு." என்று துணிந்து அருளிச்செய்தார் திருமழிசைப்பிரான்.

555. கடல் கலங்காது, கலங்கினாலும் ஒரு நொடிப்பொழுதில் தானே தெளிவு பெறும் ; தண்ணளியே வடிவெடுத்த எம்பெருமானும் சீற்றங்கொள்ள மாட்டான்; ஔபாதிகமாகச் சீறினாலும் அடுத்த க்ஷணத்திலே அநுக்ரஹம் பொங்கி நிற்பன் ;



"மா வாலிபதமந்வகா:" என்னும்படி ஸுக்ரீவ மஹாராஜர் பக்கலிலும் "ஸாகரம் சோஷயிஷ்யாமி" என்னும்படி ஸமுத்ர ராஜன் பக்கலிலும் அளவுகடந்து சீறிச்சிவந்த இராமபிரான் அடுத்த க்ஷணத்திலே அருள்பொலிய நின்றமை காண்க. காகாஸுரன் போல்வார் திறத்திலுமிது காணத்தகும்.

556. கடல் அபரிச்சேத்யமாயினும் குறுமுனிவனுடைய கையிலே ஆசமநத்திற்குப்போதும்படி அடங்கிநின்றது. "வாசோ நிவர்த்தந்தே அப்ராப்ய மநஸா ஸஹ" என்னும்படி வேத வேதாந்தங்களுக்கும் அபரிச்சேத்யமான பகவத் விஷயம் ஆழ்வார்களுக்குப் பரிச்சேத்யமாயிற்று. "நண்ணாவசுரர் நலிவெய்த நல்லவமரர் பொலிவெய்த, எண்ணாதனகளெண்ணும் நன்முனிவர் இன்பந்தலைச் சிறப்பப், பண்ணார் பாடலின்கவிகள் யானாய்த் தன்னைத் தான்பாடி." (10—7—5) என்ற திருவாய்மொழிப் பாசுரத்தின் இரண்டாமடிக்கு நம்பிள்ளையீடு ஸேவிக்க. நன்முனிவர்கள் எண்ணாதனக ளெண்ணும்படியாக ஆழ்வார் திருவாய்மொழி பாடினாராம். எண்ணாதனக ளெண்ணுதலாவது என்ன ? என்னில் ; "எம்பெருமானுடைய ஸ்வரூப ரூபகுண விபூதிகளை விரிவாகவும் அழகாகவும் எடுத்துரைக்க ஒரு புஸ்தகமும் அவதரிக்கவில்லையே, ஆனந்தகுண மொன்றைப் பேசப் புகுந்த உபநிஷத்தும் "யதோ வாசோ நிவர்த்தந்தே" என்னும்படி மீண்டதே; அப்படியல்லாமல் பகவத் விபூதிகளை விரிவாகப் பேச ஒரு க்ரந்தம் அவதரிக்கவேணும்" என்று முனிவர்கள் (திருவாய்மொழி அவதரிப்பதற்கு முன்னே) எண்ணினார்களாம்; அப்படிப்பட்டவர்களே திருவாய்மொழி அவதரித்தபின்பு என்ன எண்ணினார்களென்றால், ஐயோ ! எம்பெருமானுக்கு இன்னமுஞ் சில குணங்களும் இன்னஞ் சில விபூதிகளும் இன்னஞ் சில அவதாரங்களும் இன்னஞ் சில சேஷ்டிதங்களும் இல்லாமற் போயினவே! என வருந்தினார்களாம். இதன் கருத்தென்ன? எம்பெருமானுக்குள்ள ஸ்வரூப ரூப குணவிபூதி அவதார சேஷ்டிதங்களடங்கலும் ஆழ்வாரருளிச் செயலில் அடங்கிவிட்டன வென்பதாம்.

557. கடலானது புல் துரும்பு முதலானவற்றை அலைமேலலைமோதி வெளியிலே தள்ளிவிடும் ; மகரம் முதலானவற்றை அங்ஙனம் தள்ளாது உள்ளே கொண்டிருக்கும். இதற்குக் காரணமென்ன? ஸம்பந்தஜ்ஞான மில்லாதாரைத் தள்ளிவிடும்; ஸம்பந்தஜ்ஞான முடையாரை அங்கீகரித்திருக்கும். எம்பெருமான்

படியு மிதுவேயாம்; '' அடங்கெழில் சம்பத்து அடங்கக்கண்டு, ஈசனடங்கெழில:.தென்றடங்குகவுள்ளே '' (1—2—5) என்ற திருவாய்மொழிப்பாசுரத்தின் நம்பிள்ளை யீட்டில் விளக்கமாக வுள்ள விஷயமிது.

558. கடல் கடக்க அரிதாயினும் நாவாயினுல் எளிதாகக் கடக்கலாகும்; *''பாதாம்போஜே வரத! பவதோ பக்தி நாவம் ப்ரயச்ச''* (முகுந்தமாலை) என்கிறபடியே பக்தியாகிற நாவாயைப் பெற்ருல் எம்பெருமாஞகிற கடலையும் எளிதாகக் கடந்துவிடலாம். * பத்துடை யடியவர்க்கு எளியவன். *

559. கடலருகேயிருந்தாலும் விடாய் தீர்த்துக்கொள்ள வேறொரு நீர்நிலை தேட்டமாகும். சாஸ்த்ரங்களால் எம்பெருமானை எவ்வளவு அநுபவித்தாலும் அர்ச்சையிலிழிந்தாலன்றி ஆர்த்திசாந்தி யில்லையிறே.

560. எவ்வளவு காரிய நிர்ப்பந்தங்களிருந்தாலும் பெருஞ்செல்வர்கள் சிறிதுபோதாவது கடற்கரை சாராதிரார்கள்; அதுபோலவே பல காரியங்களையும் சுருக்கிக்கொண்டு தினப்படி ஒரு நாழிகைப் பொழுதாவது பகவத் கதையில் அந்வயியாதிரார்கள்.

ஆக இந்த இருபத்தைந்து அர்த்த விசேஷங்கள் தவிர, '' கடலில் அலை ஓயாது, எம்பெருமானுக்கும் * அலம்புரிந்த நெடுந் தடக்கை ஓயாது.'' '' கடல் கோஷித்துக்கொண்டே யிருக்கும், எம்பெருமானும் *ஏதத் வ்ரதம் மம * மோக்ஷயிஷ்யாமி மா சுச: * ந மே மோகம் வசோ பவேத் * இத்யாதிகளைச் சொல்லி கோஷித்துக் கொண்டேயிருப்பன்.'' '' கடல் ஒரு நாளும் வற்ருது, எம்பெருமானுக்கும் ஒருநாளும் நாஸ்தித்வ முண்டாகாது'' '' கடல் ஏறுவதும் வடிவதுமாயிருக்கும், எம் பெருமானும் ஸேவை ஸாதிப்பதும் மறைவதுமாயிருப்பன்'' என்றிப்படிப்பட்ட துணுக்கை யர்த்தங்களும் பல காணத்தகும்.

---

## நீர்வண்ணன் விசேஷார்த்தம்

எம்பெருமான் திருநீர்மலையிலே நீர்வண்ணனென்று திருநாமம்பெற்றிருப்பது ப்ரஸித்தம். நீர்க்கும் எம்பெருமானுக்கும் ஸ்வபாவ ஸாம்யம் பல படிகளாலுண்டு.

561. நீர் பள்ளத்தில் தானே பாயும், மேட்டில் ஏறுவது அருமை, எம்பெருமானும் ஜாதி முதலியவற்ருல் குறைந்தாரிடத்தே எளிதாகச் செல்லுவன்; உயர்ந்தோமென்று மார்பு நெறித்திருப்பாரிடத்தே செல்ல விரும்பான். பாண்டவர்கட்காகத் தூது எழுந்தருளும்போது, ஞானத்தால் சிறந்தோமென்றிருக்கும் பீஷ்மாசாரியரையும், குலத்தால் சிறந்தோமென்றிருக்கும் த்ரோணுசாரியரையும், செல்வத்தால் சிறந்தோமென்றிருக்கும் துரியோதனனையும் ஒரு பொருளாக மதியாதே இவையெல்லாவற்ருலும் தாழ்ந்தவராகத் தம்மை நினைத்திருந்த ஸ்ரீவிதுரருடைய திருமாளிகையிலே தாஞகவேசென்று *முன்னமே துயின்றருளிய முதுபயோததியோ, பன்னகாதிபப்பாயலோ, பச்சையாலிலையோ, சொன்ன நால்வகைச் சுருதியோ? கருதி நீ யெய்தற்கு, என்ன மாதவஞ்செய்ததிச் சிறுகுடி லென்ருன்* [வில்லிபாரதம்] என்று அவர் உள்குழையுமாறு இருந்து அமுதுசெய்தருளிஞனிறே கண்ணபிரான்; ஆகவே, பள்ளத்தேயோடிப் பெருங்குழியிலே தங்குமியல்வு நீர்க்கும் எம்பெருமானுக்கும் ஒக்கும்.



562. நீர் இல்லாமல் ஒரு காரியமும் ஆகாது; அப்படியே எம்பெருமானின்றி ஒரு காரியமுமாகாது. ''லோகோ பிந்நருசி:'' என்கிறபடியே ஒருவன் விரும்பினதை மற்றொருவன் விரும்பாதபடி உலகம் வெவ்வேறு விருப்பத்தையுடையதாயினும் எல்லாரும் நீரை விரும்பியேயாகவேண்டும்; அதுபோலவே உபாயாந்தர நிஷ்டர்களும் எம்பெருமானை விரும்பியேயாகவேண்டும்.

563. நீர்க்குக் குளிர்ச்சி இயற்கை; சூடு வந்தேறி; எம்பெருமானுக்கும் தண்ணளி இயற்கையாய்ச் சீற்றம் வந்தேறியாயிருக்கும். '' நீரிலே நெருப்புக் கிளருமாபோலே குளிர்ந்த திருவுள்ளததிலே அபராதத்தாலே சீற்றம் பிறந்தால்'' என்ற முமுக்ஷுப்படி திவ்யஸூக்தி காண்க.

564. நீர் சுட்டாலும் அதை ஆற்றுவதற்கு நீரேவேணும்; எம்பெருமான் சீறிஞலும் அவன்ருனே தெளிவுபெறவேணும். '' தருதுயரந் தடாயேல் உன் சரணல்லால் சரணில்லை '' என்ருர் குலசேகரப் பெருமாள்; '' நிராஸகஸ்யாபி ந தாவதுத்ஸஹே மஹேச! ஹாதும் தவ பாதபங்கஜம் '' என்ருர் ஆளவந்தாரும்.

565. நீர் நம் இஷ்டப்படி தேக்கிவைக்கவும் ஓடவிடவும் உரியதாயிருக்கும். எம்பெருமான்படியுமப்படியே; '' ஸ்வோச்சிஷ்டாயாம் ஸ்ரஜி நிகலிதம் யா பலாத்க்ருத்ய புங்க்தே கோதா'' என்கிறபடியே ஆண்டாள் தான் சூடிக்களைந்த மாலையிலே விலங்

கிட்டு வைத்துப் புஜிக்க நின்றானெம்பெருமான். பாண்டவர்கட்காகக் கழுத்திலே ஓலைகட்டித் தூதுபோகவிடப்பெற்றான்.

566. நீரானது மற்ற பண்டங்களைச் சமைப்பதற்குக் கருவியாயிருக்கும்; தனிப்படத் தானே குடிக்கத்தக்கதுமாயிருக்கும். எம்பெருமானுக்கும் உபாயத்வம் உபேயத்வம் என்ற இரண்டு ஆகாரங்களுண்டிறே. எம்பெருமானைக்கொண்டு வேறு சிறு பலன்களைப் பெற விரும்புவாரும் எம்பெருமான்றன்னையே ஸ்வயம் புருஷார்த்தமாகக் கொள்வாருமுள்ளமை காண்க.

567. அன்னம் முதலானவை தமக்குப் பிரதிநிதிகளை ஸஹிக்கும்; அதாவது, காய் கனி கிழங்கு வேர் பால் முதலியவற்றால் தேஹதாரணம் பண்ணலாம்; நீரானது அப்படி பிரதிநிதியொன்றையும் ஸஹிக்கமாட்டாது; நீர்க்கு நீரே வேணும்; அப்படியே எம்பெருமானுக்கும் பிரதிநிதி கிடையாது; குணாநுஸந்தானத்தாலும் போது போக்கவரிது; ''ஒருநாள் காணவாராயே'' ''அடியேன் தொழவந்தருளே'' என்று பிரார்த்தித்துப் பெற்றே தீர வேண்டும். உணவுப பொருள்களில் அரிசிக்கு பதிலாக கோதுமையோ பாலோ மற்றும் எந்தப்பொருளோ அவரவர்களின் ருசிக்கு ஏற்றபடி வைத்துக்கொள்ளப்படுவதுண்டு. ஆனாலும் நீருக்குப்பதிலாக வேறெதுவும் வைத்துக்கொள்ளப்படுவதில்லை; நீர் ஒருவராலும் விடமுடியாதது. அதுபோல கர்மஜ்ஞாநபக்தி ப்ரபத்தி முதலியவற்றில் எதைவிட்டு எதைப்பற்றினாலும் எம்பெருமான் ஒருபடியாலும் விடத்தகாதவன் என்றதாயிற்று.

568. சோறு உண்ணும்போது நீர் இல்லாமல் முடியாது; அப்படி நீர் வேறொன்றை அபேக்ஷிப்பதன்று. எம்பெருமான்படியுமப்படியே; உபாயாந்தரங்களுக்கு எம்பெருமான் வேணும்; எம்பெருமான் இதர நிரபேக்ஷன். ''உன்னாலல்லால் யாவராலுமொன்றுங் குறைவேண்டேன்'' என்றாரே நம்மாழ்வார்.

569. கொள்ளும் பாத்திரங்களின் தாரதம்மியமேயன்றி நீர் தான் குறைய நில்லாது; எங்கும் நிரம்பவற்று; எம்பெருமானும் *கொள்ளக் குறைவிலன் வேண்டிற்றெல்லாந் தருங்கோதில் வள்ளல். கொள்வார் குறையேயத்தனை; ஐச்வர்யமே போதுமென்பாரும் கைவல்யமே போதுமென்பாருமாகக் குறையக் கொள்வாருடைய குற்றமே.

570. நீர் ஐவகைப்பட்டிருத்தல்போல எம்பெருமானும் ஐவகைப்பட்டிருப்பன்; எங்ஙனேயென்னில்; (1) பூமிக்குள்ளே



பதிந்து கிடக்கின்ற நீர், (2) ஆவரண ஜலம், (3) பாற்கடல் நீர், (4) பெருக்காற்று நீர், (5) தடாகங்களில் தேங்கும் நீர்—என ஜலம் ஐவகைப்படும். (1) விடாய்த்தவனுக்கு வேறோரிடம் தேடிப் போக வேண்டாதபடி நிற்கிறவிடத்திலேயே உண்டாயிருக்கச் செய்தேயும் கொட்டும் குந்தாலியுங்கொண்டு கல்லினாலல்லது குடிக்கக்கிடையாத பூமிக்குள் பதிந்த நீர்போலேயாய்த்து அந்தர்யாமித்வம்; கண்டு பற்றவேணுமென்று ஆசைப்பட்டவனுக்கு ஹ்ருதயத்திலேயிருக்கச் செய்தேயும் கண்ணுக்கு விஷயமன்றிக்கே அஷ்டாங்கயோகமாகிற யத்நத்தாலே காணவேண்டும்படி யானதிறே இது. (2) விடாய்த்தவனுக்கு, அண்டத்துக்கு வெளியே பெருகிக்கிடக்கிற ஆவரண ஜலம்போலேயாயிற்று—கண்டு பற்றவேணுமென்றிருக்கிறவனுக்கு லீலாவிபூதிக்கு அப்பாற்பட்டிருக்கிற பரத்வம். (3) அப்படி அதிதூரஸ்தமன்றியே அண்டத்துக்கு உட்பட்டிருக்கச்செய்தேயும் விடாய்த்தவனுக்குக் கிட்டவரிதான பாற்கடல் போலேயாயிற்று சென்று காணவரிதாம்படியிருக்கிற வ்யூஹம். (4) ஸமீபஸ்தமாயிருந்தும் தத்காலத்திலிருந்தவர்களுக்கு மாத்திரம் உபயோக யோக்யமாய்ப் பிற்பட்டவனுக்கு அரிதான பெருக்காறுபோலேயாயிற்று—ராமக்ருஷ்ணாதி அவதாரங்களான விபவம்; பூமியிலே அவதரித்து ஸஞ்சரித்தும் தத்காலத்திலிருந்தவர்களுக்கே ஆச்ரயணீயமாய்ப் பிற்காலத்திலுள்ளவர்களுக்குக் கிட்டாதபடியாயிருப்பதிறே இது. (5) விடாய்த்தவனுக்கு விடாய்தீரப் பருகலாம்படி பெருக்காற்றிலே தேங்கின மடுக்கள் போலேயாயிற்று கோயில்களிலும் க்ருஹங்களிலும் எங்குமொக்க எல்லார்க்கும் கண்ணுக்கு இலக்காம்படி நிற்கிற அர்ச்சாவதாரம்.

571. நீரானது ஸ்வத: பரிசுத்தமாயினும் ஆச்ரயவசத்தாலே த்யாஜ்யமும் உபாதேயமுமாகிறது; அப்படியே தேவதாந்தரங்களில் அந்தர்யாமியான எம்பெருமான் த்யாஜ்யனாகவும் *கூராராழி வெண்சங்கேந்தின எம்பெருமான் உபாதேயனாகவும் உள்ளமை காண்க.

572. தோண்டத் தோண்டச் சுரக்கும் நீர்; எம்பெருமானும் *கொள்ளமாளா வின்பவெள்ளமாய்ப் பேசப்பேச வளர்ந்திடுவன். *செலக் காண்கிற்பார் காணுமளவும் செல்லுங் கீர்த்தியாய்* என்றாரே நம்மாழ்வார்.

573. நீர் தனக்கொரு ப்ரயோஜனமின்றியே பரார்த்த மாகவே யிருக்கும்; "நதே ரூபம் நசாகாரோ நாயுதானி நசாஸ்பதம், ததாபி புருஷாகாரோ பக்தாநாம் த்வம் ப்ரகாசஸே" "பரிஜந பரிபர்ஹா பூஷணுந்யாயுதானி ப்ரவரகுணகணுச்ச ஜ்ஞாந சக்த்யாதயஸ்தே, பரமபத மதாண்டாந்யாத்ம தேஹஸ் ததாத்மா வரத! ஸகலமேதத் ஸம்ச்ரிதார்த்தம் சகர்த்த" என்கிறபடியே எம்பெருமானுடைய ஆத்மாத்மீயங்களெல்லாம் ஆச்ரிதர்க்காகவே யிருக்கும்.

574. நீர் தானே பெய்யவேணுமேயன்றி ஒருவரால் வடிம்பிட்டுப் பெய்விக்க முடியாதது; எம்பெருமான்படியுமிப்படியே; "நாஸௌ புருஷகாரேண நசாப்யந்யேந ஹேதுநா, கேவலம் ஸ்வேச்சயைவாஹம் ப்ரேக்ஷே கஞ்சித் கதாசந" என்றுனிறே.

575. நீர் கடலிலிருந்து காளமேகம்வழியாக வந்தாலன்றி உபஜீவிக்கவுரியதாகாது; எம்பெருமானும் சாஸ்திரங்களிலிருந்து ஆசாரியர்முகமாக வந்தே உபஜீவ்யனுகிருன். "மேகம் பருகின ஸமுத்ராம்பு போலே நூற்கடற்சொல் இவர் வாயனவாய்த் திருந்தினவாறே ஸர்வதா ஸர்வோபஜீவ்யமாமே." என்ற ஆசார்யஹ்ருதய ஸூக்தியுங்காண்க.

576. சிறியார் பெரியாரென்கிற விபாகமின்றியே அனைவரும் ஓர் துறையிலேபடிந்து குடைந்தாடலாம்படி யிருக்கும் நீர்; எம்பெருமானும் "நிகரிலமரர் முனிக்கணங்கள் விரும்பும் திருவேங்கடத்தானே!" என்றும் "கானமும் வானரமும் வேடுமுடை வேங்கடம்" என்றும் சொல்லுகிறபடியே பெரியார் சிறியார் என்னும் வாசியற ஒக்க ஆச்ரயிக்கலாம்படி யிருப்பன்.

577. நீர் சிறிது த்வாரம் கிடைத்தாலும் உட்புகுந்துவிடும்; எம்பெருமானுக்கும் சிறிது வியாஜமே போதும்; "திருமாலிருஞ்சோலைமலை யென்றேனென்னத், திருமால்வந்தென் னெஞ்சு நிறையப் புகுந்தான்" இத்யாதி காண்க. ஸ்ரீவசன பூஷணத்தில் "என்னூரைச் சொன்னுய் என்பேரைச் சொன்னுய்" இத்யாதி ஸ்ரீஸூக்திகளும் காண்க.

578. தீர்த்தவிசேஷங்களிலே நீருக்கு மாஹாத்மியம் அதிகம்; எம்பெருமானுக்கும் கோயில் திருமலை பெருமாள் கோயில் முதலான திருப்பதிகளிலே சிறப்புப்பொலியும்.

579. தாபம் மிக்கவர்கள் நீரை முகத்திலேயெறட்டுவது முதுகில் கொட்டுவது உள்ளில் இழிச்சுவது, படிந்து குடைந்தாடுவதுபோல் "வாக்கினுல் கருமம் தன்னுல் மனத்தினுல் சிரத்தை தன்னுல் வேட்கைமீதூரவாங்கி விழுங்குவர்கள் எம்பெருமானையும்.



580. நீர் வேண்டியவன் துளி நாக்குநனைக்கக் கிடைத்தால் போதுமென்பன்; "கூராராழி வெண்சங்கேந்திக் கொடியேன்பால் வாராய் ஒருநாள் மண்ணும் விண்ணும் மகிழவே" என்பர் எம்பெருமானை நோக்கி. "ஒரு நாள் காணவாராயே."

581. நீரில் சிறியகல்லும் அமிழும்; பெரிய தெப்பமரமும் மிதக்கும்; எம்பெருமான் பக்கலிலும் ப்ரஹ்மாவாய் இழந்து போதல் இடைச்சியாய்ப் பெற்று விடுதல் செய்யக் காணுநின்ரேம். "நேரே கடிக்கமலத்துள்ளிருந்துங் காண்கிலான், கண்ணனடிக்கமலந்தன்னை யயன்,"——"மருவுநின் திருநெற்றியில் சுட்டியசைதர மணிவாயிடை முத்தந்தருதலும், உன்றன் தாதையைப்போலும் வடிவுகண்டுகொண்டுள்ளமுள்குளிர விரலைச் செஞ்சிறுவாயிடைச் சேர்த்து வெகுளியாய் நின்றுரைக்கு மவ்வுரையும் திருவிலேனென்றும் பெற்றிலேன் எல்லாம் தெய்வ நங்கை யசோதை பெற்ருளே." என்பன அடைவே ப்ரமாணம். பகவத் குணங்களில் சிறுமாமனிசர் அமிழ்தலும் *ஊன்மல்கிமோடு பருப்பார் வாய்க்கரையில் நிற்றலுங்கொள்க.

582. "துப்பார்க்குத் துப்பாய துப்பாக்கித் துப்பார்க்குத், துப்பாயதூஉம் மழை" (திருக்குறள்) என்கிறபடியே அன்னத்தின் அபிவிருத்திக்கு ஹேதுவாகையாலே போகஸாதனமாயும், விடாய்தீரப் பருகுகையாலே ஸ்வயம் போக்யமாயுமிருக்கும் நீர்; "உபாயோபேயத்வே ததிஹ தவ தத்வம்" என்கிறபடியே ப்ராபகனுயும் ப்ராப்யனுயுமிறே எம்பெருமானிருப்பது. இங்ஙனே மற்றுங்காண்க. ... ... ... ... (*)

## களிறு விசேஷார்த்தம்.

583. எம்பெருமானை ஆழ்வார்கள் பல விடங்களிலும் யானையாகப்பேசி யநுபவிக்கிருர்கள். *தென்னுனுய் வடவானுய் குடபாலானுய் குணபால மதயானுய்* என்றும், *என்னானை யென்னப்ப னெம்பெருமான்* என்றும் *சோலை மழகளிறே* என்றும் பலபல அருளிச்செயல்களுள்ளன. *குஞ்ஜரம் வா அத்ரி குஞ்ஜே* என்றுர் பட்டரும். யானைக்கும் எம்பெருமானுக்கும் பலபடிகளாலே ஸாம்யமுண்டு;—

584. யானை, எத்தனை தடவை பார்த்தாலும் பார்க்கும்போதெல்லாம் அபூர்வவஸ்து போலவேயிருந்து பரமாநந்தம் பயக்கும்; எம்பெருமானும் "எப்பொழுதும் நாள் திங்களாண்டூழி யூழி தொறும், அப்பொழுதைக் கப்பொழுதென்னாராவமுதமே" என்னும்படியிருப்பவன். * பண்டிவரைக் கண்டறிவதெவ்வூரில் * என்ற விடத்து வியாக்கியானம் காண்க.

585. ஆனையின்மீது ஏறவேண்டியவன் ஆனையின் காலைப் பற்றியே ஏறவேண்டும்; எம்பெருமானிடஞ் சென்று சேரவேண்டியவர்களும் அவனது திருவடியையே பற்றிச் சேரவேண்டும். *உன்னடிக்கீழமர்ந்து புகுந்தேனே* சரணௌ சரணம் ப்ரபத்யே.

586. ஆனை தன்னைக்கட்டத் தானே கயிறு எடுத்துக் கொடுக்கும்; "எட்டினோடிரண்டெனுங் கயிற்றினால்" (திருச்சந்தவிருத்தம்) என்கிறபடியே எம்பெருமானைக் கட்டுப்படுத்தும் பக்தியாகிற கயிற்றை அவன்றானே தந்தருள்வன். "பகவந் பக்திமபி ப்ரயச்ச மே" "மதிநலமருளினன்."

587. யானையை நீராட்டினாலும் அடுத்த க்ஷணத்திலே அழுக்கோடே சேரும்; எம்பெருமான் சுத்த ஸத்வமயனாய்ப் பரம பவித்திரனாயிருக்கச்செய்தேயும் *பொய்ந்நின்றஞானமும் பொல்லாவொழுக்குமழுக்குடம்பு முடைய நம்போல்வாரோடே சேரத் திருவுள்ளமாயிருப்பன் வாத்ஸல்யத்தாலே. "ஸ்வம் ஸம்ஸ்க்ருத த்ராவிடவேத ஸூக்தைர் பாந்தம் மதுக்தைர் மலிநீகரோதி, ஸ்ரீரங்க கம்ர: கலபம் க ஏவ ஸ்நாத்வாபி தூலீரஸிகம் நிஷேத்தா" என்கிற ஸ்ரீரங்கராஜஸ்தவச்லோகத்தை இங்கு விவரிப்பது.

588. யானையைப் பிடிக்கவேண்டில் பெண்யானையைக் கொண்டே பிடிக்கவேண்டும்; பிராட்டியின் புருஷகாரமின்றி எம்பெருமான் வசப்படான்.

589. யானை, பாகனுடைய அனுமதியின்றித் தன்பக்கல் வருமவர்களைத் தள்ளிவிடும்; எம்பெருமானும் "வேதம் வல்லார்களைக்கொண்டு விண்ணோர் பெருமான் திருப்பாதம் பணிந்து" என்றபடி பாகவதர்களை முன்னிட்டுப் புகாதாரை அங்கீகரித்தருளான்.

590. யானையின் பாஷை யானைப்பாகனுக்கே தெரியும்; எம்பெருமானுடைய பாஷை திருக்கச்சிநம்பி போல்வார்க்கே தெரியும். பேரருளாளப் பெருமாளோடே பேசுமவரிறே நம்பிகள். "ஸ்ரீகாஞ்சீபூர்ணமிச்ரேண ப்ரீத்யா ஸர்வாபிபாஷிணே."



591. யானையினுடைய நிற்றல் இருத்தல் கிடத்தல் திரிதல் முதலிய தொழில்கள் யாவும் பாகனிட்ட வழக்காயிருக்கும்; எம்பெருமானும் "கணிகண்ணன் போகின்றான் காமருபூங்கச்சி மணிவண்ணா நீ கிடக்கவேண்டா—உன்றன் பைந்நாகப்பாய் சுருட்டிக்கொள்" என்றும், "கிடந்தவாறெழுந்திருந்து பேசு" என்றுஞ் சொல்லுகிற திருமழிசைப்பிரான் போல்வார்க்கு ஸர்வாத்மநா விதேயனிறே.

592. யானை உண்ணும்போது இறைக்கும் அரிசி பலகோடி நூறாயிரமெறும்புகளுக்கு உணவாகும்; எம்பெருமானமுது செய்து சேஷித்த ப்ரஸாதத்தாலே பலகோடி பக்தவர்க்கங்கள் உஜ்ஜீவிக்கக் காண்கிறோம்.

593. யானைக்குக் கை நீளம்; எம்பெருமானும் * அலம் புரிந்த நெடுந் தடக்கையனிறே. "நீண்ட அத்தக் கருமுகிலை யெம்மான்றன்னை" (பெரியதிருமொழி 2-5-2) என்றதுங்காண்க.

594. யானை இறந்தபின்பும் உதவும்; எம்பெருமானும் தீர்த்தம் ப்ரஸாதித்துத் தன்னுடைச் சோதிக்கு எழுந்தருளின பின்பும் இதிஹாஸபுராணங்கள் அருளிச்செயல்கள் மூலமாகத் தனது சரிதைகளை உணர்த்தி உதவுகின்றானிறே.

595. யானைக்கு ஒரு கையே உளது; எம்பெருமானுக்கும் கொடுக்குங் கையொழியக் கொள்ளுங் கை இல்லையிறே. "அர்த்திதார்த்த பரிதாந தீக்ஷிதம்"

596. பாகனுக்கு ஜீவனங்கள் ஸம்பாதித்துக் கொடுக்கும் யானை; எம்பெருமானும் அர்ச்சகபரிசாரகர்களுக்கும், தன்னை நிர்வஹிக்கின்ற வித்வான்களுக்கும் ஜீவநோஜ்ஜீவநப்ரதன். "எனக்கே தன்னைத்தந்த கற்பகம்."

இங்ஙனே மற்றும்பல உவமைப்பொருத்தங்களும் கண்டுகொள்க.

---

## பொன்னப்பன் விசேஷார்த்தம்

ஆழ்வார்கள் எம்பெருமானைப் பொன்னாகவும்பேசி யநுபவிக்கின்றார்கள். *பொன்னப்பன் மணியப்பன்* என்றார் நம்மாழ்வார். * பொன்னைமாமணியை * பொன்னானாய் * என்றார் கலியன். * பொருதுவருகின்ற பொன்னே !* என்றார் பெரியாழ்வார்.

597. இங்ஙனம் எம்பெருமானைப் பொன்னாகக் கூறுவதற்கு ஒரு பொருத்தஞ் சொல்லலாம்; அதாவது—"ஹேம்ந:

கேதோ ந தாஹேந ச்சேதேந கஷணேந வா - ஏததேவ மஹத் து:க்கம் யத் குஞ்ஜாஸமதோலநம்.'' என்றார் ஒரு மஹாகவி; பொன்னைத் தீயிலிட்டுச் சுடுகிறோம்; உளியையிட்டு வெட்டுகிறோம்; உரைகல்லிலேயிட்டுக் கனக்கவுரைக்கிறோம்; இன்னமெத்தனை ஹிம்ஸைகள் செய்யினும் அவற்றால் பொன் சிறிதும் வருந்தமாட்டாது; வருத்தமில்லையென்பது மாத்திரமேயன்று; அந்த ஹிம்ஸைகளெல்லாம் தனக்குப் பரமபோக்கியமேயென்பது தோன்ற ஒளியை மிகுத்தும் காட்டும்; பொன்னைத் தீயிலிட்டுச் சுடும்போதும் உளியையிட்டுவெட்டும்போதும் உரைகல்லிலுரைக்கும்போதும் அதற்கு ஒளிமிகுதலைக் காண்கிறோமன்றோ! ஆனால் அந்தப்பொன்னுக்கு ஒருவருத்தம் மாத்திரம் சாலவுண்டாம்;

அஃது என்னென்னில்; ‘மிக அற்பமானதொரு குன்றுமணியோடொக்க நம்மை நிறுப்பதே!’ என்பதே அதற்கு மிக்க வருத்தமாம். ஒரு திராசில் குன்றுமணியையும் மற்றொரு திராசில் பொன்னையுமிட்டு நிறுக்கக் காண்கின்றோமன்றோ. ‘பொன் என்று போற்றப்படுகின்ற நமக்குக் கடைகெட்ட குன்றுமணி தானோ ஈடாகவேணும்’ என்று வருந்தி மிகவும் குன்றிப்போகா நின்றதாம். அதுபோல எம்பெருமானும், தூதனுப்பப்பெறுகை, தாம்பால் கட்டுண்கை முதலானவற்றால் சிறிதும் வருந்தான்; வருந்தாமை மாத்திரமேயன்று, அவற்றால் மிக்க முகமலர்ச்சியும் பெற்றிடுவான்; அப்படி யுண்டோவென்னில்; * இன்னார் தூதனென நின்றான்* என்றது கண்டீரே; ‘இன்னார் தூதனெனப்பட்டான்’ என்னாமல் ‘இன்னார் தூதனென *நின்றான்*’ என்கையாலே பாண்டவர்க்குத் தூது செல்லுகையாகிற இழிதொழில் செய்து பாண்டவ தூதனென்று பேர்பெற்ற பின்புதான் எம்பெருமானுக்குத் தரிப்பு உண்டாயிற்றென்பது விளங்கவில்லையா ?

598. இனி, தாம்பால் கட்டுண்கையினால் முகமலர்ச்சியுண்டானமை அறிந்தபடி யெங்ஙனேயென்னில்; பட்டர் திருக்கோட்டியூரிலெழுந்தருளி யிருக்கும்போது ஒரு ஸ்வாமி வந்து அடியேனுக்கு ஓருரு திருவிருத்தம் பொருளருளிச் செய்யவேணும்’ என்று பிரார்த்திக்க, ‘நம் பெருமாளைப் பிரிந்த துயரத்தினால் எனக்கொன்றும் சொல்லப்போகிறதில்லை, நஞ்சீயர் பக்கலிலே கேட்டுக்கொள்ளும்’ என்று சொல்லி நஞ்சீயர்க்கு நியமிக்க, சீயரும் பொருளருளிச்செய்துவருகையில் ‘‘அடைக்கலத்தோங்கு கமலத்து’’ (86) என்ற பாசுரத்தில் ‘‘வெண்ணெய்க்



கன்று ஆய்ச்சி வன்தாம்புகளால் புடைக்கலந்தானை’’ என்றவிடத்திலே ‘**புடைக்க அலந்தானை**’ என்கிற பாடப்படியே ‘‘தாம்புகளால் கட்டியடிக்க வருத்தப்பட்டவனை’’ என்று நஞ்சீயர் பொருளுரைக்க, பட்டர் அதுகேட்டு ‘ஜீயா! ‘அலந்தானை’ என்ற பாடத்திற் காட்டிலும் ‘அலர்ந்தானை’ என்ற பாடம் ஆழ்வார் திருவுள்ளத்திற்கு மிகப் பொருந்தும்போலே தோன்றுகின்றது’ என்றருளிச் செய்தாராம். அலந்தான்-வருந்தினவன். அலர்ந்தான் – முகவிகாஸமடைந்தவன் என்று பொருள்வாசி காண்க. முகவிகாஸம் எங்ஙனே யென்னில்? கண்ணபிரான் வெண்ணெய்களவுசெய்கிற தன்னை யசோதைப்பிராட்டி அடிக்கடி தாம்பினால் கட்டி வருத்துகின்றாளென்று வீட்டிலுள்ள கயிறுகளைத் துண்டு துண்டாக அறுத்துவைத்துப் பின்பே களவுசெய்யப் புகுவான். அவள் இவனை ஒருகையிலே பிடித்துக்கொண்டு கயிறு தேட, அவை துண்டுதுண்டாக இருப்பதுகண்டு அவற்றை ஒன்றோடொன்று முடிபோட்டு ஒரு கயிறுவடிவ மாக்கி அதுகொண்டு கண்ணபிரானைக்கட்டும்போது இவன் தன் உடம்புக்கு எட்டம்போராதபடியான அக்கண்ணிநுண் சிறுத்தாம்பினால் கட்ட முடியாதபடிசெய்து எளிதில் தன்னைத் தப்புவித்துக்கொள்ளவல்லவனாயினும், தனது ஸௌசீல்யம் ஸௌலப்யம் ஆச்ரிதபாரதந்திரியம் முதலிய சீலங்களை வெளியிடுவதற்கென்றே பரத்வநிலையைத் தவிர்ந்து மநுஷ்ய ஸஜாதீயனாக அவதரித்திருக்கிற தான் உரலோடு கட்டுண்டு அடியுண்டிருக்கை முதலான இவ்வகைகளாலேயே அக்குணங்களை விளங்கச் செய்துகொள்ள வேணுமென்றுகொண்டு, ஒரு சுற்றுக்குப் போராத தாம்பு இரண்டு மூன்று சுற்றுக்குப் போரும்படி உடம்பைச் சுருக்கி அமைத்துக்கொண்டு கண்ணிநுண்சிறுத்தாம்பினால் ‘*கட்டுண்ணப் பண்ணிய பெருமாயன்*’ என்னும்படி ஆவன். ‘இங்ஙனே நம்முடைய ஸௌசீல்ய ஸௌலப்யகுணங்கள் விளங்கப்பெற்றோமே, அவதார ப்ரயோஜநம் நன்கு நிறைவேறப்பெற்றதன்றோ’ என்று முகமலர்ச்சியடைந்திடுவன் என்க. ஆகவே தூது அனுப்பப்படுதல் தாம்பாலாப்புண்டிருத்தல் முதலிய இழிவான காரியங்களினால் எம்பெருமானுக்குச் சிறிதும் வருத்தமில்லாதிருத்தலோடு மிக்க மகிழ்ச்சியுமுண்டென்பது விளங்கிற்று.

பின்னை எதனால் வருத்தமுண்டாமென்னில், பொன்னுக்கு தன்னைக் குன்றுமணியோடொக்க நிறுத்தல் எப்படி துக்க

ஹேதுவோ, அப்படியே *ஒத்தார் மிக்காரையிலனாய மாமாயனாகிய எம்பெருமானுக்கும் அதிக்ஷுத்ரவஸ்த்துக்களான சிலவற்றோடே தன்னை ஒப்பிடப் பெறுதலே து:க்க ஹேதுவாமென்பது "ஒட்டுரைத்திவ்வுலகுன்னைப் புகழ்வெல்லாம் பெரும்பாலும், பட்டுரையாய்ப் புற்கென்றே காட்டுமால் பரஞ்சோதீ" இத்யாதிகளாலுணரத்தக்கது. இவ்வகையாலே பொன்னோடொக்கச் சொல்லலாம் எம்பெருமானை.

599. பொன்னானது மண்ணில் கலந்திருந்தாலும் சேற்றில் அழுந்திக்கிடந்தாலும் உள்ளே மாசு ஏறப்பெறாது. எம்பெருமானும் ஹேயவஸ்துக்களோடே கூடியிருந்தாலும் *மாசறு சோதியனே யாவன்.

600. பொன்னின் மதிப்புக்கு ஒருநாளும் குறைவில்லை. பொன்னகைகளுக்கு எக்காலத்திலும் ஏற்றமுண்டன்றோ. எம்பெருமானுடைய மதிப்புக்கும் ஒருகாலும் கொத்தையில்லை. இங்ஙனே மற்றும் பல உவமைப்பொருத்தங்கள் கண்டுகொள்க.

அண்ணாஸ்வாமியமுதமொழியாயிரத்தில் ஆறாவதுநூறு முற்றிற்று.

---

# (ஏழாவது நூறு)

## வ்ருஷப விசேஷார்த்தம்

எம்பெருமானை ஆழ்வார்கள் பலவிடங்களிலும் '*ஆயரேறு*' என்றும் '*ஆயர்கள் போரேறு*' என்றும் வ்ருஷபமாகப் பேசுகிறார்கள். வ்ருஷபத்திற்கும் எம்பெருமானுக்குமுள்ள சில பொருத்தங்களை யீண்டுக் காட்டுகின்றேன்.

601. வ்ருஷபத்திற்குச் சரணங்கள் நான்கு; எம்பெருமானுக்கும் சரணங்கள் நான்கு. *சரணம்* என்பதற்கு, கால் என்றும் பொருள், செய்கை என்றும் பொருள். வ்ருஷபத்திற்குக் கால்கள் நான்கு என்பது உலகப்பிரசித்தம். எம்பெருமானுக்குச் செய்கைகள் நான்கு என்பது வேதாந்தப்ரஸித்தம். நான்கு செய்கைகளாவன—ஸ்ருஷ்டி, ஸம்ரக்ஷணம், ஸம்ஹாரம், மோக்ஷப்ரதானம் என்பனவாம். மோக்ஷப்ரதானமென்பதைத் தனிப்பட்ட செயலாகவே கூறவேணுமென்பது நம் ஆழ்வாராசாரியர்களின் திருவுள்ளம். *வீடாந் தெளிதரு நிலைமைய தொழிவிலன் * என்றார் நம்மாழ்வார். *ஜகதுத்பவஸ்திதி ப்ரணாச *ஸம்ஸார விமோசந* * என்றார் ஆளவந்தார்.



602. வ்ருஷ ஶப்தவாச்யத்வம் வ்ருஷபத்திற்கு முண்டு; எம்பெருமானுக்குமுண்டு. "வ்ருஷோ வ்ருஷப தர்மயோ:" என்பது நிகண்டு. வ்ருஷம் என்றால் வ்ருஷபத்திற்கும் பெயர், தருமத்திற்கும் பெயர். "யே ச வேதவிதோ விப்ரா: யே சாத்யாத்மவிதோ ஜநா:, தே வதந்தி மஹாத்மாநம் க்ருஷ்ணம் தர்மம் ஸநாதநம்." என்றும், **ராமோ விக்ரஹவாந் தர்ம:** என்றும் எம்பெருமான் தருமமாகச் சொல்லப்பட்டனன். 'தர்மஸம்ஸ்தாபநம் பண்ணப்பிறந்தவன் தானே ஸர்வதர்மங்களையும் விட்டு என்னைப்பற்று என்கையாலே *ஸாக்ஷாத் தர்மம்* தானே யென்கிறது" என்று முமுக்ஷுப்படியில் பிள்ளைலோகாசாரியருடைய திவ்யஸூக்தியும் இங்கு அநுஸந்தேயம். ஆக, வ்ருஷசப்தவாச்யத்வம் வ்ருஷபத்திற்கும் எம்பெருமானுக்கும் இணங்கியதாயிற்று.

603. உணவு விஷயத்தில் பிறர்கை பார்த்திருக்குந் தன்மை வ்ருஷபத்திற்கும் எம்பெருமானுக்கும் ஒக்கும். எம்பெருமான் அர்ச்சாவதாரத்தில் உணவைப் பிறர்கை பார்த்திருக்கின்றான். விபவாவதாரத்திலும் "வேர்த்துப் பசித்து வயிறசைந்து வேண்டடிசிலுண்ணும்போது ஈதென்று பார்த்திருந்து நெடுநோக்குக் கொள்ளும் பத்தவிலோசனம்" என்ற நாச்சியார் திருமொழியின்படியே.

604. வ்ருஷபத்திற்கு *மாடு* என்று பெயர்; உலகில் அறிவிலிகளை *மாடே!* என்று வசைகூறுதல் வழக்கம். எம்பெருமானும் அறிவிலியென்றே கூறப்படுகிறான்; ஸஹஸ்ரநாமத்தில் *அவிஜ்ஞாதா* என்று ஒரு திருநாமம். அறியாதவன் என்றே இதற்குப் பொருள். ஸர்வஜ்ஞனான எம்பெருமானை அவிஜ்ஞாதா என்னலாமோவென்று கேள்வி பிறக்கும். அவ்விடத்தில் பட்டருடைய பாஷ்யத்தில் வெகு அழகாகப் பொருள் நிர்வஹிக்கப்பட்டுள்ளது. "அவிஜ்ஞாதா ஹி பக்தாநாம் ஆகஸ்ஸு கமலேக்ஷண:" என்பது நிர்வசநம். பக்தர்களின் அபராதங்களில் அறிவு இல்லாதவன் எம்பெருமான். கூரத்தாழ்வானும் வரதராஜஸ்தவத்தில் "உபாலம்போயம் போ:! ச்ரயதி பத! ஸார்வஜ்ஞ்யமபி தே யதோ தோஷம் பக்தேஷ்விஹ வரத! நைவாகலயஸி." என்று இந்த அவிஜ்ஞாத்ருத்வத்தையே வியாக்கியானித்தருளினார். எம்பெருமான் பக்தர்களின் குற்றங்களை அறியாதவனாகவே யிருந்திட்டால் அவற்றை போக்யமாகக் கொள்ளுகிறா

னென்பதற்கு அவகாசமேது? என்கிற சங்கையும் இங்கு உதிக்கும்; இதற்கு ச்ருதப்ரகாசிகையில் பரிஹாரம் தெரிவிக்கப்பட்டுளது. ''ஸம்பந்த விசேஷாந்விதேஷு ப்ரீதி: ஸ்நேஹ: ; யஸ்ய விபாகா: அஸ்த்தாந பயசங்கித்வம், தோஷாநவபாஸ:, தோஷேபி குணத்வ புத்திரித்யாதய:'' என்பது ச்ருதப்ரகாசிகா ஸ்ரீஸூக்தி. இதனால் என்ன தெரிவிக்கப்படுகின்றதென்றால், எம்பெருமான் பக்தர்களின் குற்றங்களில் கண் செலுத்தமாட்டான்; ஒருகால் கண்செலுத்தினாலும் அவற்றை நற்றமாகவே கொள்வன் என்று தெரிவிக்கப்படுகிறது. ஆகவே எம்பெருமானுக்குச் சொல்லுகிற அவிஜ்ஞாத்ருத்வம் பர்வபேதேந உபபந்நம்.

605. வ்ருஷபம், பழகிக்கொண்டே இருக்கிறவர்களிடத்திலும் கறுவுதல் உண்டானால் முட்டித்தள்ளும்; எம்பெருமான் படியும் இப்படியே; ''சீமாலிகனவனோடு தோழமைக்கொள்ளவும் வல்லாய், சாமாறவனை நீ யெண்ணிச் சக்கரத்தால் தலைகொண்டாய்.'' என்ற பெரியாழ்வார் திருமொழி இங்கு அநுஸந்தேயம். மாலிகன் என்பானொருவன் கண்ணபிரானுக்கு உயிர்த்தோழனாய் அப்பிரானிடத்தே பலவகை ஆயுதங்களையும் பயின்று ஒருவர்க்கும் அஞ்சாமல் அஹங்காரியாய் ஸாது ஜனங்களை ஹிம்ஸித்துக்கொண்டிருக்க, கண்ணபிரான் 'நண்பனாகிய இவனை நாம் கொல்வது தகாதே! என்ன செய்யலாம்?' என்று வியாகுலப்பட்டு ஒரு நாள் அவனை நோக்கி 'நீ இப்படிச் செய்வது தகாது' என்ன, ஆஸுரப்ரக்ருதியான அந்த மாலிகன் தன் வாயில் வந்தபடி பிதற்றி 'நீ எல்லா ஆயுதங்களையும் எனக்குக் கற்பித்தும் சக்ராயுதப் பயிற்சிமாத்திரம் செய்யவில்லையே' என்று கண்ணன்மேற் குறைகூற, 'இதில் பழகுவது உனக்கு முடியாது' என்று கண்ணன் கூற, 'எனக்கு முடியாதது மொன்றுண்டோ! நீ அவசியம் அதைக் கற்பிக்கவேணும்' என்ன, கண்ணன் இதுதான் தக்க சமயம் என்று திருவுள்ளத்திற்கொண்டு சக்ராயுதத்தை யெடுத்துத் தன் ஒற்றை விரலால் சுழற்றி மேலெறிந்து கையிலேற்க, 'இது உனக்கு அரிதே' என்று கண்ணன் சொல்லவும் அதை அவன் கேளாமல் சக்ராயுதத்தை வாங்கிச் சுழற்றி யெறிந்து பிடிப்பதாக நினைத்துத் தன் கைவிரலைக் கழுத்துக்கு அடுத்ததாக வைத்து நிற்க அச்சக்கரம் சுழன்று வருவதற்கு இடம் போதாமையாலே அதன் வீச்சு இவன் கையிற் பிடிபடாமல் இவன் தலையை அரிந்துவிட்டதென்பது இங்குக் குறித்த வரலாறு.



606. வ்ருஷபம், காசு கொடுத்து வாங்கிவிட்டால் நம் வீட்டையே நாடிவரும்; ''பக்திக்ரீதோ ஜநார்த்தந:'' என்கிறபடியே பக்தியாகிற விலையினால் எம்பெருமானைப்பெற்றுவிட்டால் அவனும் நம்மையே நாடி நிற்பன். ''எங்கும் பக்கநோக்கறியான் என் பைந்தாமரைக் கண்ணனே'' என்கிறபடியே வேறோரிடம் புரிந்து பாரான். * கனிவார்வீட்டின்பமா யிருப்பன்.

607. வ்ருஷபம் பிறர்க்கு உழைப்பதையே இயற்கையாகவுடையது. எம்பெருமான் படியுமிதுவேயாம்; தூது செல்வதும் தேரில் பாகனாய் நிற்பதும் * மனிசர்க்காய் நாட்டில் பிறந்து படாதனபடுவதும் காண்க. ''ந தே ரூபம் ந சாகாரோ நாயுதாநி நசாஸ்பதம். ததாபி புருஷாகாரோ பக்தாநாம் த்வம் ப்ரகாசஸே'' [ஜிதந்தே ஸ்தோத்ரம்] என்றபடியே எம்பெருமானுடைய ஸகலமும் பிறர்க்கேயாயிருக்கும். ''இமௌ ஸ்ம முனிசார்தூல! கிங்கரௌ ஸமுபஸ்திதௌ, ஆஜ்ஞாபய யதேஷ்டம் வை சாஸநம் கரவாவ கிம்.'' (ஸ்ரீராமாயணம்) என்ற தாசரதிகளின் சொல்லழகும் நோக்குக.

608. வ்ருஷபம் பாரத்தை வஹிப்பதற்கென்றே பிறக்கும். எம்பெருமானும் பக்தர்களின் யோக க்ஷேமபாரங்களை வஹிப்பதிலேயே குதூஹலமுடையவன். ''யோக க்ஷேமம் வஹாமி அஹம்'' என்றே கீதையில் அருளிச்செய்கிறான்.

609. இவ்விடத்தில் ஒரு கதை:—சாஸ்த்ர விச்வாஸமுடைய ஒரு ஸ்வாமி ''யோக க்ஷேமம் வஹாம்யஹம்'' என்கிற பகவத் ஸூக்தியில் நிச்சலமான அத்யவஸாயமுடையவராய் தேஹயாத்திரைக்காகத் தாம் ஒரு முயற்சியும் செய்யாதவராய் இருந்துவந்தார். எம்பெருமானும் அவருடைய அத்யவஸாயத்திற்குப் போரவுகந்தருளிப் பலவகைகளாலே அவருடைய யோக க்ஷேமபாரங்களைத் தானே நிர்வஹித்து வந்தான். இப்படி வருகையில் அவருடைய அத்யவஸாயத்தை இன்னமும் சிறப்பிக்கத் திருவுள்ளம்பற்றிய எம்பெருமான் சில நாள் ஔதாஸீந்யத்தை அவலம்பித்திருந்தான். அவரும் பட்டினி கிடக்க நேர்ந்தது. ஆனாலும் பிறரிடம் சென்று யாசிக்க விரும்பவில்லை. பகவத்கீதை ஓலை ஸ்ரீகோசத்தை யெடுத்து * யோக க்ஷேமம் வஹாம்யஹம் * என்றவிடத்துக் கரிபூசினார். மறுநாள் காலையில் அவர் அனுட்டானத்திற்காகத் தடாகம் சென்றிருக்கையில், மாதவன் ஒரு சிறுகுமாரனாய் உதட்டில் கரிபூசிக்கொண்டு பல

கூடைகளிலே பல பல ஸம்பாரங்களை வைத்துத் தானே தலையில் சுமந்துகொண்டு வந்து அவருடைய திருமாளிகையில் முற்றம் நிறைய ஸம்பாரமயமாகவே நிரப்பிக்கொண்டிருக்கிறான்; அவர் அனுட்டானத்தை முடித்துக்கொண்டு திருமாளிகையில் நுழைகையில் முற்றம் முழுவதும் அமுதுபடியும் பலவகை ஸம்பாரங்களுமாய் நிறைந்திருக்கிற படியைக்கண்டு தேவிகளை நோக்கி 'இவையெல்லாம் ஏது?' என்றுகேட்க, அவளும் யாரோவொரு பையன் கொணர்ந்து கொணர்ந்து வைத்துப்போகின்றான்; நீங்கள் அனுப்பினதாகவன்றோ நான் நினைத்திருக்கின்றேன்' என்றாள். அதுகேட்ட அவர் 'எனக்கு ஒன்றும் தெரியாதே: நான் குளத்திற்கன்றோ சென்று வருகிறேன்; அந்தப் பையன் யாவன்? எப்படியிருப்பன்?' என்று கேட்டனர்; 'இடைப் பிள்ளை போல் தென்பட்டான். உதடெல்லாம் கரிபூசினபடியாய்க் கிடந்தது' என்றாள். கரியென்கிற பேச்சுக் காதில் விழுந்தவுடனே தாம் பகவத்கீதை யேட்டில் கரிபூசினவிடத்தை யெடுத்துப்பார்த்தார். அங்குச் சிறிதும் கரியில்லை. 'மாதவனுடைய மாயமே இது' என அறுதியிட்டார். அந்தோ! பாவியேனுக்குச் சேவைதந்தருள லாகாதாவென்று ஆகாசத்தை நோக்கி அழுவதும் தொழுவதுமாய்த் துடித்தார்; உடனே சங்கும் சக்கரமும் சிரித்தமுகமுந் தொங்கும் பதக்கங்களோ டெங்கும் கண்டறியாத தோற்றமுடனே நங்கள் பிரான் தோன்றினன். * *யோக க்ஷேமம் வஹாம்யஹம்* என்றவனன்றோ நான் என்று சோதி வாய்திறந்து பணித்தனனாம். ஆகவே, மாதவனே பாரவாஹி.

610. வ்ருஷபம் எத்தனை யடிபட்டாலும் லக்ஷியம் பண்ணாது; எம்பெருமான் அடிபட்டதும் மஹாபாரதமிறே. "ஆங்கொருநாளாய்ப்பாடி, சீரார் கலையல்குல் சீரடிச் செந்துவர்வாய், வாரார்வனமுலையாள் மத்தாரப் பற்றிக்கொண்டு, ஏராரிடை நோவ எத்தனையோர் போதுமாய், சீரார் தயிர்கடைந்து வெண்ணெய் திரண்டதனை, வேரார்நுதல் மடவாள் வேறோர் கலத்திட்டு, நாராருறியேற்றி நன்கமைய வைத்ததனைப், போரார்வேற் கண்மடவாள் போந்தனையும் பொய்யுறக்கம், ஓராதவன்போல் உறங்கி யறிவுற்றுத், தாரார் தடந்தோள்க ளுள்ளளவுங் கை நீட்டி, ஆராத வெண்ணெய் விழுங்கி, அருகிருந்த மோரார் குடமுருட்டி முன்கிடந்த தானத்தே, ஓராதவன்போல் கிடந்தானைக் கண்டவளும், வாராத் தான்வைத்தது காணாள், வயிறடித்திங்



காரார் புகுதுவார் ஐயரிவரல்லால், நீராமிது செய்தீரென்றோர் நெடுங்கயிற்றால், ஊரார்களெல்லாருங் காணவுரலோடே, தீரா வெகுளியளாய்ச் சிக்கன ஆர்த்து அடிப்ப, ஆராவயிற்றினோடாற்றாதான்" இத்யாதி. சிறிய திருமடல் காண்க.

611. நிலத்தை யுழுவதற்கு வ்ருஷபம் முதல் ஸாதநம்; எம்பெருமான் "பத்தியுழவன்" என்று திருமழிசைப்பிரானும் **தம் த்வாம் க்ஷேமக்ருஷீவலம் ஹலதரம்** என்று பட்டரும் பணித்தபடியே பக்திக்ருஷிக்கு ப்ரதமஸாதநம். பக்தியாகிற பயிர்க்கு நெஞ்சு விளைநிலம்; "பேரமர் காதல் கடல்புரைய விளைவித்த காரமர் மேனி நங்கண்ணன்" என்கிறபடியே அதற்கு க்ருஷி பண்ணுகிறவன் மாதவன். ஆசார்ய ஹ்ருதயத்தில் "பெரும்பாழில் க்ஷேத்ரஜ்ஞன்பெருஞ்செய்" இத்யாதி சூர்ணிகையினால் இவ்விஷயம் விசததமமாக அறியத்தக்கது.

612. வ்ருஷபம் நல்லவழிகளில் நன்றாகவோடும்; சேற்றுநிலம் கண்டால் தளரும். எம்பெருமானும் நன்னெறி நின்றவர்கள் பக்கலில் விரைந்து காரியம் செய்தவன். * மாய வன்சேற்றள்ளலில் படிந்தவர்களிடத்தில் தளர்ச்சி தோற்ற விருப்பன்.

இங்ஙனே மற்றும் பலவகைப் பொருத்தங்களும் உய்த்துணரத்தக்கன. ... ... ... (*)

---

## தெய்வவண்டு விசேஷார்த்தம்

நம்மாழ்வார் திருவாய்மொழியில் * தூவியம் புள்ளுடைத் தெய்வவண்டு * என்றவிடத்தில் எம்பெருமானை வண்டாக அருளிச்செய்தார். * வண்டுகளோ வம்மின் * அறுகால சிறுவண்டே தொழுதேனுன்னை * என்பவை முதலானவிடங்களில் வண்டாகச் சொல்லுகிறது பாகவதர்களையே யாதலால் அது பற்றிய விசேஷார்த்தம் பிறகு மேலே (பக்கம் 42-ல்) விவரிக்கலாகும். இப்போது தெய்வவண்டு விசேஷார்த்தம் கேண்மின்.

613. வண்டு ஸாரக்ராஹி யெனப்படும். கமலமலரிற் படிந்து அங்குள்ள ஸாரத்தை யெடுத்து ஜீவிக்குமது வண்டு. எம்பெருமான் *போதிற்கமல வன்னெஞ்சம்* என்றும், **பக்தாநாம் யத் வபுஷி தஹரம் பண்டிதம் புண்டரீகம்** என்றும் சொல்லப்படுவதான பக்தர்களின் ஹ்ருதய புண்டரீக மலரிற் படிந்து அங்குள்ள ஸாரத்தைக் கவர்ந்து களிப்பவனென்று ப்ரஸித்தம்.

614. வண்டு பத்மாபிநிவேசமுடையது; எம்பெருமானும் பத்மாபிநிவேசமுடையவன். (இது சிலேடை) பத்மே அபிநிவேச:, பத்மாயாம் அபிநிவேச:=பத்மமென்கிற தாமரையிலே வண்டுக்கு ஆவல். பத்மையான பிராட்டியினிடத்தில் அபிநிவேசம் எம்பெருமானுக்கென்று கண்டு கொள்வது.

615. சாகாஸஞ்சாரமுடையது வண்டு; எம்பெருமானும் அப்படிப்பட்டவனே. (இதுவும் சிலேடை.) சாகை என்று கிளைக்கும் வேதங்களுக்கும் பெயர்; வண்டு கிளைகளிலே ஸஞ்சாரமுடையது; எம்பெருமான் வேதங்களிலே.

616. வண்டு செவிக்கின்பமாக கீதம் பாடும். எம்பெருமானுமப்படியே. *குழலினோசை செவியைப்பற்றிவாங்க* த்வம் தேஷ்வங்யதமாம் பபூவித பவத்வேணு க்வணோந்மாதநே * என்றவை காண்க. ‘உருகாய:’ என்று எம்பெருமானுக்கு வேதமிட்ட திருநாமம்.

617. வண்டுஜாதியில் ஒன்றாக ப்ரஸித்தமான வேட்டுவேளான் (குளவி) மிக அற்பமானதொரு புழுவைக் கொண்டு வைத்து ஊதித் தன்னோடு ஒற்றுமை பெற்றதாக்கும்படியைக் காணாநின்றோம். “குளவி தன்னிறமாக்கும்” என்கிற பழமொழியும் ப்ரஸித்தம். எம்பெருமானும் * பொருளல்லாத வென்னைப் பொருளாக்கியடிமை கொண்டாய் * என்றும், * தம்மையே நாளும் வணங்கித் தொழுவார்க்குத் தம்மையேயொக்க அருள் செய்வர் * என்றும் சொல்லுகிறபடியே அவஸ்துவாய்க் கிடக்கிற ஆத்மவஸ்துவின் சிறுமைபாராதே தன்னோடொத்ததாம்படி செய்தருளுமவன்.

618. வண்டு சோலைகளிலேயே சுழலமிடும். எம்பெருமானும் * வண்டினமுரலுஞ்சோலை மயிலினமாலுஞ்சோலை கொண்டல் மீதணவுஞ்சோலை குயிலினங்கூவுஞ்சோலை, அண்டர்கோனமருஞ்சோலை யென்னும்படியான * ஆராமஞ் சூழ்ந்தவரங்கம் முதலான திருப்பதிகளிலேயே அநுரக்தன்.

619. வண்டு மதுவைப்பருகித் தென்னாதெனாவென்று முரலும். * தென்னாதெனாவென்று வண்டுமுரல் * என்றாரே நம்மாழ்வார். எம்பெருமானும் தொண்டர்களின் அமுதவாக்கைப் பருகித் தென்னாவென்று தெகுடாடுகிறானென்பதை நம்மாழ்வார் தாமே * பண்ணார் பாடலின்கவிகள் யானாய்த் தன்னைத் தான்பாடித் தென்னாவென்னு மென்னம்மான் திருமாலிருஞ்சோலையானே * என்கிற பாசுரத்தினால் காட்டியருளினார்.

இங்ஙனே மற்றும் பலவகையான உவமைப் பொருத்தங்களுங் கண்டுகொள்வது. ... ... ... (*)



---

## நிதி விசேஷார்த்தம்

620. எம்பெருமானை ஆழ்வார்கள் நிதியாகப் பேசி யநுபவித்தார்கள். *நிதியே திருநீர்மலை நித்திலத் தொத்தே* என்றும் *நிதியினைப் பவளத் தூணை* என்றும் *வைத்தமாநிதியாம் மதுசூதன்* என்றும் பல பாசுரங்கள் காணலாம். *அந்தர்ஹிதோ நிதிரஸி த்வம்* என்று கூரத்தாழ்வானும், *மாயாநிகூடம் அநபாய மஹாநிதிம் த்வாம் * என்று தேசிகனும் பணித்தார்கள். நிதிக்கும்எம்பெருமானுக்கும் பலபடிகளாலேஸாம்யமுண்டு.

621. நிதி ஒருவர் கண்ணுக்கும் புலப்படாதபடி மறைந்து கிடக்கும். எம்பெருமானும் “கண்காணநிற்கில் ஆணையிட்டு விலக்குவர்களென்று கண்ணுக்குத் தோற்றாதபடி நின்று” என்கிற ஸ்ரீவசநபூஷண ஸ்ரீஸூக்தியின்படியும், * இவற்றுளெங்கும் மறைந்துறைவாய் * கரந்தெங்கும் பரந்துளன் * என்பவை முதலான பாசுரங்களின்படியும் கட்கிலியா யிருப்பன்.

622. மறைந்து கிடக்கும் நிதியானது சில பாக்யசாலிகளுக்கே புலப்படும். எம்பெருமானும் *யானே தவம்செய்தேன்* * கோரமாதவம் செய்தனன் கொலறியேன் * என்னும்படியான சில பாக்யசாலிகளுக்கே புலப்பட்டான். *லப்யோஸி புண்ய புருஷை: இதரைர் துராப: * என்றார் கூரத்தாழ்வானும்.

623. ஒரு வகையான ஸித்தாஞ்ஜநமணிந்து கொண்டு பார்ப்பவர்களுக்கே நிதி தோன்றும். “நித்யஞ்ஜநௌஷதீமூலம் கநதா ஆஸாதிதோ நிதி:” என்கிற சந்த்ராலோக ச்லோகம் இங்கு நினைக்கத்தக்கது. எம்பெருமான் “மநஸி விலஸதாக்ஷ்ணா பக்திஸித்தாஞ்ஜநேந” என்று பட்டரும் “ஸித்தாஞ்ஜநேந பவதைவ விபூஷிதாக்ஷா:” என்று தேசிகனும் பணித்தபடியே பக்தியாகிற ஸித்தாஞ்ஜனமணிந்த திவ்ய சக்ஷுஸ்ஸைப் பெற்றவர்களுக்கே தோன்றுவன். “மாயாம் ந ஸேவே பத்ரம் தே ந வ்ருதா தர்மமாசரே, சுத்தபாவம் கதோ, பக்த்யா சாஸ்த்ராத் வேத்மி ஜநார்தநம் * என்று த்ருதராஷ்ட்ரனை நோக்கி ஸஞ்ஜயன்

கூறினது காண்க. “யே து த்வதங்க்ரி ஸரஸீருஹ பக்திஹீநா: தேஷாமமீபிரபி நைவ யதார்த்த போத:” என்று கூரத்தாழ்வானும் பக்தியற்றவர்களுக்கு எம்பெருமான் புலப்படானென்று கூறியருளினர்,

624. நிதியானது தன்னைப் படைத்தவர்களை *த்ருணீக்ருத விரிஞ்சாதி நிரங்குச விபூதிகர்களாக ஆக்கி ஆனந்த பரம காஷ்டையிலே கொண்டுவைக்கும். எம்பெருமானும் தன்னைப் பெற்றவர்களை *ஏஷஹ்யேவாநந்தயாதி *உகந்துகந்துள்மகிழ்ந்து குழையுமே *தொல்லையின்பத்திறுதிகண்டாளே* என்கிறபடியே ப்ரஹ்மாநந்த பரவசர்களாக்குவன்.

625. நிதியானது நவநிதியென்று ப்ரஸித்தமாக வழங்கப்பெறும். நவ என்பதற்கு ஒன்பது என்றும் அர்த்தம்; புதிது என்றும் அர்த்தம். எம்பெருமான் *எப்பொழுதும் நாள் திங்களாண்டூழியூழி தொறும் அப்பொழுதைக் கப்பொழு தென்னாராவமுதமே *ஸதாதநத்வேபி ததாதநத்வவந்நவீபவத்* என்கிறபடியே நவம் நவமாகத் தோற்றுவன்.

626. நிதியானது எடுத்தெடுத்து எவ்வளவு அநுபவிக்கப்பட்டாலும் கொள்ளக் கொள்ள மாளாததாய் அக்ஷய்யமாயிருக்கும். எம்பெருமானும் எனையூழிகாலம் அநுபவிக்கப்பட்டாலும் குறைவுபடாதே மேன்மேலும் பெருகிச் செல்வன். குவலயாநந்தமியற்றிய அப்பய தீக்ஷிதர் “உத்காட்ய யோக கலயா ஹ்ருதயாப்ஜகோசம், தந்யைச் சிராதபி யதாருசி க்ருஹ்யமாண:, ய: ப்ரஸ்புரத்யவிரதம் பரிபூர்ணரூப:, ச்ரேயஸ்ஸ மே திசது சாச்வதிகம் முகுந்த:” என்றுரைத்த மங்கள ச்லோகம் இங்கே ஸ்மரிக்கத்தகும்.

இங்ஙனே மற்றும் பல உவமைப் பொருத்தங்கள் காண்க.

---

## ஸிம்ஹ விசேஷார்த்தம்

*எசோதையிளஞ்சிங்கம்* என்றும் *என்சிற்றுயர் சிங்கமே* என்றும் பலவிடங்களில் எம்பெருமானைச் சிங்கமென்று கூறியிருப்பதன் விசேஷார்த்தம் கேண்மின்.

627. சிங்கமானது மிருகஜாதிக்குள்ளே ராஜாவென்று பேர் பெற்றிருக்கும். எம்பெருமானும் *பாரளந்த பேரரசே எம் விசும்பரசே! * என்று ராஜாதிராஜனாகப் பேர்பெற்றிருப்பன்.



628. சிங்கம் பெரிய காடுகளிலே திரியும். எம்பெருமான் பெரிய காடென்று பொருளுடையதான **ப்ருஹதாரண்யகம்** முதலான உபநிஷத்துக்களிலே உலாவுவன்.

629. சிங்கம் *மலைமுழஞ்சில் மன்னிக்கிடந்துறங்கும். எம்பெருமான் *தென்னனுயர் பொருப்பு, தெய்வவடமலை, திருவத்திமாமலை முதலானமலை முழஞ்சுகளிலே *அணிமணியின் துத்திசேர் நாகத்தின்மேல் துயில்வான். *நீளாதுங்கஸ்தந கிரிதடீஸுப்தனுமாயிருப்பன்.

630. சிங்கம் ஒருவராலும் அடர்க்கமுடியாததா யிருக்கச் செய்தேயும் தன்னைப் பழக்கிவைத்துக்கொண்டிருக்கும் சிலர்க்கு ஸர்வாத்மநா விதேயமாயிருக்கக் காணாநின்றோம். எம்பெருமானும் *பிறர்களுக்கு அரிய வித்தகனாயிருக்கச் செய்தேயும் *பத்துடையடியவர்க் கெளியவனென்று ப்ரஸித்தன். மண்ணின் பாரமான துரியோதனாதியர்க்கு அபிபவிக்க வொண்ணாதவனாயிருந்த நிலையிலே *ஸேநயோ ருபயோர் மத்யே ரதம் ஸ்தாபய மே அச்யுத* என்றிங்ஙனே பலவாறு அர்ஜுநன் நியமிக்கும்படி பவ்யனாயிருந்த நிலை காண்க.

631. சிங்கம் கம்பீரமானநடை நடக்கும். எம்பெருமானும் *கானகம்படி யுலாவி யுலாவிக் கருஞ்சிறுக்கன்* என்றும் *ஸிம்ஹவிக்ராந்த காமிநம்* என்றும் சொல்லுகிறபடியே நடைச்சக்ரவத்துப் பிடிக்கலாம்படியான நடையழகில் ப்ரஸித்தி பெற்றவன். *ராமே ப்ரமாதம் மா கார்ஷீ: புத்ர! ப்ராதரி கச்சதி* என்று லக்ஷ்மணனை நோக்கி ஸுமித்ரை சொன்ன வார்த்தையில் ‘கச்சதி’ என்ற விடத்திற்கு நம் ஆசாரியர்கள் பொருத்தமாக அருளிச்செய்யும் அர்த்த விசேஷம் இங்கே அநுஸந்தேயம்.

632. சிங்கம் மதயானைகளை அவலீலையாகத் தொலைத்திடும். எம்பெருமானும் மதுகைடப ஹிரண்ய ஹிரண்யாக்ஷ ராவண கும்பகர்ண கம்ஸ சிசுபாலாதிகளான மதயானைகளைக் கிள்ளிக்களைந்தவன். இங்ஙனே மற்றுங்காண்க. ... (*)

எம்பெருமானைப்பற்றின விசேஷார்த்தங்கள் முடிந்தன.

---

## இனி பாகவதர்களைப்பற்றின விசேஷார்த்தங்கள்

### அவதரணிகை

ஆக இவ்வளவும் எம்பெருமானைப்பற்றின அந்யாபதேச ஸ்ரீஸூக்திகளுக்கு ஸ்வாபதேசார்த்தங்கள் காட்டப்பட்டன. இனி, எம்பெருமானடியார்களைப்பற்றின அந்யாபதேச ஸ்ரீஸூக்திகளுக்கு ஸ்வாபதேசார்த்தங்கள் நிரூபிக்கப்படுகின்றன.

633. ஆழ்வார்கள் எம்பெருமானைக் குறித்துத் தூதுவிடும் பிரகரணங்களிலே, வண்டு நாரை அன்னம் கிளி குயில் முதலான பறவைகளையும் மேகத்தையும் தூதுவிடுவதாகக் காண்கிறது. அறிவிற்சிறந்த ஆழ்வார்கள் அறிவுகேட்டுக்கு எல்லை நிலமான வண்டு நாரை முதலியவற்றை மெய்யே தூதுவிடுகை அஸம்பாவிதமாகையாலே உள்ளுறைபொருள் வேருகவேயிருந்து தீர வேண்டும். இதனை நம்மாழ்வார் தாமே திருவிருத்தத்தில் ஒரு பாசுரத்தினுல் வெகு ஸ்பஷ்டமாகக் காட்டியருளினுர்.

எங்ஙனே யென்னில்; * வீசுஞ்சிறகால் பறத்தீர் * என்கிற பாசுரத்தில் "எம்மீசர் விண்ணேர் பிரானுர் மாசில் மலரடிக்கீழ் எம்மைச் சேர்விக்கும் வண்டுகளே!" என்ருர். எம்பெருமானுடைய திருவடிகளிலே சேர்விக்கையாகிற விசேஷம், காட்டில் திரியும் வண்டுகளுக்கு ஒருபடியாலும் ஸம்பவிக்குமதன்றே. கடகக்ருத்ய நிஷ்டர்களான ஆசாரியர்களையே வண்டுகளாகச் சொல்லித் தூதுவிடுகிருரென்பது சொற்போக்கிலே நன்கு விளங்காநின்றதன்ரே.

634. இதற்கடுத்த மேற்பாசுரத்திலும் 'வண்டுகளோ வம்மின், நீர்ப்பூ நிலப்பூ மரத்திலொண்பூ வுண்டு களித்துழல்வீர்க்கு" என்று அருளிச்செய்திருப்பதும் குறிக்கொள்ளத்தக்கது. நீர்ப்பூக்களான தாமரை செங்கழுநீர் முதலானவற்றிலும், நிலப்பூக்களான மல்லிகை முல்லை முதலானவற்றிலும், மரத்துப் பூக்களான புன்னை குருக்கத்தி பாதிரி முதலானவற்றிலும் உலாவுகின்ற வண்டுகளின் தன்மையைச் சொல்லுவது மாத்திரமே இங்கு விவக்ஷிதமன்று; *நீர்ப்பூ* என்பதனுலே க்ஷீராப்திசாயியான வ்யூஹவாஸுதேவ பகவானையும், *நிலப்பூ* என்பதனுலே பூமியில் அவதரித்து ஸஞ்சரித்த விபவாவதார மூர்த்திகளையும், *மரத்திலொண்பூ* என்பதனுலே * சேணுயர் வானத்திருக்குந் தேவபிரானுன பர வாஸுதேவனையும் சொல்லி, ஆக பரவ்யூஹ விபவ மூர்த்திகளின் அநுபவத்திலே ஊன்றியிருக்குமடியார்களின் தன்மையைச் சொன்னபடியாய் நன்கு விளங்குகின்றது.



635. அன்றியும் திருவாய்மொழியிலே * எங்கானலகங்கழிவாயில் "செங்கால மடநாராய்! திருமூழிக்களத் துறையும்... குடக்கூத்தற்கு என் தூதாய், நுங்கால்களென் தலைமேல் கெழுமீரோ நுமரோடே" என்கிற பாசுரத்தினுல், தூதுசென்று மீண்டு வந்தால் அவற்றின் கால்களைத் தம் தலைநிறைய வைத்துக் கொண்டு கூத்தாட ஆழ்வார் குதூஹலிப்பதாக ஸ்பஷ்டமாய்க் காண்கிறது. இங்கு நன்கு ஆலோசிக்கவேண்டும். நாரையென்னும் அற்பபக்ஷியினுடைய கால்களைத் தலைமேற்கொள்ளவா ஆழ்வார் குதூஹலிப்பர்? இது பொருந்துமதன்றே. * அடிச்சியோந்தலைமிசை நீயணியாய் ஆழியங்கண்ணுவுன் கோலப்பாதம் * என்று எம்பெருமான் திருவடிகளைச் சிரமேலணிந்துகொள்ளக் காதலிக்குமவர் அத்திருவடிகளுக்கும் மேலான திருவடிகளைச் சூட விரும்புவரேயல்லது அற்பமான நாரையின் கால்களைச் சூட விரும்புவரோ? பரமபாகவதர்கள் ஸபரிவாரராகவந்து தம் தலைமீது திருவடிகளை வைத்தருளவேணுமென்றே விரும்புகிருரென்பது சொற்போக்கிலே நன்கு விளங்குகின்றதன்ரே.

636. * மாறன் பணித்த தமிழ் மறைக்கு ஆறங்கங்கூற அவதரித்த மங்கையர்கோன் பணித்த பாசுரமொன்றும் இங்கே குறிக்கொள்ளத்தக்கது. அதாவது, திருநெடுந்தாண்டகத்தில் * அறுகால சிறுவண்டே! தொழுதேனுன்னை * என்று ஆழ்வார் அருளிச்செய்துளர். ஆறு கால்களையுடைய வண்டே! என்று இங்கே விளியுள்ளது. வண்டுக்கு ஆறுகால்கள் உள்ளமை இயல்வாதலால் இவ்விசேஷணம் இங்கு ஏதுக்கு? என்கிற சங்கை தோன்றக்கூடியது. இரண்டு காலாகவும் நான்கு காலாகவுமின்றியே விரைந்து செல்லுகைக் குறுப்பாக ஆறுகால்கள் இருக்கப்பெற்ற பாக்கியம் என்னே! என்று வியந்து கூறுவதாகச் சில ஆசார்யர்கள் நிர்வஹித்தார்களாம். இந்த நிர்வாஹத்தில் சுவையில்லை; வண்டு செல்லுதற்குச் சாதனம் சிறகேயன்றிக் கால்கள் அல்லவே. ஆதலால் *அறுகால* என்னுமடைமொழிக்கு அங்ஙனே கருத்துரைத்தல் பொருந்ாதென்று, பட்டர் அருளிச்செய்ததாவது—'*தொழுதேனுன்னை*' என்று மேலேயிருக்கையாலே தம் தலையிலே வைப்பதற்கு ஆறுகால்க ளுண்டாகப்

பெற்றதே! என்று வியந்து சொல்லுகிறபடி என்பதாம். அதாவது—[ஆசார்யவத் ஆசார்யபுத்ரே ஆசார்யதாரேஷுசவ்ருத்தி:] என்பது சாஸ்த்ரம். ஆசார்யரைப்போலவே அவரது திருக்குமாரரும் தருமபத்தினியும் ஆக மூவர் உத்தேச்யராகச் சொல்லுகையாலே அம்மூவர்க்கும் உரியவையான ஆறுகால்களைச் சிரமேற்கொள்ள விரும்பினபடியைக் கூறினவாறு. மேலே உதாஹரித்த திருவாய்மொழிப் பாசுரத்தில் *நுங்கால்களென் தலைமேல் கெழுமீரோ* என்றவுடனே 'நுமரோடே' என்றதனுல் உட்கொள்ளப்பட்ட அர்த்தமேயாம் இது.

637. திருமங்கையாழ்வாருடைய மற்றொரு பாசுரமுங் காண்மின் ;—பெரிய திருமொழியில் (9—6—1.) * தக்கமரத்தின் தாழ்சினை யேறித் தாய்வாயில் கொக்கின்பிள்ளை வெள்ளிறவுண்ணுங் குறுங்குடியே * என்கிருர் ; குட்டிப் பறவையானது தாழமான ஒரு கிளையிலிருந்துகொண்டு, மேற்கிளையிலிருக்கின்ற தாய்ப்பறவையின் வாயிலிருந்து உணவை வாங்கியுண்பதாக அருளிச்செய்யப்படுகிறது. சீரிய சிங்காசனத்தின்மீது ஆசார்யன் எழுந்தருளியிருந்து போக்யமான அர்த்தங்களை யுபதேசிக்க, பாலசிஷ்யர்கள் தாழவிருந்து கொண்டு அவ்வர்த்தங்களைப் பெற்று உபஜீவிக்குந் தன்மையன்றோ இங்கு விவக்ஷிதமாகப் புலப்படுகின்றது.

இத்தகைய பல ஆராய்ச்சிகளால் ஆழ்வார்களின் திருவுள்ளத்திலேயே ஸ்வாபதேசார்த்தம் நன்ருகவும் முக்கியமாகவும் பதிந்துகிடக்கின்ற தென்னுமிடம் ஸுஸ்பஷ்டமென்றுணர்க. ஸ்ரீ வேதாந்த தேசிகனும் த்ரமிடோபநிஷத் தாத்பர்ய ரத்நாவளியிலே "தேசிகாஸ் தத்ர தூதா:" என்றருளிச் செய்ததும் அங்கு நம் உரையும் காண்க. ... ... (*)

---

## பறவை விசேஷார்த்தம்

ஆழ்வார்கள் குயிலென்றும் மயிலென்றும் சில பக்ஷி விசேஷங்களைச் சிறப்பித்தெடுத்துக் கூறுவது தவிர, பொதுவாக *நன்னலப் புள்ளினங்காள், * என்றும் * புள்ளினங்காள்! புல்லாணி... செப்புமினே* என்றும் * புள்ளும் சிலம்பினகாண் * என்றும் பக்ஷி ஸாமான்யங்களைக் கூறியிருப்பது முண்டாதலால் அதற்குரிய ஸ்வாபதேசார்த்தம் கேண்மின்.



638. பக்ஷியானது இரண்டு சிறகுகளினுலே உயரப் பறக்குமது. ஆசாரியர்களும் ஜ்ஞானம் அநுஷ்டாநம் என்கிற உபயபக்ஷங்களாலே உயர்கதியைப் பெறுவதும் பெறுவிப்பதுமாயிருப்பர்கள். *ஞான மனுட்டானமிவை நன்ருகவே யுடையனுன குருவையடைந்தக்கால் * என்ருர் மணவாளமாமுனிகளும். ஆகவே ஜ்ஞாநாநுஷ்டாநஸம்பந்நர்களாய் உச்சைர்கதி ஸமர்த்தர்களாயிருக்கும் மஹநீயர்களையே பக்ஷிகளாக மறைத்துக் கூறினரெனக் கொள்க. *உபாப்யாமேவ பக்ஷாப்யாம் ஆகாசே பக்ஷிணும் கதி:, ததைவ ஜ்ஞாநகர்மப்யாம் ப்ராப்யதே புருஷோத்தம: * என்று மஹர்ஷிகளும் இந்த ஸ்வாபதேசத்தை ஸூசிப்பித்துள்ளார்கள்.

639. இங்ஙனே மறைத்துச் சொல்லுவது அலங்கார சாஸ்த்ரமர்யாதையில் மிகமேம்பட்டதாகும். அபஹ்நுதியென்றும் ஸமாஸோக்தியென்றும் அப்ரஸ்துத ப்ரசம்ஸையென்றும் சில அலங்காரங்கள் கூறுவர்கள். இவற்றிற்குக்காட்டும் லக்ஷியங்கள் ஸ்வாபதேசார்த்தத்தையே உயிராகக் கொண்டிருக்கும். ஒன்று காட்டுவோம்;—* ஏக: க்ருதீ சகுந்தேஷு யோங்யம் சக்ராத் ந யாசதே* என்கிருனொருவன். பக்ஷிகளுக்குள்ளே ஒரு பக்ஷிதான் சிறந்தது ; அது எதுவென்னில், தேவேந்திரனைத்தவிர வேறு எவனையும் நோக்கிப் பல்லைக்காட்டாத பக்ஷி எதுவோ அதுவேயாம்—என்பது இந்த ச்லோகத்தின் பொருள். நதி குளம் குட்டை ஏரி முதலிய ஒன்றிலும் வாய்வைக்காமல் நேராக மழைத்தாரையையே பருகி விடாய்தீரும் சாதக பக்ஷியைப்பற்றிக் கூறினவிது, பகவான்தவிர வேறு யாரிடத்திலும் பல்லைக்காட்டாத *வெண்பல் தவத்தவரான பரமைகாந்திகளைக் கூறினபடியென்பது அறிய வெளிது. இங்ஙனே மறைத்துக் கூறுவதில் [அந்யாபதேசோக்தியில்] விசேஷமான ஸ்வாரஸ்யாதிசயமுண்டென்பதை ரஸிகர்கள் அறிவர்கள்.

640. பெரியதிருமொழியில் திருமங்கையாழ்வார் *பள்ளச் செறுவில் கயலுகளப் பழனக்கழனியதனுள் போய், புள்ளுப் பிள்ளைக்கிரைதேடும் புள்ளம் பூதங்குடிதானே* என்றருளிச்செய்தார். கழனிகளில் மீன்களானவை துள்ளித் துள்ளி விளையாடா நிற்க, பறவைகளானவை அங்குச் சென்று தம்தம் குட்டிகளுக்கு உணவாகக்கூடிய மீன்களைத் தேடுமிடம்—என்று தலத்தின் வயல்வளத்தை வருணித்தபடி இது.

641. முற்காலத்தில் ஆலவாயுடையான் என்பானொரு தமிழன் பட்டரிடம் வந்து இப்பாட்டில் ஒரு கேள்வி கேட்டானும்; * *பள்ளச்செறுவில் கயலுகள* * என்றபோதே அவ்விடத்து வயல்களில் மீன்கள் அளவற்றுக் கிடக்கின்றமை வெளிவந்து விட்டதன்றோ; அப்படியிருக்க மேலே 'புள்ளுப் பிள்ளைக்கு இரை தேடும்' என்று எங்ஙனே சொல்லலாம்? மீன் அருமைப்பட்டிருந்தாலன்றோ இரைதேடவேண்டும்; கொள்வார் தேட்டமாம்படி அவை குறையற்றுக் கிடக்கும்போது அவற்றைத் தேடிப் பிடிப்பதாகச் சொல்லுவது பொருந்தாதன்றோ? ஆகவே 'இரை தேடும்' என்றவிது எங்ஙனே பொருந்தும்? என்றானும். இதற்குப் பட்டர் அருளிச்செய்ததாவது 'பிள்ளாய்! நீ கற்றவனாயினும் சொற்போக்கு அறிந்திலை; 'இரைதேடும்' என்றிவ்வளவேயில்லையே; '*பிள்ளைக்கு* இரைதேடும்' என்றிருப்பது கண்டாயே. அங்குள்ள மீன்கள் நிலமிதியாலே தூணும் துலாமும்போலே தடித்திருக்கும்; அவை குட்டிகளின் வாய்க்குப் பிடிக்கமாட்டாவாகையால் உரிய சிறுமீன்கள் தேடிப் பிடிக்கவேண்டு மத்தனையன்றோ?' என்றாராம். இதனால், மிகவும் கடினமாய் கஹனமான சாஸ்த்ரார்த்தங்களைக் கொள்ளமாட்டாத பால சிஷ்யர்களுக்குத் தகுதியாக [அவரவர்களின் அதிகாராநுகுணமாக] லலிதமான அர்த்தங்களை யெடுத்துரைக்கும் சாதுரியமுடையவர்களாகிய ஆசாரியர்களின் தன்மை விவக்ஷிதம். ... ... (*)

---

## அறுகாலசிறுவண்டு விசேஷார்த்தம்

ஆழ்வார்கள் பலவிடங்களிலும் வண்டாகக் கூறுவது பகவத் விஷயாநுபவ நிரதர்களான மஹநீயர்களை யென்க.

642. வண்டு *மதுவ்ரத* மென்று பேர்பெற்றிருக்கும். தேன் தவிர வேறொன்றைக் கொள்ளாது என்றபடி. அதுபோல * உளங்கனிந்திருக்குமடியவர்தங்க ளுள்ளத்துளூறிய தேனை * என்றும், *எனக்குத் *தேனே* பாலே கன்னலே யமுதே* என்றும், * *தேனை* நன்பாலைக் கன்னலை யமுதை * என்றும் பலவிடங்களிலும் தேனாகச் சொல்லப்பட்ட பகவத் விஷயத்தை விரும்பி * தவாம்ருதஸ்யந்திநி பாதபங்கஜே நிவேசிதாத்மா கதமந்யதிச்சதி, ஸ்திதேரவிந்தே மகரந்த நிர்ப்பரே மதுவ்ரதோ நேக்ஷுரகம் ஹி வீக்ஷதே * என்று ஆளவந்தாரருளிச்செய்தபடியே மற்றொன்றைக் கண்ணெடுத்துப் பாராமல் இதனை யநுபவிப்பதையே விரதமாகக் கொண்டிருப்பாரைச் சொல்லுகிறது.



643. * வரிவண்டு தேதென வென்றிசைபாடும் * யாழினிசை வண்டினங்கள் ஆளம்வைக்கும் * வண்டினங்கள் காமரங்களிசைபாடும் * என்கிறபடியே எப்போதும் முரல்வதே வண்டுகளுக்குப் பணி. அதுபோல * மச்சித்தா மத்கதப்ராணா: போதயந்த: பரஸ்பரம், கதயந்தச்ச மாம் நித்யம் துஷ்யந்தி ச ரமந்தி ச* என்று கீதாசார்யன் பணித்தபடியே அநவரதமும் எம்மானைச் சொல்லிப் பாடுவதையே போதுபோக்காகக் கொண்டவர்களும் * யாழினிசை வேதத்தியலான திருவாய்மொழியைப் பாடிக்களிப்பவர்களுமான பாகவதர்களைச் சொல்லுகிறது. * அறுகால் வரிவண்டுகள் *ஆயிர நாமஞ்சொல்லிச்* சிறுகாலைப் பாடும் * என்றும், * எல்லியம்போது இருஞ்சிறை வண்டு எம்பெருமான் குணம்பாடி * என்றும் அருளிச்செய்த பெரியாழ்வார் ஸ்வாபதேசப் பொருளையே ஒருவாறு வெளியிட்டருளினாராயிற்று. எம்பெருமானுடைய திருநாமங்களையும் திருக்குணங்களையும் பாடுகிற வண்டு காட்டில் திரியும் வண்டாக இருக்கமுடியாதன்றோ.

644. வண்டு *சஞ்சரீக* மென்று பேர்பெற்றிருக்கும்; ஓரிடத்தில் தங்கியிராது மதுவுள்ள விடமெங்கும் பறந்து திரியும். அதுபோல, * கண்டியூரரங்கம் மெய்யம் கச்சி பேர் மல்லையென்கிற திருப்பதிகள்தோறும் மண்டி, *எண்டிசையும் பேர்த்த கரம் நான்குடையான் பேரோதிப் பேதைகாள்! தீர்த்தகரராமின் *திரிந்து* * என்று பூதத்தாழ்வார் நியமித்தபடியே * கொங்குங் குடந்தையும் கோட்டியூரும் பேருமெங்குந் திரிந்து *பதியேபரவித் தொழும் தொண்டர்களாயிருக்குமவர்களைச் சொல்லுகிறது.

645. வண்டு எந்த ஸமயத்தில் எங்குச் செல்லவேணுமென்று நினைத்தாலும் அதற்குத் தடை கிடையாது. ஸந்நிதிகளில் கர்ப்பக்ருஹங்களி னுள்ளும் எம்பெருமான் திருமுடிமீதும் தாராளமாகப் புகக் காணாநின்றோம். அதுபோல, * பின்னிட்ட சடையானும் பிரமனு மிந்திரனும் துன்னிட்டுப் புகலரிய* என்றும் * சுந்தரர் நெருக்க விச்சாதரர் நூக்க * என்றும் சொல்லுகிறபடியே திருவாசல்களிலே ஸேவாபரரானவர்கள் நிறைந்து தலை நுழைக்க வொண்ணாதபடி நெருக்க, அதிகாரச் செல்வத்துடனே தடையும் சங்கையுமொன்று மின்றிக்கே உள்ளே புகுந்து

* ஒழிவில் காலமெல்லாமுடனாய் மன்னி வழுவிலாவடிமை செய்து வாழ்பவர்கள் விவக்ஷிதர்கள். இங்ஙனே மற்றும் காண்க.

---

## குருகுகொக்குநாரை விசேஷார்த்தம்

ஆழ்வார்கள் * கொக்கினங்காள் குருகினங்காள்! * அஞ் சிறையமட நாராய்! * செங்கால மடநாராய் * என்று விளித்துத் தூதுவிடுகிறார்கள். கொக்கு குருகு நாரை என்னுமிவை ஏக ஜாதீயங்களாகையாலே இவை மூன்றுக்கும் சேர ஸ்வாபதே சார்த்தம் விவரிக்கப்படுகிறது.

646. குருகை விளிக்கும்போது நம்மாழ்வார் * ஆசறு தூவி வெள்ளைக் குருகே! * என்று விசேஷணமிட்டுள்ளார். 'ஆசுஅறு' என்றது 'நிஷ்களங்கமான' என்றபடி. 'வெள்ளை' என்றது 'சுத்தமான' என்றபடி. ஆக இரண்டாலும் சுத்தியே சொல்லிற்றுகிறது. ஒவ்வொருவர்க்கும் இரண்டு விதமான சுத்தியுண்டே; தேஹசுத்தியும் மாநஸசுத்தியும்; இவை இரண்டு முடையாரைச் சொன்னபடி. * யஃ ஸ்மரேத் புண்டரீகாக்ஷம் ஸ பாஹ்யாப்யந்தரச் சுசிஃ * என்றதையும் நினைப்பது. நீராடி சுத்த வஸ்த்ரமணிந்துகொண்டு எச்சில் தீட்டுப்படாதபடி யிருப்பது பாஹ்ய சுத்தியாகும். காமக்ரோத லோபமோஹ மத மாத்ஸர் யாதிகளான தீய குணங்களினால் நெஞ்சில் அழுக்கு ஏறப்பெறும லிருப்பது ஆந்தர சுத்தியாகும். இவ்விரண்டு சுத்திகளாலும் குறையற்றவர்களைக் குருகாகக் கூறினபடி.

647. *வாயுந்திரையுகளுங் கானல் மட நாராய்!* என்கிற விடத்தில்—உணவைத் திரட்டுவதிலுண்டான ஊக்கத்தினால், அலைகள்வந்து கிட்டி மேலே தாவிப்போகா நிற்கிற கடற்கரை யிலே அசையாமலிருக்கிற நாரையே! என்று விளித்தவிதனால் * க்ரியோ வர்ஷதாராபிஃ ஹந்யமாநா ந விவ்யதுஃ, அபிபூயமாநா வ்யஸநைஃ யதா அதோக்ஷஜ சேதஸஃ * என்கிறபடியே எம்பெரு மான் பக்கலிலே நெஞ்சை ஊன்றவைத்து நிற்பதனால் ஸம்ஸாரக் கடலலைகளான தாபத்ரய வ்யஸனங்கள் மேன்மேலும் வந்து நெருக்காநின்றாலும் அவற்றுக்குவருந்தாதேயிருப்பதுவிவக்ஷிதம்.

648. *வைகல்பூங்கழிவாய் வந்துமேயுங் குருகினங்காள்!* என்றும் * காதல் மென்பெடையோடுடன்மேயுங் கருநாராய்! * என்றுஞ் சொல்லுகிறவிடங்களில் பேடைகளுடனே இனிய நீர்



நிலங்களில் தங்கியிருக்குமென்றவிதனால்—தங்களைப் பிரியில் தரியாத ப்ரேமமுடைய சிஷ்யர்களுடனேகூட மனத்துக்கினிய காலக்ஷேப கூடங்களிலே சென்று சேர்ந்து பகவத்குணாநுபவம் பண்ணுந் தன்மை விவக்ஷிதம்.

649. *செங்காலமடநாராய்!...நாளும் பைங்கான மீதெல் லாம் உனதேயாக * என்கிறவிதனால் * சரீரமர்த்தம் ப்ராணஞ் ச ஸத்குருப்யோ நிவேதயேத் * என்னுமடைவிலே ஆதரத்தோடு ஸமர்ப்பித்தவற்றை அங்கீகரிக்குந் தன்மை விவக்ஷிதம்.

650. *உறுமீன் வருமளவும் வாடியிருக்குமாங் கொக்கு* என்கிறபடியே அற்பமான உணவுகள் தென்பட்டால் அவற்றைப் பொருள்படுத்தாதேயிருந்து கனத்தவுணவுகளைக் கொள்ளுமாம் கொக்கு. அதுபோல, அஸாரமும் அல்பஸாரமுமான அர்த்தங் களைக் கொள்ளாதேயிருந்து ஸார ஸாரதர ஸாரதமங்களான அர்த்தங்களைக் கொள்வர்.

651. ஆக உள்ளும்புறமு மொத்த சுத்தியை யுடையவர் களாய், எம்பெருமான் பக்கலில் நெஞ்சை ஊன்றவைத்திருந்து ஸம்ஸாரதாபங்களுக்குத் தடுமாறுதவர்களாய், தங்களைப் பிரியில் தரிக்கமாட்டாதபடி பேரன்புவாய்ந்த சிஷ்யர்களுடனே கூடி யிருந்து பகவத் குணாநுபவம் பண்ணுகிறவர்களாய், க்ருதஜ்ஞர்க ளான சிஷ்யர்கள் ஆதரவோடளித்த உடல் பொருளுயிர் முதலான வற்றை ஏற்றுக்கொள்பவர்களாய், உயர்ந்த சாஸ்த்ரார்த்தங் களிலே அவதானமுடையவர்களான மஹான்கள் நாரை கொக்கு குருகாகக் கொள்ளத்தக்கவர்களென்றதாயிற்று. ... (*)

---

## ஹம்ஸ விசேஷார்த்தம்

அன்னங்களைப்பற்றியும் ஆழ்வார்கள் அருளிச்செய்கிறார் கள். இதைப்பற்றின அர்த்தங்களுங் கேண்மின்.

652. சாந்தோக்ய உபநிஷத்தில் ஜாநச்ருதியின் உபாக்கி யான மொன்று சொல்லப்பட்டிராநின்றது. ஜாநச்ருதி யென்கிற க்ஷத்ரியன் மிக்க பெருஞ்செல்வம் படைத்தவனாகையாலே அன்னதானம் முதலியன விசேஷமாகச் செய்துகொண்டிருந் தான். ஆனால் அவனுக்கு ப்ரஹ்மஜ்ஞானமென்பது சிறிதுமில் லாமலிருந்தது; பல்லபல்லாக்ஷரென்கிற இரண்டு மஹர்ஷிகள் அவனிடத்திலே இரக்கங்கொண்டு இவனுக்கு ப்ரஹ்மஜ்ஞான

முண்டாக்கவேணு மென்றெண்ணி இரண்டு ஹம்ஸரூபிகளாய்
அவன் சயனத்தின் மேலேபறந்துகொண்டுபோகையில் பல்ல
னென்கிற ஹம்ஸம் பல்லாக்ஷனென்கிற ஹம்ஸத்தைப்பார்த்து
'ஜாநச்ருதி மஹாப்ரபுவின் மேலே நிழல்படாதபடி கவனித்துப்
போ' என்று சொல்லிற்று. அதுகேட்ட அந்த ஹம்ஸம் "இவன்
மேல் நிழல்பட்டால் வரும் கெடுதல் என்ன? இவன் ரைக்வரைப்
போல் ப்ரஹ்மஜ்ஞாநியா என்ன? ஞானமற்றவனான இவனை நாம்
கௌரவிக்கவேணுமோ?' என்று அவஹேளனமாகச் சொல்ல,
அதைக்கேட்ட ஜாநச்ருதி துக்கங்கொண்டவனாய் அந்த ரைக்வ
ரைத் தேடிக்கொண்டு சென்று அநுவர்த்தித்து ப்ரஹ்மவித்
யையை உபதேசிக்க வேணுமென்று பிரார்த்திக்க, "சுச்ரூஷை
பண்ணாதவனுக்கு உபதேசிக்கப் போகாது" என்று அவர்
சொல்ல, "ப்ரஜைகளை ரக்ஷிப்பதாகிற பெரிய காரியத்திலீடுபட்
டிருக்கிறவெனக்கு சுச்ரூஷைபண்ண அவகாசமில்லையே"
என்ன, ஆதர பரீக்ஷார்த்தமாக "ஆனால் பஹுத்ரவ்யம்
கொண்டுவா" என்று ரைக்வர் சொல்ல, அப்படியே ஜாநச்ருதி
ஸர்வஸ்வத்தையுங் கொண்டுவந்து ஸமர்ப்பித்து அவரிடத்தில்
ப்ரஹ்மவித்யோபதேசம் பெற்றானென்று ஓதப்பட்டிருக்கிறது.
இங்ஙனம் ப்ரஹ்மஜ்ஞானத்திற்கு ஹம்ஸம் ப்ரேரகமாக இருந்த
தனால் ப்ரஹ்மஜ்ஞாநப்ரேரகர்களை ஹம்ஸமாக விவக்ஷித்ததாய்க்
கொள்ளலாம்.

653. நீரையும் பாலையும் கலந்துவைத்தால் அவற்றைப்
பிரிக்க வல்லமையுடையது ஹம்ஸம். * ஹம்ஸோ யதா க்ஷீரமிவ
அம்புமிச்ரம் * என்பர்களே. அதுபோல், ஸாரங்களும் அஸா
ரங்களும் கலந்த கட்டியாயிருக்கிற சாஸ்த்ரங்களில் ஸாரா
ஸாரங்களைப் பகுத்தறியுந்தன்மை விவக்ஷிதம்.

654. * அன்னமதாயிருந்து அங்கு அறநூ லுரைத்த *
* அன்னமாய் நூல் பயந்தான் * என்கிறபடியே வேத சாஸ்த்ரங்
களை வெளியிட்டது பகவதவதாரமான ஹம்ஸம். அதுபோலே
சிஷ்யர்களைக் குறித்து சாஸ்த்ரங்களை உபதேசிக்குந் தன்மை
விவக்ஷிதம்.

655. * ந பத்நாதி ரதிம் ஹம்ஸ: கதாசித் கர்த்தமாம்பஸி *
[ஹம்ஸமானது சேற்று நிலத்தில் ஒருபோதும் மனம் பொருந்தி
யிருக்கமாட்டாது] என்கிறபடியே ஹம்ஸம் சேற்றில் பொருந்
தாது. அதுபோல * மாறன் விண்ணப்பஞ்செய்த சொல்லார்



தொடையலிந்நூறும் வல்லார்—பிறப்பாம் பொல்லாவருவினை
மாய வன்சேற்றள்ளல் பொய்ந்நிலத்தே அழுந்தார் * (திருவிருத்
தம்) என்கிறபடியே ஸம்ஸாரமாகிற வலிய சேற்றுநிலத்திலே
பொருந்தமாட்டாத முமுக்ஷுக்கள் விவக்ஷிதர்கள்.

656. * பெடையோடன்னம் பெய்வளையார் தம் பின்
சென்று நடையோடியலி * (பெரிய திருமொழி) என்று ஹம்ஸ
மானது ஸ்த்ரீகளின் நடையழகைக் கண்டு தானும் அப்படி
நடக்கைக்காகப் பின் செல்லுமென்று சொல்லப்படுகிறது. அது
போல ஆசாரியர் * அன்ன நடைய வணங்கான பிராட்டியினு
டைய நடையைப் பின் செல்லுவர்களாம். அதாவதென்னென்
னில், பிராட்டியின் நடையாவது அவளுடைய நடத்தை. சேத
நர்களைக் குறித்து எம்பெருமான் திறத்தில் புருஷகாரம் செய்
வதே பிராட்டியின் ப்ரதாநக்ருத்யமாகும். அதை பாகவதர்கள்
அநுஸரிக்கையாவது, தாங்களும் அப்படி புருஷகாரக்ருத்யத்
திலே ஊன்றியிருக்கையாகும். பிராட்டி புருஷகாரம் செய்யா
விடில் எம்பெருமான் முக்தி ஸாம்ராஜ்ய மளிக்கமாட்டாதது
போலவே பாகவதர்கள் [ஆசார்யர்கள்] புருஷகாரம் செய்யா
விடினும் அதனை அளிக்கமாட்டானென்பதை * தத்தே ரங்கீ
நிஜமபி பதம் தேசிகாதேசகாங்க்ஷீ * என்கிற ந்யாயதிலக ஸ்ரீஸூக்
தியினால் ஸ்ரீ தேசிகன் வெளியிட்டார்.

657. * அன்னமென்கமலத்தணிமலர்ப்பீடத்து அலைபுன
லிலைக் குடைநீழல்......வீற்றிருக்கும் * (பெரிய திருமொழி)
என்று, ஹம்ஸமானது மேலேயெழுந்த தாமரையிலையைக் குடை
யாகக்கொண்டு வீற்றிருக்குமென்றது.—* அக்கமலத்திலைபோ
லுந் திருமேனியடிகள் * என்கிற திருவாய்மொழியினால் எம்பெரு
மானுடைய திருமேனி தாமரையிலையாகச் சொல்லப்படுவதால்
பத்மபத்ர நிபச்யாமளமான அந்தத் திருமேனியை பாகவதர்கள்
தங்களுக்கு ஸம்ஸார துக்க ஆதபம் தட்டாதபடி ஒதுங்க நிழலாக
வுடையராயிருப்பர். * வாஸுதேவ தருச்சாயா *

658. * அனனம் செந்நெலொண்கவரியசைய வீற்றிருக்
கும் * (பெரிய திருமொழி) என்று, ஹம்ஸம் பக்வ பலமானசெந்
நெலின் அசைவைக் கவரியாக [சாமரமாக]க் கொண்டு வீற்
றிருக்குமென்றது. * அஹமந்ந மஹமந்ந மஹமந்நம் * என்னும்
படி பரிபக்குவமான ஞானத்தையுடையரான சிஷ்யர்களைச் செந்
நெற் கதிர்களாகக் கொள்ளக்கடவது; அவர்கள் சாமரைவீசுதல்

முதலிய கைங்கர்ய வ்ருத்திகளைச் செய்ய ஆசாரியர்கள் எழுந்தருளி யிருக்கும்படியைச் சொல்லுகிறது.

659. * சங்கமவை முரலச் செங்கமல மலரையேறி அன்னமலி பெடையோடு மமரும் * (பெரிய திருமொழி) என்று, ஹம்ஸமானது சங்குகளின் முழக்கத்தை இனிதாகக் கேட்டுக் கொண்டிருக்குமென்றது. சுத்த ஸ்வபாவர்களான சிஷ்யர்களைச் சங்கு என்கிறது. அன்னவர்கள் செய்யும் ஸ்துதிகோஷங்களைக் கேட்டுக்கொண்டு ஆசாரியர்கள் எழுந்தருளியிருக்கும்படியைச் சொன்னவாறு.

660. *வரிவண்டிசைபாட அன்னம் பெடையோடு உடன் நாடும் * (பெரிய திருமொழி) என்று, ஹம்ஸமானது வண்டுகளின் மிடற்றோசையைப் பாட்டாகக் கொண்டிருக்குமென்றது. வண்டுகள் தேனையே போக்யமாகக் கொண்டிருப்பதுபோல * உளங்கனிந்திருக்கு மடியவர்தங்களுள்ளத்துளூறிய தேனாகிய பகவத் விஷயத்தையே போக்யமாகக்கொண்டிருக்கும் பாகவதர் இசையை [கீர்த்தியை]ப் பாடும்படி எழுந்தருளியிருப்பர்கள் ஆசாரியர்கள். இங்ஙனே மற்றுங்காண்க. ... (*)

---

## குயில் விசேஷார்த்தம்.

661. * போற்றி யானிரந்தேன் புன்னைமேலுறை பூங்குயில்காள்! * என்று நம்மாழ்வாரும், * புன்னை குருக்கத்தி நாழல் செருந்திப் பொதும்பினில் வாழுங்குயிலே! * என்று ஆண்டாளும் மற்றும் பலரும் புன்னை மரத்தைக் குயில்களுக்கு உறைவிடமாகச் சொல்லுகிறார்கள். இங்ஙனம் சொல்லுகிறவிதனால் * புந்நாகதல்லஜம் அஜஸ்ர ஸஹஸ்ரகீதி ஸேகோத்த திவ்யநிஜ ஸௌரபமாமநாம: * என்று ஸ்ரீரங்கராஜஸ்தவத்தில் பட்டர் அருளிச்செய்தபடி திருவாய்மொழியின் சொற்சுவையும் பொருட்சுவையு மூறின கோயிற்புன்னை மரத்தின் கீழே அமர்ந்து விசேஷார்த்தங்கள் கேட்டு வளருமவர்கள் விவக்ஷிதர்கள். திருவரங்கம் பெரியகோயிலில் பூருவாசாரியர்களின் காலந்தொடங்கித் திருப்புன்னைமரம் ஸுப்ரஸித்தம். நம் முதலிகள் அதன் கீழேயிருந்து திருவாய்மொழியின் அர்த்தங்களைச் சிந்தனை செய்வார்களென்பது ஸ்ரீ வசநபூஷண வ்யாக்யாநாதிகளில் ப்ரஸித்தம். திருவாய்மொழியில் (3—5—4) *தம்பிறப்பால் பய



னென்னே சாதுசனங்களிடையே * என்றவிடத்து ஈட்டிலும் " திருப்புன்னைக் கீழே ஒருவரிருக்குமிடத்திலே நம் முதலிகள் பத்துப்பேர் கூட நெருக்கிக்கொண்டிருக்கச் செய்தே" என்றருளிச் செய்யப்பட்டுள்ளது. மேலே யெடுத்துக்காட்டிய பட்டருடைய ஸ்தவ ஸ்ரீஸூக்தியில் * *அஜஸ்ர ஸஹஸ்ரகீதி ஸேகோத்த திவ்யநிஜ ஸௌரபம்—புந்நாகதல்லஜம்* " என்று அந்தத் திருப்புன்னையின் பெருமை நன்கு விசதமாக்கப்பட்டது. ஆகவே அந்தத் திருப்புன்னையின் நிழலிலேயிருந்து * குயில் நின்றால் பொழில்சூழ் குருகூர்நம்பி பாவினின்னிசை பாடிக்களிக்குமவர்கள் குயிலாக விவக்ஷிதர்கள்.

662. * மாம்பொழில் தளிர்கோதிய மடக்குயில் வாயது துவர்ப்பு எய்தத் தீம் பலங்கனி தேனதுநுகர் * (பெரியதிருமொழி) என்று குயில்களின் ஓர் இயற்கை கூறப்பட்டது. (அதாவது) முதலில் மாந்தளிர்களிலே வாய்வைத்ததனால் வாய் துவர்த்துப் போக, அந்தத் துவர்ப்பு நீங்குதற்காகப் பலாப்பழத்தேனைப் பருகுமியல்வு சொல்லிற்று. இதனால், முதலில் ஸாமாந்ய சாஸ்திரங்களிலே வாய்வைத்துப் பிறகு விசேஷ (அத்யாத்ம) சாஸ்திரங்களிலே மிகப் பேரின்பமாகப் போதுபோக்கும் பக்தர்களின்படி சொல்லிற்றாகிறது.

663. * வநப்ரியஃ *பரப்ருத:* கோகில: பிக: * என்கிற அமரகோசத்தின்படி குயில்களுக்கு வடமொழியில் *பரப்ருத*மென்று பெயர். காக்கையின் கூட்டிலே கொண்டுவிடப்பெற்று அவற்றால் போஷிக்கப்பட்டு வளருமவை குயில்கள்; அதுபோல, பரனான ஆசார்யனால் போஷிக்கப்பட்டு வளரும் குருகுலவாஸிகளைச் சொல்லிற்றாகிறது.

664. * *வஸந்தகாலே ஸம்ப்ராப்தே காக: காக: பிக: பிக:* * என்கிறபடியே சில கால விசேஷங்களில் குயில் தன் மிடற்றோசை காட்டி வீறுபெறும். அதுபோல ஆசிரியர்களும் ஸமய விசேஷங்களிலே கம்பீரமாக வாய்விட்டு உபந்யஸித்து மற்றையாரிற் காட்டில் தமது வைலக்ஷண்யத்தை விளக்குவர்கள்.

665. * *பிகஃ கூஜதி பஞ்சமம்* * என்று குயில் கூவும் இசையானது பஞ்சம மெனப்படும். அப்படியே ஆசிரியர்கள் வாய்விட்டு அருளிச்செய்யுமது நான்கு வேதங்களுக்கு அடுத்தபடியாக ஐந்தாவது வேதமோ! என்னலாம்படி யிருக்கும்.

'' அல்லி மலர்ப்பாவைக்கு அன்பரடிக்கன்பர் சொல்லுமவிடு சுருதியாம் '' என்ற ஞானஸாரப் பாசுரமும் காண்க.

666. * குயிலே! என் வேங்கடவன் வரக் கூவாய் * *குயிலே! என் கருமாணிக்கம் வரக்கூவாய்* என் கடல் வண்ணனைக் கூவு கருங்குயிலே!* என்றிப்படி ஆண்டாள் பாசுரங்களினுலும், * மணிவண்ணனை வரக்கூவாய் பூங்குயிலே ! * என்ற திருமங்கையாழ்வார் பாசுரத்தாலும் எம்பெருமானைக் கூவி வருவிக்கவல்லது குயில் என்று விளங்குகிறது. அதுபோல, தங்களுடைய உக்திமாத்ரத்தாலே எம்பெருமானைக் கைப்படுத்த வல்ல பேராசிரியர்கள் குயிலாக விவக்ஷிதர்கள்.

இங்ஙனே மற்றுங்காண்க. ... ...... (*)

## கிளி விசேஷார்த்தம்

667. * சுக! பஞ்ஜரபந்தஸ் தே மதுராணும் கிராம் பலம் * என்று, கிளி மதுரமான வாக்குப்படைத்ததனுல் பந்தப்பட்டிருக்கும். ஆசிரியர்களும் மதுரமான வாக்குப் படைத்ததனுல் சிஷ்யர்போல்வாருடைய நிர்ப்பந்தங்களுக்குள்ளாகி யிருப்பர்.

668. '' சொல்லிற்றைச் சொல்லுமாம் கிளிப்பிள்ளை '' என்னுமாபோலே * முன்னோர் மொழிந்த முறைதப்பாமல் கேட்டுப் பின்னோர்ந்து தாமதனைப் பேசும் ஏககண்டர்களான ஆசிரியர்களைக் கிளி யென்கிறது.

669. கிளி மேனியழகிலே மேம்பட்டது. ஆசாரியர்களின் வடிவழகும் சிஷ்யர்களுக்கு உத்தேச்யமாதலால் அப்படிப்பட்ட அழகு படைத்தவர்கள். * ஆசாரியன் சிச்சனுருயிரைப் பேணுமவன், தேசாரும் சிச்சனவன் சீர்வடிவை* என்ற உபதேசரத்தின மாலைப் பாசுரம் இங்கே அநுஸந்தேயம்.

670. கிளி வலையில் அகப்படும். அதுபோல, * உன் தாமரைத் தடங்கண் விழிகளின் அகவலைப் படுப்பான் * என்கிற திருவாய்மொழியின்படியே எம்பெருமானது திருக்கண்வலையிலே அகப்படுவர்கள் ஆசிரியர்கள்.

671. * வளர்த்ததனுல் பயன்பெற்றேன் வருகவென்று மடக்கிளியைக் கை கூப்பி வணங்கினளே * (திருநெடுந்தாண்டகம்) என்கிறபடியே வளர்த்தெடுப்பாருடைய கொண்டாட்டத்திற்குக் கொள்கலமா யிருக்குங் கிளி. ஆசிரியர்களும் உகந்து



தொழும்படியான பெருமைவாய்ந்த சிஷ்யர்களைச்சொன்னவாறு. நஞ்சீயர் நம்பிள்ளைக்குச் சொன்ன வார்த்தையை நினைப்பது.

672. * இன்னடிசிலொடு பாலமுதூட்டியெடுத்தவென் கோலக்கிளியை * என்று ஆண்டாளருளிச்செய்தபடியே நல்ல மதுர பதார்த்தங்கள் ஊட்டப்பெறும் கிளி. * எனக்கென்றும் தேனும்பாலு மமுதுமாய திருமால் திருநாமம்...நமோ நாராயணமே * என்று பரமபோக்யமான திருமந்திரம் முதலியவை ஊட்டப்பெறும் சிஷ்யர்கள் விவக்ஷிதர்கள்.

இங்ஙனே மற்றுங்காண்க. ... ... (*)

## மயில் விசேஷார்த்தம்

* இடையில்லையான் வளர்த்த கிளிகாள்...மயில்காள் ! * என்றும் * புற்றரவல்குல் புனமயிலே! * என்றும் சொல்லுகிற விடங்களில் மயிலின் விசேஷார்த்தம் கேண்மின்.

673. ஸந்தோஷ காலங்களிலே தோகையை விரித்துக் கூத்தாடும் மயில். ஆசாரியர்களும் சிஷ்யர்களிடத்தில் உகப்பு அதிகரித்தவாறே மறைத்துவைத்திருந்த அர்த்த விசேஷங்களையும் விவரித்தருள்வர்கள்.

674. மயில் முகிலைக்கண்டவாறே துள்ளும். ஆசிரியர்களும் முகில்வண்ணனுடைய ப்ரஸ்தாவம் வந்தவாறே * கார் முகில்போல் வண்ணன்கண்ண னெம்மானைச் சொல்லிப்பாடி யெழுந்தும் பறந்தும் * என்கிற திருவாய்மொழியின்படியே ஸஸம்ப்ரமந்ருத்தம் பண்ணுவர்கள்.

675. மயிலின் நிழல்பட்டவாறே நச்சுப் பூச்சிகள் நசிக்கும். * யத்ராஷ்டாக்ஷர ஸம்ஸித்தோ மஹாபாகோ மஹீயதே, ந தத்ர ஸஞ்சரிஷ்யந்தி வ்யாதி துர்ப்பிக்ஷதஸ்கரா: * என்கிறபடியே மஹான்களின் கண் வட்டத்தில் பகைபசிதீயனவெல்லாம் பாறியொழியும்.

676. 'மயிலே மயிலே! இறகு போடென்றால் போடுமா?' என்று பழமொழி. மயில் தன்னை நிர்ப்பந்தித்தவர்களுக்கே இறகு தரும். ஆசாரியர்களும் பெரும்பாலும் அநுவ்ருத்தியாலே ப்ரஸந்நராவர்கள். எல்லாருமே எம்பெருமானரைப்போலே க்ருபாமாத்ர ப்ரஸந்நாசார்யர்களாயிருப்பர்களோ ?

677. * கருங்கண் தோகைமயிற் பீலியணிந்து * என்றும் * மகுடாலம்பிமயூர பிஞ்சமாலாஃ * என்றும் சொல்லுகிற படியே மயிலின் ஏகதேசம் எம்பெருமான் திருமுடிமீது ஏறி விளங்கும். ஆசிரியர்களும் *மூர்த்தாநம் பத்யுராரோஹ* என்ற கணக்கிலே எம்பெருமான் திருமுடி மீது ஏறித் திகழ்வர்கள். எம்பெருமான் தலைதுலுக்கிக் கொண்டாட நிற்பர்களென்கை.

## வள்ளல் பெரும்பசு விசேஷார்த்தம்

* வாங்கக்குடம் நிறைக்கும் வள்ளல் பெரும்பசுக்கள் * என்றும் * மாற்ருதே பால்சொரியும் வள்ளல் பெரும் பசுக்கள் * என்றும் * கற்றுக்கறவைக் கணங்கள் பல கறந்து * என்றும் பசுக்களாகச் சொல்லப்படுமவர்கள் ஞானம்மிக்க ஆசிரியர்களே· எங்ஙனேயெனில் ;

678. கோதாநம் பண்ணும்போது * கவாம் அங்கேஷு திஷ்டந்தி புவநாநி சதுர்தச * என்று பசுவின் அவயவங்களிலே பதினன்கு லோகங்களு முள்ளனவாகச் சொல்லுவர்கள். * அங்காநி வேதாச் சத்வாரோ மீமாம்ஸா ந்யாயவிஸ்தரஃ, புராணம் தர்மசாஸ்த்ரம் ச வித்யா ஹ்யேதாச் சதுர்தச * என்கிற பதினன்கு வித்யைகளும் நிரம்பியிருக்கும் ஆசிரியர்களிடத்தே. * அதீதி போதாசரண ப்ரசாரணை: தசாச் சதஸ்ரஃப்ரணயந்நு பாதிபிஃ, சதுர்தசத்வம் க்ருதவாந் குதஃ ஸ்வயம் ந வேத்மி வித்யாஸு சதுர்தசஸ்வயம்* என்கிற நைஷத ச்லோகங்கொண்டும் கூறலாம். (மிக அருமையானது இந்த சுலோகம்.)

679. மிருக ஜாதிக்குள்ளே பரமபாவனமாகக் கொண்டாடப்படும் பசு.—மநுஷ்ய ஜாதிக்குள்ளே பரமபவித்திரர்களாகக் கொண்டாடப்படுவர்கள் ஆசிரியர்கள்.

680. இதர ஜந்துக்களிடத்தே ஹேயமாகக் காணும் மல மூத்திரங்களே பசுக்களிடத்து வந்தால் பரமோத்தேச்யங்களாகின்றன.—பிறர்களிடத்தே ஹேயமாகக் காணும் வம்புப் பேச்சுக்களே ஆசிரியர்களின் திருவாக்கில் தோன்றினல் *கலையிலங்கு மொழியாளர் * என்னும்படியே வியக்கத் தக்கவையாகின்றன.

681. முமூர்ஷுதசையில் கோதாநம் சிறந்ததென்பர். * யதா யதா ஹி தர்மஸ்ய க்லாநிர் பவதி பாரத!, அப்யுத்தாநம் அதர்மஸ்ய ததா ஆத்மாநம் ஸ்ருஜாம்யஹம் * என்று கீதையில்



பணித்தபடியே தர்மதேவதையின் முமூர்ஷு தசையிலே ஜ்ஞாநிகளாகிற காமதேனுக்களை எம்பெருமான் தானம் பண்ணுவன், மேலே உதாஹரித்த கீதாச்லோகத்தில் 'ஆத்மாநம்' என்றது * ஜ்ஞாநீ து ஆத்மைவ மே மதம் * என்கிற கீதாசார்யனது கருத்தின்படியே ஜ்ஞானிகளைச் சொல்லுகிறதென்று ஒரு நிர்வாஹமுண்டென்பது இங்கு உணரத்தக்கது.

682. பசுக்கள் க்ருஹங்களில் புழைக்கடைகளிலே தங்கி நிற்கும். (அதாவது கடைசி ஸ்தானத்தில் நிற்குமென்கை.) ஆசிரியர்கள் *அடியாரடியார் தம்மடியாரடியார்...தம் அடியாரடியோங்களே * த்வத்ப்ருத்யப்ருத்யபரிசாரக ப்ருத்ய ப்ருத்ய ப்ருத்யஸ்ய ப்ருத்யஃ* என்று ஸப்தபர்வ வ்யவதாநதுங்கமான சேஷத்வ காஷ்டையிலே [கடையான ஸ்தானத்திலே] நிற்பர்கள். " த்வத்தாஸதாஸகணநாசரமாவதௌ " என்றுர் மாமுனிகள்.

683. பசுக்கள் நான்கு முலைக்கண்களாலும் பால் சுரக்கும். ஆசாரியர்களும் நான்கு ஹேதுக்களாலே பாலேபோல் சீரிய நற்பொருளைச் சுரப்பர்கள். அவையாவன ;—1. எம்பெருமானது கட்டளை. 2. தம்முடைய ஹார்த்தமான அநுபவத்திற்குப் பரீவாஹம் வேண்டுதல். 3. சிஷ்யர்களின் பிரார்த்தனை. 4. அது இல்லையாயினும் சிஷ்யர்களின் அநர்த்தங்கண்டு பொறுக்கமாட்டாமை. ஆக இந்நான்கு ஹேதுக்களும் நான்கு முலைக்கண்கள் போல்வன.

684. பசுக்களுக்கு உணவு மூவகைப்படும். புல், தண்ணீர், தானியங்களின் பொட்டு. இங்ஙனே ஆசாரியர்களுக்குமுண்டு. ஸாமாந்ய சாஸ்த்ரங்களை யதிகரித்தல் தானியங்களின் பொட்டு ஸ்தானத்திலேயாம். உபநிஷத்து முதலியவற்றையோதுதல் புல்லின் ஸ்தானத்திலேயாம். அருளிச்செயல்களையோதுதல் தண்ணீர் ஸ்தானத்திலேயாம்.

685. உட்கொள்வது எதுவானுலும் வெளிவருவது அமிருதமேயாம் பசுக்களுக்கு. ஆசாரியர்களும் அமுதமென்மொழியாளர். * அம்ருதம் துஹாநா: *

686. கன்று இல்லையெனில் பசு பால் சுரவாது. பரிப்ரச்நஸாபேக்ஷர்களான ஆசாரியர்களுக்கும் ச்ரோதாக்கள் இல்லையெனில் சொல்லத்தோன்ருது.

687. * மாநிதி கபிலை * என்கிறபடியே எம்பெருமான் நாடோறும் காலையிலே [விச்வரூபத்திலே] பசுக்களைக் கண்டே

யாகவேண்டும். அதுபோல அப்பெருமான் ஆழ்வாராசாரியர் களின் தனியன்களை நிச்சலும் கேட்டேயாகவேணும்.

688. * ஆனின் மேயவைந்தும் நீ * என்கிற பஞ்சகவ்யங் களைத் தந்து புனிதமாக்கும் பசு; பஞ்சஸம்ஸ்காரம், அர்த்தபஞ்ச கம், பரத்வாதி பஞ்சகம் என்று ஐந்துஐந்தானவற்றை யளித்துப் புனிதராக்குவர்கள் ஆசாரியர்கள்.

689. ஏற்ற கலங்களை நிறைக்கும் பசுக்கள். வாய்த்த ஸத் பாத்ரங்களான ஸச்சிஷ்யர்களை ஞானத்தால் நிறைப்பர்கள் ஆசிரியர்கள்.

690. பசுக்களானவை ஏந்தி வைக்கவுரிய பாலையும் சுரக் கும்; முலைக்கடுப்பாலே தரையிலே பீச்சுவதுமுண்டு. ஆசிரி யர்கள், பின்புள்ளார்க்கும் பயன்படுமாறு சிஷ்யர்களால் ஏடு படுத்தப்படும் ச்ருதப்ரகாசிகா, ஈடு முப்பத்தாறுயிரப்படி போன்ற ஸ்ரீஸூக்தி யமுதங்களையும் தந்தருள்வர்கள்; * ஸ்வை ராலாபைঃ சுபைঃ ச்ரோத்ரூந் நந்தயந்தம் * என்கிறபடியே தற்காலத்தவர்களுக்குச் செவிக்கினிய செஞ்சொற்களையும் பெய் தருள்வர்கள். இங்ஙனே மற்றும் பலவுங் காண்க. ... (*)

## மேக விசேஷார்த்தம்

ஆழ்வார்கள் * முகில்வண்ணன் * என்றும் * மின்னுமா மழை தவழும் மேகவண்ணா! * என்றும் அருளிச்செய்யுமிடங் களிலே எம்பெருமானுக்கும் மேகத்திற்கும் பொருந்தக்கூடிய உவமைகள் கீழே "முகில்வண்ணன் விசேஷார்த்தங்கள்" என்ற மகுடத்தின்கீழ் நிரூபிக்கப்பட்டன; அதுவன்றியும், திரு விருத்தத்தில் *போவான் வழிக்கொண்ட மேகங்களே!* என்றும் * மேகங்களோவுரையீர் * என்றும் இங்ஙனே சில விடங்களில் மேகமாகச் சொல்லுவது தொண்டர்களை யாதலால் இதற்குரிய பொருத்தங்கள் ஈண்டு நிரூபிக்கப்படுகின்றன.

691. மேகமானது கடல்நீரை முகந்துகொண்டு வர்ஷிக் கும். ஆசிரியர்கள் * ச்ருதி ஸாகராத் * என்றும் * த்ராவிட வேத ஸாகரம் * என்றும் சொல்லப்படுகிற உபயவேதக் கடலி லுள்ள ரஸப்பொருள்களை முகந்துகொண்டு வர்ஷிப்பர்கள்.

692. மேகமானது உப்புத் தண்ணீரையும் தன் வாய்க் கொண்டு மிக மதுரமாக்கி வர்ஷிக்கும். ஆசிரியர்கள் சாஸ்த்ரக் கடல்களிலே விரஸமாகக் காணும் பொருள்களையும் தங்கள் வாக்காலே மிக மதுரமாக்கி உபந்யஸிப்பர்கள்; "மேகம் பருகின ஸமுத்ராம்புபோலே நூற்கடற்சொல் இவர் வாயனவாய்த் திருந்தினவாறே ஸர்வதா ஸர்வோப ஜீவ்யமாமே" என்கிற ஆசார்யஹ்ருதய ஸ்ரீஸூக்தி இங்கே அநுஸந்தேயம்.



693. மேகமானது * உயிரளிப்பான் மாகங்களெல்லாந் திரிந்து * என்கிறபடியே உலகமெல்லாம் சென்று வேண்டின விடத்தே பெய்யும். ஆசிரியர்கள் * எண்டிசையும் பேர்த்தகர நான்குடையான் பேரோதிப்பேதைகாள்! தீர்த்தகரராமின்திரிந்து * என்கிற பூதத்தாழ்வாரது நியமனப்படியே சிஷ்யர்களுள்ளவிட மெங்கும்ஸஞ்சரித்துநல்லஅர்த்தங்களைப்பெய்துஉபதேசிப்பர்கள்.

694. மேகமானது பள்ளமான விடங்களிலே பெய்து அவற்றைப் பூரிக்கும். ஆசிரியர்களும் *நீசனேன் நிறையொன்று மிலேன் * என்றிருக்கும் பரமஸாத்விகர்களிடத்தே அர்த்தங் களைத் தேக்கிவைப்பர்கள்.

695. மேகமானது எப்போதும் பெய்யாது; சில கால விசேஷங்களிலே பெய்யும். ஆசிரியர்களும் தாபம் மிக்கவர்கள் வந்து வேண்டுங்காலங்களிலும், * முலைக்கடுப்பாலே தரையிலே பீச்சுங்கணக்கிலே தாங்கள் தரிக்கைக்காக வாய்விட்டுப் பேச வேண்டிய காலங்களிலும் அர்த்தங்களை வர்ஷிப்பர்கள்.

696. மேகம் பெய்யவேண்டிய காலங்களிலே பெய்யா விடில் உலகில் தீங்கு மலியும். ஆசிரியர்களும் உபதேசிக்க வேண்டிய காலங்களிலே உபதேசியாதொழியில் தேஹாத்ம ப்ரமம், ஸ்வஸ்வாதந்த்ர்ய ப்ரமம், அந்ய சேஷத்வ ப்ரமம், ஸ்வரக்ஷணே ஸ்வாந்வயம், ஆபாஸபந்து ஸங்கம், விஷய ப்ரா வண்யம் முதலான தீங்குகள் மலியும்.

697. * திங்கள் மும்மாரிபெய்து * என்கிறபடியே மேகமா னது மூன்று மழைபெய்து வாழ்விக்கும். ஆசாரியர்களும், ரஹஸ்யத்ரயம், தத்வத்ரயம், (கீதையில்) ஷட்கத்ரயம், தத்வஹித புரு ஷார்த்தங்கள், பரபக்தி பரஜ்ஞாந பரமபக்திகள் என்றிங்ஙனே யான மும்மாரிகளைப் பெய்து வாழ்விப்பர்கள்.

698. மேகமானது எவ்வளவு வர்ஷித்தாலும் வர்ஷித்தோ மென்றிராமே மேன்மேலும் வர்ஷிக்கையில்தானே ஊக்கங் கொண்டிருக்கும். ஆசாரியர்களும் உபதேசங்களையும் உபந்யா ஸங்களையும் எவ்வளவு நிகழ்த்தினாலும் த்ருப்தி பெறுமே மேன் மேலும் வர்ஷிக்கக் குதூஹலங்கொண்டே யிருப்பர்கள்.

மேகமானது கைம்மாறு கருதாமே தன்பேருக வர்ஷிக்கும். ஆசாரியர்களும் ஒரு ப்ரயோஜனத்துக்காகவன்றிக்கே அநந்ய ப்ரயோஜநர்களாய்ப் பொழிவர்கள்.

மேகமானது சில ஸமயங்களிலே நாலு சிறு துளிகளைப் பெய்துவிட்டுப் போய்விடும்; மற்றுஞ் சில ஸமயங்களிலே *கடல்வாய்ச் சென்று மேகம் கவிழ்ந்திறங்கிக் கதுவாய் பட நீர் முகந்தேறி யெங்கும் குடவாய்பட நின்று மழைபொழியும் * * தாழாதே சார்ங்க முதைத்த சரமழைபோல் * என்கிறபடியே கனக்கப் பொழியும். ஆசாரியர்களின்படியு மிப்படியே. செவியிலே நாலு வார்த்தைகளைச் சொல்லி நிற்கிற காலமுமுண்டு; *ஏற்ற கலங்க ளெதிர்பொங்கி மீதளிப்ப மாற்ருதே பால் சொரியும் வள்ளல் பெரும் பசுக்கள்போலே வாங்கக் குடம்நிறையப் பொழிவதுமுண்டு.

699. மேகம் சில விடங்களிலே சில காலங்களிலே பெய்கிற நீரானது முத்தாகி மேன்மை பெறும். ஆசாரியர்கள் சில வ்யக்தி விசேஷங்களிலே உபதேசிக்கிற அர்த்த விசேஷங்கள் முத்துப்போலே பின்புள்ளார்க்கும் அணிகலமாயிருந்து அநர்க்கமாயிருக்கும்.

700. மேகம்பெய்த நீர், நதிகள் குளங்கள் ஏரிகள் கிணறுகளாகிய இவற்றில் சேர்ந்தால் அனைவர்க்கும் உபஜீவ்யமாய், மற்றை யிடங்களில் தேங்கினுல் வாய்வைக்க வொண்ணுதாய்ப் போம். ஆசாரியர்கள் வர்ஷித்த அர்த்தங்களும் நல்ல ஞானத் துறைகளிலே சேர்ந்தால் * பூர்வே பூர்வேப்யோ வச ஏத தூசு: * என்ற காடக ச்ருதியின் கணக்கிலே உபதேசபரம்பரையிலே வந்து உபஜீவ்யமாகும்; அவையே அநதிகாரிகள் பக்கலிலே தேங்கினுல் அப்ரயோஜநமாயொழியும்.

மேகம் * எத்தனையும் வான் மறந்தகாலத்தும் பைங்கூழ்கள் மைத்தெழுந்த மாமுகிலே பார்த்திருக்கும் * என்கிறபடியே பயிர்களால் ப்ரதீக்ஷிக்கப்பட்டு அவற்றை வாழ்விக்கும். *நீர்காலத்தெருக்கிலம்பழவிலைபோல் வீழ்வேனை* என்கிறபடியே எருக்கிலைபோன்றவற்றை மாளச்செய்யும். ஆசாரியர்கள்படியு மிப்படியே; * நாட்டிய நீசச் சமயங்கள் மாண்டன, நாரணனைக் காட்டிய வேதம் களிப்புற்றது, தென்குருகைவள்ளல் வாட்டமிலா வண்தமிழ்மறைவாழ்ந்தது* என்றது காண்க.

அமுதமொழியாயிரத்தில் ஏழாவதுநூறு முற்றிற்று.



# (எட்டாவது நூறு)

## மேகவிடுதூதின் விசேஷார்த்தங்கள்

701. நாச்சியார் திருமொழியில் எட்டாவது பதிகம் * *விண்ணீல மேலாப்பு* * என்பது. இதில் ஆண்டாள் மேகத்தைத் தூதுவிடுகிருளென்பது "மேகத்தை வேங்கடக்கோன் விடுதூதில் விண்ணப்பம்" என்கிற நிகமனப் பாசுரத்தினுலும் தெளிவாகும். தூது செல்லுவதற்கு யோக்யதையற்றதான மேகத்தைத் தூதனுப்புதல் பொருந்துமோ? என்று ஒரு சங்கை தோன்றும். மேகஸந்தேசமென்கிற வடமொழி நூலொன்றை இயற்றிய காளிதாஸ மஹா கவியானவர்—"*தூமஜ்யோதிஸ் ஸலில மருதாம்*" என்கிற ச்லோகத்தில் இத்தகைய சங்கையைத் தோற்றுவித்துக் கொண்டு—"*காமார்த்தா ஹி ப்ரக்ருதிக்ருபணு: சேதநாசேதநேஷு*" என்று ஒருவாறு ஸமாதான முரைத்து வைத்தார். காமத்தின் மிகுதியினுல் சேதந அசேதந விவேகமின்றிக்கே யொழிந்ததென்று காட்டினுராயிற்று. இதனுல், அந்த மேகத்தை அசேதநமென்றே ஸித்தாந்தம் செய்ததாகத் தேறிற்று. ஆண்டாள் தூதுவிட்ட மேகம் அசேதநமன்று. அறிவில் தலைநின்ற பரமாசாரியரையே தூது விட்டாள்.

702. ஆண்டாள் மேகமாகக் கூறினது ஆசார்யஸார்வபௌமரான ஸ்வாமி எம்பெருமானுர்தம்மையே என்று உணரவேணும். இராமானுச நூற்றந்தாதியில் "குணந்திகழ் கொண்டல் இராமானுசன் எங்குலக்கொழுந்தே" என்று எம்பெருமானுரை மேகமாகக் கூறியிருப்பதுங் காண்க. (கொண்டல்—மேகம்.) *விண்ணீலமேலாப்பு என்கிற இப்பதிகத்தில் பாசுரந்தோறும் ஆண்டாள் மேகத்திற்கு இடுகிற அடைமொழிகள் எம்பெருமானுர்க்கு மிகவும் பொருத்தமா யிருக்கின்றனவென்பதை ஈண்டு நிரூபிப்போம்.

703. முதற்பாட்டில், *மேலாப்பு விரித்தாற்போல் மேகங்காள்! * என்றுள்ளது. மேலாப்பாவது மேற்கட்டு; விதானமெனப்படும். அது எப்படியிருக்கு மென்றுல் விசித்திரமான வர்ணங்கள் அமையப்பெற்றிருக்கும். ஸுதர்சந சதகத்தில் ஜ்வாலா வர்ணனத்தில் ஐந்தாவது ச்லோகம் - * ச்யாமம் தாம ப்ரஸ்ருத்யா க்வசந பகவத:* என்பது. அதனுல் விதானமென்பது நாநாவகையான வர்ணங்கள் அமையப்பெற்றிருக்கு மென்று

அறியத்தக்கது. எம்பெருமானாருடையபடியும் இதுவேயாகும். * சொல்லார் தமிழொரு மூன்றும் சுருதிகள் நான்கும் எல்லையில்லா வறநெறி யாவும் தெரிந்தவன் * என்று இராமாநுச நூற்றந்தாதியில் அருளிச்செய்கிறபடியே எம்பெருமானார் திறத்தில் ஸகல சாஸ்த்ர விஜ்ஞானமும் நிரம்பியிருத்தலால் அதுகொண்டும் நாநாவர்ணமுடைமை உணரத்தக்கது.

704. அன்றிக்கே, மேலே யெடுத்துக்காட்டிய ஸுதர்சந சதக ச்லோகரத்நத்தில் ஸ்ரீஸுதர்சந ஜ்வாலையே விதானமாகச் சொல்லப்பட்டிருப்பதனால் இங்கு மேலாப்பு என்கிற சொல்லால் ஸ்ரீ ஸுதர்சநாழ்வானையே விவக்ஷிக்கவும் குறையில்லை. இராமாநுச நூற்றந்தாதியில் * அடையார்கமலத் தலர்மகள் கேள்வன் கையாழியென்னும் படையோடு...இராமானுச முனியாயின இந்நிலத்தே * என்கிற பாசுரத்தாலும், யதிராஜஸப்ததியில் * அப்ருதக்ப்ரதிபந்ந யந்மயத்வை: வவ்ருதே பஞ்சபிராயுதை: முராரே: * என்ற சுலோகத்தாலும் எம்பெருமானார் பஞ்சாயுதாழ்வார்களின் தோற்றமென்று காட்டப்பட்டது. சரித்திர வகையில், ஸ்வாமி சேஷாவதாரர் என்கிற தத்துவம் இருக்கச் செய்தேயும் ப்ரபாவ விசேஷங்களை நோக்கிப் பலபடியாகவும் உல்லேகிக்க ஒளசித்ய முண்டாகையாலே பஞ்சாயுதாழ்வார்களின் தோற்றமாக உல்லேகித்ததும் ஒக்கும். * அஸ்த்ரக்ராமாக்ரேஸரம் * என்று பட்டரும், * அஸ்த்ரக்ராமஸ்ய க்ருத்ஸ்நஸ்ய ப்ரஸூதிம் யம் ப்ரசக்ஷதே, ஸோவ்யாத் ஸுதர்சநோ விச்வம் ஆயுதை: ஷோடசாயுத: * என்று தேசிகரும் பணித்தபடியே ஆயுதத்தலைவர் திருவாழியாழ்வானே யாதலாலும் அந்தத் திருவாழியாழ்வான் (ஸுதர்சந சதகத்தில்) விதானமாக வருணிக்கப்பட்டிருப்பது கீழே விவரிக்கப்பட்டிருத்தலாலும் இங்கு ஆண்டாள் பாசுரத்தில் *மேலாப்பு* என்றது உடையவர் திருவாழியாழ்வான் தோற்றமென்று உத்ப்ரேக்ஷிக்கவுரியர் என்பதைக் காட்டுவதாகக் கொள்ளத்தகும்.

705. * தொடுத்து மேல்விதானமாய பௌவநீரராவணை * என்ற மழிசையர்கோன் பாசுரப்படியே திருவனந்தாழ்வானை விதானமாகக்கொண்டு ஸ்வாமியின்சேஷாவதாரத்வம் தெரிவிக்கப்பட்டதாகக் கொள்ளுதல் மிக நன்று.

706. [2. *மாமுத்தநிதிசொரியும் மாமுகில்காள்*] எம்பெருமானாராகிற காளமேகம் நவநிதிகளைச் சொரிந்தருளிற்று.



அதாவது, ஸ்வாமி திருவாய்மலர்ந்தருளின திவ்ய க்ரந்தங்கள் ஒன்பது ; (1) ஸ்ரீபாஷ்யம். (2) வேதாந்த தீபம். (3) வேதாந்த ஸாரம். (4) வேதார்த்த ஸங்க்ரஹம். (5) கீதாபாஷ்யம். (6) நித்யமென்கிற பகவதாராதன ப்ரயோகம். (7) சரணாகதி கத்யம். (8) ஸ்ரீரங்க கத்யம். (9) ஸ்ரீவைகுண்ட கத்யம், இவ்வொன்பது திவ்ய க்ரந்தங்களும் ஸ்ரீ வைஷ்ணவர்களுக்குச் சேமவைப்பான நிதிகளாதலால் * மாமுத்த நிதி சொரியும் மாமுகிலென்றது மிக்க பொருத்தமாயிற்று.

707. நிதி சொரியும் என்றது எம்பெருமானுடைய ஸ்வரூப ரூப குணவிபூதிசேஷ்டிதங்களை யெல்லாம் * தாழாதே சார்ங்கமுதைத்த சரமழைபோல் சிஷ்யர்களுக்கு வர்ஷித்தவர் என்றபடியுமாம். [கீழே பக்கம் 35ல் காட்டிய நிதிவிசேஷார்த்தங்கள் இங்கே அநுஸந்தேயம்.]

708. மூன்றும் பாட்டில் * *அளியத்த மேகங்காள்!* * என்பது விளி; தயைபண்ணுமியல்வுடைய மேகங்களே! என்றபடி. க்ருபாமாத்ரப்ரஸந்நாசார்யரென்று ஸ்வாமி எம்பெருமானார்க்கே ப்ரஸித்தியாதலால் இது மிக்க பொருத்தமாகும்! ஆசார்யஹ்ருதயத்தில் ''நண்ணாதார் மெய்யிலூனைசை நிர்வேதத்தோடே...'' என்று தொடங்கி ''தாய்க்கும் மகனுக்கும் தம்பிக்கும் இவர்க்கும் இவரடிபணிந்தவர்க்குமே இவையுள்ளது ' என்றருளிச்செய்தது இங்கே அநுஸந்தேயம். ' இவரடிபணிந்தவர் '—உடையவர்.

709. நாலாம் பாட்டில் **மின்னாகத் தெழுகின்ற* மேகங்காள்! * என்பது விளி ; மின்னல் தோன்றப்பெறாத மேகம் அவ்வளவாக வர்ஷிக்கமாட்டாது. மின்னலுள்ளபோது கனத்த வர்ஷம் அணித்தென்று நிச்சயிக்கும்படி யிருக்கும். ஸுதர்சந சதகத்தில் *க்ருஷ்ணாம்போதஸ்ய பூஷா * என்கிற ச்லோகத்தில் * *ப்ராப்தாம் ஆவேதயந்தீ உத்படாம் வ்ருஷ்டிம் சஞ்சலா* * என்றதும் காண்க. ஆகவே, பெய்யாத வெறும் மேகமன்றிக்கே நன்கு பெய்யும் மேகமே! என்றபடியாய் எப்போதும் அர்த்தங்களை வர்ஷித்துக்கொண்டேயிருக்கு மெம்பெருமானாரைச் சொல்லிற்றாகிறது. * ஓராண்வழியாயுபதேசித்தார் முன்னோர், ஏராரெதிராச ரின்னருளால், பாருலகில் ஆசையுடையோர்க்கெல்லா மாரியர்காள் ! கூறுமென்று பேசி வரம்பறுத்தார் பின் * என்று மணவாளமாமுனிகளருளிச்செய்தபடியே, உபதேசத்திலே ஸங்குசிதர்களான முன்னோர்களைப்போலன்றியே

அதில் அபிநிவேசம் மிக்கவர் எம்பெருமானாராதலால் இது மிக்க பொருத்தம்.

710. அன்றியே, ஆகத்து-திருமார்பிலே, மின் எழுகின்ற - மின்னற்கொடிபோன்ற யஜ்ஞஸூத்ரம் விளங்கப்பெற்ற எம்பெருமானாரே! என்றதாகவுமாம். மதாந்தர ஸம்ந்யாஸிகளைப் போலே யஜ்ஞோபவீதத்தை அறுத்துப்பொகடுகை யன்றிக்கே * உபவீதிநம் * விமலோபவீதம் * இலங்கிய மின்னூல் (முந்நூல்) வாழி* என்கிறபடியே அந்த யஜ்ஞோபவீதம் மிக அழகாக விளங்குந்தன்மை வக்தவ்யமேயாகும். "ஸௌதாமநீஸவர்ண ஸௌவர்ண யஜ்ஞஸூத்ரம்" ஆகையாலே மின்னலாகச் சொல்லிற்று.

711. அன்றிக்கே, ஆகத்து-திருமேனியிலே, மின் எழுகின்ற-மின்னல்போல் பளபளவென்று திகழ்கின்ற காஷாயம் காட்சி தரப்பெற்ற எம்பெருமானாரே! என்றதாகவுமாம். *காஷாயேண க்ருஹீதபீதவஸநா * என்றார் தேசிகர்.

712. ஐந்தாம்பாட்டில் * வான்கொண்டு கிளர்ந்தெழுந்த மாமுகில்காள்! * என்று விளியுள்ளது. வான் என்று பரமபதம்; அதைக் கையிலே கொண்டுகிளர்ந்தெழுந்த மேகமாம் எம்பெருமானார், இவ்விடத்தில் * ஞானங்கனிந்த நலங்கொண்டுநாடொறும் நைபவர்க்கு வானங்கொடுப்பது மாதவன், வல்வினையேன் மனத்தி லீனங்கடிந்த இராமானுசன் தன்னை யெய்தினர்க்கு அத்தானங்கொடுப்பது தன்தகவென்னுஞ்சரண்கொடுத்தே* என்கிற நூற்றந்தாதிப்பாசுரம் எமது விரிவுரையோடுங் காணத்தக்கது.

713. அன்றிக்கே, சரணாகதிகத்யத்தில் * அஸ்து தே, தயைவ ஸர்வம் ஸம்பத்ஸ்யதே * என்றவிடத்திற்கு ச்ருதப்ரகாசிகாசார்யர் இட்டருளின வியாக்கியானத்தின்படியே, * வான்கொண்டு-பரமபதத்தை தமக்கும் தம்மடியார்க்கும் உரித்தாகப் பெற்றுக்கொண்டு, கிளர்ந்தெழுந்த எம்பெருமானாரே! என்றபடியுமாம்.

714. அன்றிக்கே, * ஸோயம் ராமாநுஜமுநிரபி ஸ்வீயமுக்திம் கரஸ்தாம் யத்ஸம்பந்தாத் அமநுத கதம் வர்ண்யதே கூரநாத: * என்கிற சுலோகத்திலமைந்த ஐதிஹ்யத்தின்படியே கூரத்தாழ்வான் ஸம்பந்தத்தாலே தமக்குப் பரமபதம் கரஸ்தமென்று கொண்டு, கிளர்ந்தெழுந்த—பெருமகிழ்ச்சியெய்தின எம்பெருமானாரே! என்றதாகவுமாம்.



715. ஆறாம்பாட்டில் * சலங்கொண்டு கிளர்ந்தெழுந்த தண்முகில்காள்! * என்று விளியுள்ளது. ஜலம் என்கிற வடசொல் சலமெனத் திரிவது போலவே ச்சலம் என்கிற வடசொல்லும் சலமெனத் திரியும். ச்சலமாவது கபடம். யாதவப்ரகாசனுடைய கபடத்தை, கொண்டு—யாத்திரை வழியில் தெரிந்துகொண்டு, கிளர்ந்தெழுந்த—தென்திசைநோக்கிப் புறப்பட்ட ஸ்வாமியே! என்றபடி. அங்ஙனம் திரும்பிவருகையில் தேவப்பெருமாளுக்கு விடாய்தீரத் தீர்த்தமளித்ததனால் தண்முகிலென்றது மிகப் பொருந்தும். அன்றிக்கே, திருக்கோட்டியூர் நம்பி பக்கலிலே கபடமாகச்சொல்லி, கோபுரத்தின்மேலே கிளர்ந்தெழுந்து வர்ஷித்தபடியைச் சொன்னதாகவுமாம்.

716. ஏழாம்பாட்டில் * சங்கமாகடல் கடைந்தான் தண்முகில்காள்! * என்று விளியுள்ளது. கடல்கடைந்து அமுதங்கொண்டவனான எம்பெருமானுடைய ஸம்பந்தம் பெற்ற மேகமே! என்று அந்யாபதேசத்தில் சொன்னபடி. ஸ்வாபதேசத்தில் *மறைப்பாற் கடலைத் திருநாவின் மந்தரத்தாற்கடைந்து, துறைப்பால் படுத்தித் தமிழாயிரத்தின் சுவையமிர்தம், கறைப் பாம்பணைப்பள்ளியான் அன்பரீட்டங்களித்தருந்த நிறைப்பான்* என்று பிள்ளைப்பெருமாளையங்கார் (கலம்பகத்தில்—காப்பு) பணித்தபடியே மறைப்பாற்கடலைக்கடைந்து அமுதமளித்தவரான நம்மாழ்வாருடைய ஸம்பந்தம்பெற்ற எம்பெருமானாரே! என்றபடி; * பாமன்னுமாறனடிபணிந்துய்ந்தவன்—இராமானுசன். * பராங்குசபாதபக்தம் ராமாநுஜம் * என்றிறே நிரூபகம்.

717. எட்டாம்பாட்டில் * கார்காலத்தெழுகின்ற கார்முகில்காள்!* என்று விளியுள்ளது. மழை காலத்தில் எழுகின்ற மேகமே! என்றபடி; * அவிவேக கநாந்த திங்முகே பஹுதா ஸந்ததது:க்கவர்ஷிணி, பகவந் பவதுர்திநே * என்று ஆளவந்தாரருளிச்செய்த ஸம்ஸார மழைகாலத்திலே தோன்றிய எம்பெருமானாரே! என்றபடி.

718. ஒன்பதாம்பாட்டில் *மதயானை போலெழுந்த* என்றதைக் கொண்டே இராமானுச நூற்றந்தாதியில் *பண்டருமாறன் பசுந்தமிழ் ஆனந்தம் பாய்மதமாய் விண்டிட எங்களிராமானுச முனிவேழம்* என்று அமுதனாரருளிச்செய்தார். வேழம்-யானை. ஆக ஒன்பது பாசுரங்களிலுமுள்ள விசேஷண ஸ்வாரஸ்யத்தை நன்கு நோக்குமிடத்து ஆண்டாள் எம்பெருமானாரையே

மேகமாக விளித்துத் தூதுவிட்டாளென்னுமிடம் தெளிவாகு மென்பது சுருக்கமாக நிரூபிக்கப்பட்டதாயிற்று. ... (*)

---

ஸ்ரீ காஞ்சீபுரியில் கோயில்கொண் டெழுந்தருளியிருக்கும் தேவப்பெருமாள், யதோக்தகாரி, அஷ்டபுஜத்தான், வேளுக்கை யாளரி, விளக்கொளிப் பெருமாள் ஆகிய இவர்களைப்பற்றிய ஸ்தோத்ரங்களிலிருந்து சிற்சில ச்லோகங்களையெடுத்து இன் சுவைப் பொருள்களை யநுபவிப்போம். ... ... (*)

719. (வரதராஜபஞ்சாசத். 1.) [*த்விரதசிகரிஸீம்நா ஸத்மவாந்*] ஸீம்நா என்றது த்ருதீயாவிபக்தி. ஹஸ்திசைல சிகரேண என்றபடி. த்ருதீயையாக இருந்தாலும் (சிகரத்தாலே) என்று பொருள் சொல்லக்கூடாது. சாஸ்த்ரஜ்ஞர்கள் இங்கு "அபேதார்த்தே த்ருதீயா" என்பர்கள். "தாந்யேந தநவான்" என்று இதற்கு உதாஹரணம் காட்டுவர்கள். தான்யத்தினலே (ஸம்பாதிக்கப்படப்போகிற) தனத்தையுடையவன் என்பது இதற்குப் பொருளன்று. தான்யமாகிற தனத்தையுடையவன் என்றே பொருள். அதுபோல 'திருவத்திமா மலையுச்சியாகிற இருப்பிடத்தையுடையவன்' என்று பொருள்.

720. (அந்தச்லோகத்திலேயே) [*கலசஜலதிகந்யா*] கலசமென்று க்ஷீரத்திற்குப் பெயர்; அதன் பக்கத்திலே ஜலத்தைச் சொல்லியிருப்பது எதற்காக? இங்கே பாற்கடல் விவக்ஷிதமேயொழிய நீர்க்கடல் விவக்ஷிதமன்றே; க்ஷீரத்தையும் ஜலத்தையும் சேரச்சொல்லுவது எதற்காக? என்று சிலர் கேட்பதுண்டு. இந்த சங்கையை அவர்கள் 'க்ஷீராப்தி, க்ஷீராம்போநிதி, க்ஷீரபயோநிதி' என்று ஸுப்ரஸித்தமான பதங்களிலேயே பண்ணலாம். அவர்கள் தெளியவேண்டியதாவது - க்ஷீரகலசாதி பதங்களோடு சேர்ந்துவருகிற அப்பு, அம்பஸ்ஸு, ஜலம்...இத்யாதி பதங்களுக்குத் தனிப்பட அர்த்தம் கிடையாது. கடல் என்று மட்டும் பொருள். க்ஷீரகலசாதிபதங்கள் சேர்ந்து பாற்கடல் என்னும் பொருளைத் தருகிறது.

721. (வரதரா. 2,) [*யஸ்யாநுபாவமதிகந்துமசக்நுவந்தோ முஹ்யந்தி அபங்குரதியோ முநிஸார்வபௌமா:*] இதற்குப் பலர் என்ன கருத்துச் சொல்லுகிறார்களென்றால், தேவப்பெருமாளுக்கு ஆழ்வார்களின் மங்களாசாஸனம் கிடையாதென்று தாங்களாக ஒருமுடிவு செய்துகொண்டு இதைத் தேசிகனும் ஸ்பஷ்டமாக ஸாதிக்கிறார் என்று பீடிகையிட்டு 'ஆழ்வார்கள் தேவப்பெருமாளுடைய பெருமையில் மோஹித்துப்போனபடியாலே வாய்திறந்து பாசுரம்பாட மாட்டிற்றிலர்' என்பதாகப் பொருளுரைத்து வருகிறார்கள். (முநிஸார்வபௌமா:) என்றதற்கு ஆழ்வார்களே பொருளென்பதை மறுப்பாரில்லை; அவர்கள் மோஹித்தார்களென்பதும் இல்லை செய்யத்தக்கதன்று. ஆழ்வார் திருவாக்குக்களில் தேவப்பெருமாள் பாடல் ஸ்பஷ்டமாக விளங்காநிற்க இந்த சுலோகங்கொண்டு அதனை இல்லைசெய்யப் போகாதன்றோ. பூதத்தாழ்வார் திருவந்தாதியில் * என்னெஞ்சமேயான் * அத்தியூரான் புள்ளையூர்வான் * என்கிற பாசுரங்களும், பெரிய திருமொழியில் * வரந்தரும் மாமணிவண்ணனிடம் * என்கிற பாசுரமும் தவிர கச்சியென்று வருமிடங்களிலெல்லாம் தேவப்பெருமாளை விவக்ஷித்தே தீரவேண்டிய நிர்ப்பந்தமுண்டு; ஏனெனில், *காஞ்சீ* என்கிற வடசொல்லே *கச்சி*யெனத் திரிந்தது; "க இதி ப்ரஹ்மணோ நாம தேந தத்ராஞ்சிதோ ஹரி:, தஸ்மாத் காஞ்சீதி விக்க்யாதா புரீ புண்யவிவர்த்திநீ * என்கிற புராணச்லோகத்தின்படி பிரமனால் ஆராதிக்கப்பட்ட தலத்தையேயன்றோ காஞ்சியும் கச்சியுங் காட்டும்.

722. தேவப்பெருமாளுக்கு ஆழ்வார் மங்களாசாஸனமுள்ளதென்பதை தேசிகன் கண்டோக்தியாலும் வெளியிட்டவர்; எங்ஙனேயென்னில்; த்ரமிடோபநிஷத்ஸாரத்தில் * *பரத்வாத்யைரித்தம்* * என்று தொடங்கும் ஐந்தாவது சுலோகத்தில் * *ப்ரதமசதகே வீக்ஷ்ய வரதம்* * என்று திருவாய்மொழி முதற்பத்து முழுதும் தேவப்பெருமாள் விஷயமென்று ஸாதித்தருளினர். அது ஸுஸ்பஷ்டமான உக்தியாதலால் கண்ணழிக்க முடியாதது.

723. திருவாய்மொழி முதற்பாசுரத்தில் * அயர்வறுமமரர்களதிபதி * என்றிருக்கையாலே அதுமட்டுந் தேவப்பெருமாள் விஷயமென்று ஒருவாறு சொல்லப் பொருந்தும்; முதற்பத்து முழுதும் தேவப்பெருமாள் விஷயமென்று கொள்வதற்கு ஔசித்யமுண்டோவென்று சிலர் கேட்கக்கூடும். முதற்பத்தின் முடிவுபாசுரத்தில் * *மணியை வானவர் கண்ணனை* * என்றிருக்கையாலே [வானவர் கண்ணன்—தேவாதி ராஜன்] என்று

கொண்டு உபக்ரமோபஸம்ஹாரந்யாயத்தாலே * ப்ரதமசதகே
*வீக்ஷ்ய வரதம்* * என்றருளிச்செய்தது பொருந்தும்.

724. [வரதராஜபஞ். 7.] * யம் சக்ஷுஷாமவிஷய
மித்யாதி. என்றைக்கோ பிரமனொருவன் செய்த புண்ணியத்தி
னுல் நீண்டகாலம் உலகெல்லாம் தேவப்பெருமாளை ஸேவித்துக்
களிக்கின்றதென்று ஸாதித்தவிதனுல் பண்டிதராஜனுடைய ஒரு
சுலோகம் நினைப்பூட்டப்படுகிறது (அதாவது) * சாதகஸ்
த்ரிசதுராந் பயஃகணுந் யாசதே ஜலதரம் பிபாஸயா, ஸோபி பூர
யதி விச்வமம்பஸா ஹந்தஹந்த! மஹதாம் உதாரதா * இதன்
பொருளாவது, வர்ஷபிந்துவாலல்லது மற்றென்றுல் அபேக்ஷை
யற்றதான சாதகபக்ஷி தனக்கு ஸ்வல்பஜல பிந்துக்கள் வேணு
மென்று விரும்ப, மேகம் அதன் கோரிக்கையை நிறைவேற்றுவ
தோடு நில்லாமல் உலகத்தையெல்லாம் வெள்ளம் பரந்ததாகச்
செய்கின்றதென்பதாம். சாதகபக்ஷி போன்ற பிரமனொருவனு
டைய கோரிக்கையை நிறைவேற்றத் திருவுள்ளம்பற்றிய தேவப்
பெருமாள் அவனுக்குமட்டும் காட்சிதந்து மறைந்திடாமல் நீடூழி
காலம் உலகமெல்லாம் வாழத் திருவத்திமாமலையிலே திகழ்
கின்ருரென்றபடி.

725. (அதிலேயே 8.) [*தத்தத்பதைருபஹிதேபி
துரங்கமேதே*] தேவப்பெருமாளை ஸாக்ஷாத்கரிக்கப் பிரமன்
அச்வமேதயாகம் செய்கையில் அக்னியில் ஆஹுதி செய்யப்
பட்ட ஹவிஸ்ஸு முழுவதையும் எம்பெருமானைச் சிந்தை செய்து
கொண்டு அப்பெருமானுக்கே நேரில் ஸமர்ப்பித்ததனுல் பல பல
தேவதைகள் யாகசாலைக்கு நேரில் வந்திருந்தும், "*ஸோமாய
ஸ்வாஹா, வருணுய ஸ்வாஹா, இந்த்ராய ஸ்வாஹா,
ஸூர்யாய ஸ்வாஹா*" என்றிப்படி அந்தந்த தேவதைகளை
உத்தேச்யர்களாகக்கொண்டு ஹோமம் செய்யப்பட்டபோதிலும்,
ஒரு ஹவிஸ்ஸும் ஒரு தேவதைக்கும் கிடைக்காமற் போக,
அதனுல் மிக்க வருத்தங்கொண்ட அத்தேவதைகள் நான்முகனை
நோக்கித் தங்கள் வருத்தத்தைத் தெரிவித்து 'இப்படியும் எம்மை
அவமானப்படுத்துவது தகுதியோ பிரம!' என்று முறையிட,
அவர்களை நோக்கி அயன் 'தேவர்காள்! ஆயுள், ஆரோக்யம்,
மக்கள், செல்வம் முதலிய அற்ப பலன்களைக் குறித்து வேள்வி
புரிகின்றவர்களே உங்களைக் குறித்து யஜிப்பர்கள்; அன்னவர்
களால் ஆஹுதி செய்யப்படும் ஹவிஸ்ஸுக்களே உங்களுக்குக்



கிடைக்கக்கூடியவை; முமுக்ஷுக்களான பரமைகாந்திகளால்
ஸ்ரீமந்நாராயணனே ஸாக்ஷாத்தாக யஜிக்கப்படுகிறபடியால்,
அன்னவர்களால் அர்ப்பணம் செய்யப்படும் ஹவிஸ்ஸுக்களை
ஸாக்ஷாத் பரமபுருஷன் தானே ஸ்வீகரித்தருள்வான்; இப்போது
அடியேன் முமுக்ஷுவாய்ப் புண்டரீகாக்ஷனையே ஸாக்ஷாத்கரிக்க
வெண்ணி யாகஞ்செய்கிறேனென்பதை நீங்களனைவருமறிவீர்;
இந்த வேள்வியில் ஹோமம் செய்யப்படும் அவியுணவுகளை
அமரர் பெருமான்தானே ஸாக்ஷாத்தாக அங்கீகரித்தருள்கின்ற
மையால் நீங்கள் இவ்வுணவுகளைப் பெற ஆசைகொள்ள அவ
காசமில்லை' என்றுகூற, அமரர்கள் ஸமாஹிதராஞர்களென்று
ஹஸ்திகிரி மாஹாத்மியத்திலுள்ள கதையை இந்த சுலோகத்தில்
சமத்காரமாக அருளிச்செய்தபடி. * ஏததேவ அம்ருதம்
த்ருஷ்ட்வா த்ருப்யந்தி * என்ற ச்ருதியையும் திருவுள்ளம்
பற்றினபடி.

726. (அதிலேயே 13) * *ஆசாதிபேஷு கிரிசேஷு
சதுர்முகேஷ்வபி.* * "ச்ருதிஸ் ஸ்ம்ருதிர் மமைவாஜ்ஞா"
என்று பகவான்தானே சோதிவாய்திறந்து பணித்தபடியே அவன்
தன்னுடைய கட்டளையா யிராநின்ற ச்ருதிஸ்மிருதிகளில்
இன்னின்னவற்றைச் செய்யவேண்டியதென்கிற விதிகளும்,
இன்னின்னவற்றைச் செய்யலாகாதென்ற தடைகளும் நிரம்பி
யுள்ளன. இங்ஙனமாகவுள்ள விதி நிஷேதங்களுக்குக் கட்டுப்
பட்டு நடக்கவேண்டிய நியதி நமக்கு மட்டுமல்ல; பிரமன்
சிவனிந்திரன் முதலான தேவர்களுக்குமுண்டு; அவர்களும் ஆஜ்
ஞையை யநுஸரித்து நடப்பதனுல் நன்மைகளையும், மீறி நடப்பத
னுல் தீமைகளையும் அடைகிருர்கள் என்கிறது இந்த சுலோகத்
தில். இதனுல் அத்தேவர்களுக்கு அவரத்வமேயொழியப் பரத்வ
மில்லையென்பது விளங்கும். திருவாசிரியம் மூன்ருவது பாட்டில்
* ஆணை மெய்பெற நடாயதெய்வம் மூவரில் முதல்வனுகி *
என்றருளிச்செய்தது இங்கே அநுஸந்தேயம்.

727. (அதிலேயே 16) [*ஸஞ்சிந்தயந்தி...சாந்தோ
திதம் சமவதா ஹ்ருதயேந தந்யாஃ*] பரவ்யூஹவிபவாதி
பஞ்சப்ரகாரமான எம்பெருமானது நிலைமைகளில் வ்யூஹநிலை
யில் நித்யோதிதமென்றும் சாந்தோதிதமென்றும் இரண்டு
தசைகள் பகவச் சாஸ்திரங்களில் கூறப்பட்டுள்ளன. இவற்றுள்
சாந்தோதித தசையை ஆழ்வானும் பட்டரும் தங்கள் ஸ்தவங்

களில் எடுத்தாள்கிறார்கள். வரதராஜஸ்தவத்தில் *ப்ரசாந்தாநந்தாத்மாநுபவஜ மஹாநந்தமஹிம ப்ரஸக்த ஸ்தைமித்யாநுக்ருத விதரங்கார்ணவதசம் * என்பது ஆழ்வான் ஸ்ரீஸூக்தி. "...அநந்த ஸ்வவசகந சாந்தோதித தச:, த்வமேவ த்வாம் வேத்த ஸ்திமிதவிதரங்கம்" என்பது பட்டர் ஸ்ரீஸூக்தி. இவ்விரண்டு ஸ்ரீஸூக்திகளையும் நெஞ்சிற்கொண்டு இங்கு *சாந்தோதிதம்* என்றுமட்டும் அருளிச்செய்தார். அடியேனுடைய வியாக்கியானங்களில் விவரணம் காண்க.

728. (அதிலேயே 18) [மோஹாந்தகார...த்வத் தேஜஸி த்விரதசைலபதே! விம்ருஷ்டே ச்லாக்க்யேத ஸந்தமஸபர்வ ஸஹஸ்ரபாநோ: *] இந்த உத்தரார்த்தத்தின் பொருள் துரவகாஹம். கருத்தை எளிதாக விவரிக்கிறோம். ஸஹஸ்ரபாநுவென்று ஸூரியனுக்குப் பெயர். *ஸந்தமஸபர்வ*—அமாவாஸ்யை; ஸூர்யனிற்காட்டில் அமாவாஸ்யை கொண்டாடப்படும் என்பது சப்தார்த்தம். இதன் கருத்து ஏதென்னில்; கேளீர். ஒரு வித்வத்ஸதஸ்ஸில் பிரசண்டபண்டிதரொருவர் பேசுகிறார். அவர் பக்கத்தில் அல்பச்ருதரான பண்டிதம்மந்யரொருவர் இருக்கிறார். 'நமக்கு ஒன்றும் தெரியாது; நாம் யதாஜாதர்கள்' என்று தங்களுடைய ஜ்ஞானலவலேச சூந்யதையை உணர்ந்தவர்களும் அங்குள்ளார்கள். ஆக, ஸர்வஜ்ஞரென்னும்படியான யதார்த்தபண்டிதரொருவர், அல்பஜ்ஞனான பண்டிதம்மந்யனொருவன், ஒன்றுமறியாத யதாஜாதனொருவன்— என்று இம்மூவரை மனத்தில் கொள்ளுங்கள். ஸர்வஜ்ஞ வித்வான் பேசும்போது பண்டிதம்மந்யனான அல்பஜ்ஞன் வாய் மூடியிருக்கமாட்டாமல், தன்னையும் தத்துல்ய பண்டிதனென்று பிறர் நினைக்கவேணுமென்னு மாசையினாலும், வாளாவிருந்தால் தன்னை அஜ்ஞனாக நினைத்துவிடுவார்களென்னுமத்தாலும் இடையிடையே தான் குசோத்யங்கள்பண்ணி உடனுக்குடனே பங்கப்படுகிறான். யதாஜாதர்களாயிருக்கிற மற்றையோர்கள் உள்ளபடி தங்களை அறிவிலிகளாகவே நினைத்திருப்பதனால் வாய் மூடியேயிருந்து பங்கப்படாதிருக்கின்றனர். பண்டிதம்மந்யன் பங்கப்படுவதற்கு ஹேது ஸ்வல்பஜ்ஞானமுடைமை. யதாஜாதன் பங்கப்படாமைக்கு ஹேது ஜ்ஞானாத்யந்தாபாவம். இதேபோல தேவப்பெருமாளுடைய மிகவுயர்ந்த தேஜஸ்ஸின் முன்னே ஸூர்யன் பங்கப்படுகிறான்; அமாவாஸ்யை பங்கமேதும் அடையாமலிருக்கின்றது. ஸூர்யன் பங்கமடைவதற்கு என்ன காரணம்? தன்னிடத்தில் ஸ்பல்ப தேஜஸ்ஸுடைமையே காரணம். அமாவாஸ்யை பங்கமடையாதிருப்பதற்கு எது காரணம்? தேஜஸ்ஸின் அத்யந்தா பாவமே காரணம். ஆகவே அல்பதேஜஸ்கனான ஸூர்யனிற்காட்டிலும் தேஜஸ்ஸின் லவலேசமுமற்ற அமாவாஸ்யையே கொண்டாடப்படுவதாகின்றது என்றதாயிற்று. *ச்லாக்க்யேத* என்னும் க்ரியைக்கு இப்பொருளில் தவிர மற்று எந்தப்பொருளிலும் பொருத்தம் காண இயலாது. தேவப்பெருமாளுடைய தேஜஸ்ஸின் உயர்த்தியைப் பூர்வார்த்தத்தில் இரண்டு விசேஷணங்கள் நிலைநாட்டுவதால் நான்காவது பாதத்தில் கூறிய விஷயத்திற்கு அவை உபபாதகங்களாயின. அப்பயதீக்ஷிதர் தாம்செய்த வரதராஜஸ்தவத்தில் * பாநுர் நிசாஸு பவதங்க்ரிஸரோஜசோபாலோபாத் * இத்யாதியான ச்லோகமிட்டிருப்பது இந்த ரஸ்யமான தாத்பர்யத்தை உட்கொண்டேயாம். [அந்த சுலோகத்தின் முடிவில் (ஸஹிமந்ததாப:) என்று வழங்கிவரும் பாடம் மிகத்தவறு; "ஸஹி மந்ததாத:" என்று திருத்துக. இது ப்ராஸங்கிகம்.]

729. (அதிலேயே 43) [*த்வஞ்சேத் ப்ரஸீதஸி... ஸம்ஸார ஏஷ பகவந் அபவர்க்க ஏவ*] மேலே நாற்பத்தொன்பதாம் சுலோகத்தில் * வைகுண்ட வாஸேபி ந மேபிலாஷ: * என்றருளிச் செய்யப்போகிறாராதலால் இந்நிலமே எமக்கு வைகுண்டமென்கிறாரிதில். இருள் தருமாஞாலமான விது எப்படி வைகுண்டமாகுமென்ன; சில கோரிக்கைகளை விண்ணப்பம் செய்கிறார், நான் ஆர்த்ராபராதனாயிருக்கும் போதும் திருமுகத்தில் புன்முறுவல் மாறாதேயிருக்கவேணும்; அடியேன் போவதும் வருவதுமாயிருக்கையன்றிக்கே ஒழிவில் காலமெல்லா முடனாய் மன்னியிருக்கவேணும்; மெய்யன்பு கொண்டிருக்கவேணும். இவையெல்லாவற்றுக்கும் மேற்பட பரஸ்பரஹிதைஷிகளோடே கலந்து பரிமாறப் பெறவேணும். இவ்வளவும் வாய்க்கப்பெறில் இம்மண்ணுலகே விண்ணுலகாகுமென்னத் தட்டில்லை என்றாராயிற்று.

730. *ஸ்ரீயதோக்தகாரிஸ்தோத்ரத்தில்* சில சுலோகங்களின் இன்சுவை மிக்க பொருள்களை யநுபவிப்போம். ஸ்ரீகாஞ்சீபுரிக்கு நடுநாயக மணியாய் விளங்குபவர் ஸ்ரீயதோக்தகாரிப் பெருமாள். தமிழில் சொன்ன வண்ணஞ்செய்த பெருமா

ளென்று வழங்கப்படுவர். "சதுமுகனுர் வேள்விதனைச் சதிர் கெடுக்கச் செறிந்தோடுங் கதியுடைய வேகவதிக்கு அணையாக வந்துதித்தோய்!" என்கிறபடியே எம்பெருமானை ஸாக்ஷாத்கரிப்பதற்காக அயன் புரிந்த அயமேத வேள்வியைக் கெடுக்கவெண்ணின ஸரஸ்வதியானவள் வேகவதீ ரூபத்துடனே பெருவெள்ளங் கோத்துப் பெருக, யாகத்தில் ஸ்வாஹாகாரம் அடங்கி ஹாஹாகாரம் அபிவிருத்தி யடைந்தவளவிலே "இவ்விடையூறு தன்னை நீக்கியருளவேணும்" என்று அந்த நான்முகன் பிரார்த்திக்க, அவனது வேண்டுகோளின்படி அணையாக வந்துதித்து இடையூறு நீக்கியருளின காரணத்தினுல் "*யதோக்தகாரீ*" என்று திருநாமமாயிற்று இப்பெருமானுக்கு. அன்றியும், திருமழிசையாழ்வார் கணிகண்ணனென்னும் அந்தேவாஸியுடன் இத்தலத்திலெழுந்தருளியிருந்த காலத்துப் பல்லவராஜனுடைய கொடுங்கோன்மையினுல் அக்கணிகண்ணனும் ஆழ்வாரும் வெளியேற நேர்ந்தபோழ்து "கணிகண்ணன் போகின்ருன் காமருபூங்கச்சி மணிவண்ணு! நீ கிடக்கவேண்டா...நீயுமுன்றன் பைந்நாகப்பாய் சுருட்டிக்கொள்" என்று முன்பும், "கணிகண்ணன் போக்கொழிந்தான் காமருபூங் கச்சி மணிவண்ணு நீகிடக்கவேண்டும் .........நீயுமுன்றன் பைந்நாகப்பாய் விரித்துக்கொள்" என்று பின்பும் ஆழ்வார் பிரார்த்தித்தபடியே பைந்நாகப்பாய் சுருட்டிக்கொண்டு புறப்பட்டெழுந்தருளினதையும் மீண்டுவந்து சாய்ந்தருளினதையும்பற்றி *யதோக்தகாரி* யென்று திருமாமமாயிற்று. இந்த ஸ்தோத்ரத்தில் நான்காவது சுலோகமொன்றில் மட்டுமே யதோக்தகாரி நாமநிர்தேசமுள்ளது. பலச்ருதியான நிகமன ச்லோகத்தில் *யதோக்தம் குருதே ஹரி"* என்றருளிச்செய்தது இன்சுவை மிக்கது.

731. (யதோக்தகாரி 1) முதல் சுலோகத்தின் ரஸகனமான கருத்து ;—உலகில் அடையப்படும் பொருள் உபேயமென்றும், அடைவிக்குமது உபாயமென்றும் வழங்கப்படும். உபேயமென்பதும், ப்ராப்யமென்பதும் பலன் என்பதும் பரியாயம்; ஸாதனமென்பதும், உபாயமென்பதும், ப்ராபகமென்பதும் பரியாயம். உபாயம் வேருயும், உபேயம் வேருயும் இருப்பது உலகிற்காணுமியல்பு. எம்பெருமான் விஷயத்தில் இது மாறுபட்டிருக்கும். அவனை உபேயமாகக் கொண்டவர்கள் அவனையே உபாயமாகவும் கொள்வர். "உபாயோபேயத்வே ததிஹ தவ தத்வம் ந து



குணௌ" என்றருளிச்செய்தார் பட்டர். கர்மஜ்ஞான பக்த்யாதிகள் உபாயமென்று கொள்ளத்தக்கவையாயிருந்தாலும் அவை அஜ்ஞர்க்கு உபாயமாய் ஜ்ஞானிகளுக்கு அபாயமாயிருக்குமவை யாகையாலே ஹேயமாகி, உபேயனுன எம்பெருமான் தானே உபாய பூதனுயும் நிற்பன் பரமைகாந்திகளுக்கு. தேவப்பெருமாளாகிற ஒரு திருக்கோலமே உபாயமாயும் உபேயமாயுமிருக்கச் செய்தேயும் ஒரு திருக்கோலத்தாலே உபாய பாவத்தையும் மற்ருெரு திருக்கோலத்தாலே உபேய பாவத்தையும் காட்டுவோமென்று திருவுள்ளம்பற்றி வேகவதியினிடையே யதோக்தகாரியாகத் திருவவதரித்து உபாயபாவத்தைக் காட்டியும், திருவத்திமா மலையிலே தேவப் பெருமாளாகத் திருவவதரித்து உபேயபாவத்தைக் காட்டியும் ஸேவை ஸாதிப்பதாகச் சொல்லுகிறவிது சமத்காராதிசயம் பொலிந்த சாடூக்தி. உபாயோபேயத்வங்களிரண்டும் இரண்டு திருக்கோலங்களிலும் தனித்தனியே குறையற்றதே. ஆயினும் இங்ஙனே நியமித்துச் சொன்னது கதைக்குச்சேரும்.

732. (யதோக்த. 2) இந்த ச்லோகம் ச்லேஷாலங்காரமமைய அருளிச்செய்யப்படுகிறது. ஸ்ரீயதோக்தகாரி யெம்பெருமானுக்கு வடமொழியில் வேகாஸேது வென்றும், தென்மொழியில் வெஃகணை யென்றும் திருநாமம். வெஃகணை யென்பதே வெஃகாவென்று தொக்கிநிற்கிற தென்பர். வேகாஸேது வென்கிற திருநாமத்தை நினைக்கும்போதே * *அம்ருதஸ்யைஷ ஸேதுঃ* * இத்யாதிகளான உபநிஷத் வாக்யங்கள் நினைவுக்கு வரும். வேதாந்தங்களில் ஸேதுவாக ஓதப்பட்டுள்ள எம்பெருமான் இங்கு ப்ரத்யக்ஷ ஸேதுவாக ஸேவைஸாதித்திருக்கின்ருனென்று அநுஸந்திக்க ப்ராப்தம். வேதாந்தவ்யபதிஷ்ட ஸேதுவான பகவானிடத்திலே [*ஸாரஸ்வதம் ஸ்ரோதঃ விச்ருங்கலம் விச்ராம்யதி*] ஸரஸ்வதீ ப்ரவாஹமானது விச்ருங்கலமாக விச்ரமிக்கும் ; ஸகலவாக்ப்ரபஞ்சமும் பகவானிடத்திலே முக்ய வ்ருத்த்யா பர்யவஸித்து நிற்குமென்கை. இந்த வேகாஸேது பகவான் பக்கலிலோ வென்னில், விச்ருங்கலமாகப் பெருகியோடிவந்த ஸரஸ்வதீ நதியின் வெள்ளம் தடைபட்டொழிந்த தென்கை. [*அபங்குரঃ ஏஷ ஸேதுঃ*] உலகில் நதிகளுக்குக் கட்டும் அணைகள் என்றேனுமொரு நாள் பங்கமடையக் கூடியவைகளேயாம். இந்த பகவத்ஸேது அத்தகைத்தன்று. "ஏஷ

ஸேது:" என்கிற நிர்தேசம் உபநிஷத்வாக்யத்திற்கு ஸ்மாரகமாகும். [*பாரம் கமயிதும் ஈஷ்டே*] ஸம்ஸாரத் உத்தரிப்பிக்க வல்லதென்கை.

733. (யதோக்த. 3) உலகத்தில் நதிகளுக்குக் கட்டப்படும் ஸேது அலையெறிந்து ஓடும் நீர்ப்பெருக்கைத் தடுத்து நிற்கும். கடலலைகளைத் தடுக்கும்படியான ஸேது உலகில் கட்டப்படுவதில்லை. வேகா ஸேதுவென்னும் இந்த பகவத் ஸேதுவானது அத்யந்த விலக்ஷணமாயமைந்தது. வேகவதீ நதியினிடையிலே காணப்படுவது ஒரு விசேஷம். இங்கே கடல் ஏது ? என்னில்; [*ப்ரஜாநாம் ஸம்ஸார ஜலதி கல்லோலாந்*] * ஸம்ஸாரஸாகரம் கோரம் * என்றும் * பிறவிக் கடலுள் நின்று நான் துளங்க * என்றும் சொல்லுகிறபடியே நாம் துளங்குகிற ஸம்ஸாரஸாகரத்தின் அலைகளுண்டு தாபத்ரயாத்மகங்களான பலவகைப்பட்டக்லேசங்கள்; அவை எப்படிப்பட்டவையென்னில்; [*ப்ரதிதாந்*] ஸுப்ரஸித்தங்களென்று ஒரு பொருள் ; பெருப்பெருத்தவை யென்று மற்றொரு பொருள் ; ஆக இவற்றை ப்ரசமநம் செய்துகொண்டு விளங்குகிறாரென்றதாயிற்று.

734. (யதோக்த. 4) புராணகதையை அனைவருமறியச் சுருங்கப்பேசுகிறாரிதில். முன்பு நான்முகக் கடவுள் திருமாலைக் காணவேண்டித் தவங்கள் புரிந்தனன். ஆயினும் எம்பெருமானுடைய திருவடித் தாமரைகளில் நிலைகொள்ளாமல் வெவ்வேறு விஷய இன்பங்களில் பதறியோடுகின்ற தனது நெஞ்சை அடக்கியாளமுடியாமல் வருத்தங்கொண்டு இன்னது செய்வதென்று தெளியப்பெறாமல் திகைத்திருக்குமளவில் ஆகாயத்தில் நின்றும் ஒரு அசரீரி வாக்குத் தோன்றியது ; அதாவது;—பிரம! ஆயிரம் அச்வமேதங்களை அனுட்டித்தால்தான் சித்தசுத்தி பெற்றுத் திருமாலைக் கட்கூடாகக் காணப்பெறுவாய்; விரைவில் திருமாலைக் காணவேண்டி ஆயிரம் அச்வமேதயாகமனுட்டிக்கும் தாமதத்தைப் பொறுக்ககில்லாயாகில், தொண்டை நாட்டிலுள்ள ஸத்யவ்ரத க்ஷேத்ரத்திற்குச் சென்று அவ்விடத்தில் அயமேத வேள்வியியற்றி எம்பெருமானை உகப்பிப்பாயாக ; அங்கு ஒரு கருமம் செய்தாலும் அஃது ஆயிரமுகமாகிப் பயன் பெறுவிக்கும் ; இஃது அந்த க்ஷேத்திரத்திற்கு உற்ற பெருமை ' என்று. அதுகேட்டுப் பரமானந்தமடைந்த பிரமன் மேருமலையுச்சியில் நின்று உடனே எழுந்து ஸத்யவ்ரத க்ஷேத்திரத்திற்கு வந்து



சேர்ந்து அங்குத் தவமுனிவர் சூழ்ந்த திருவனந்த ஸரஸ்ஸையும் அதனருகில் திகழும் திருவத்திமாமலையையும் நோக்கியுவந்து அத்திருக்குளக்கரையிலேயே தூயவேள்வி புரியத் துணிந்து ஸகல ஸன்னாஹங்களும் செய்தவளவிலே, புரோஹிதரான ப்ருஹஸ்பதியானவர் ' திசைமுகனே ! உனது தருமபத்தினியான ஸரஸ்வதியின்றி வேள்வியை நடத்த இயலாதாதலால் அவளை வரவழைக்கவேணும் ' என்று சொல்ல, பிரபலமானவொரு மனவருத்தத்தினால் நெடுநாளாகப் பிரிந்திருக்கின்ற அவளை எவ்விதமான உபாயத்தினாலும் வரவழைக்க முடியாமற்போக, அவளை உபேக்ஷித்து ஸாவித்ரி முதலிய மற்றை மனைவியரை உடன்கொண்டு வேள்வியைத் தொடங்கினவளவிலே, அசுரர்களின் துர்ப்போதனையினால் மிக்க சீற்றங்கொண்ட ஸரஸ்வதி கணவனது வேள்வியைக் கெடுக்கமுயன்று வேகவதியென்னும் நதியாகப் பெருகி மிகவும் பயங்கரமான விசையுடனே ஸத்யவ்ரத க்ஷேத்திரத்திற்கு வந்துசேர, யாகசாலையிலுள்ளாரனைவரும் அப்பெருவெள்ளத்தைக் கண்டு திடுக்கிட்டு நிற்க, பிரமன் தனது யோக த்ருஷ்டியினாலே 'அசுரர்களால் கலக்குண்ட ஸரஸ்வதியின் செயல் இது ' என்றுணர்ந்து உள்ளெலாமுருகிக் குரல் தழுத்து உடம்பெலாம் கண்ணநீர் சோரநின்று பகவானை வாயாரத் துதிக்க, "அணியாக வேகவதி அலையோடு கொண்டாடியாலிக்க அணையாக் கிடந்த பெருமாள் " என்று பின்னோர் போற்றுமாறு அந்த வெள்ளத்தைத் தடை செய்யவல்ல அணையாகப் பள்ளிகொள்ள, அந்த சயனத் திருக்கோலத்தைக் கண்ட ஸரஸ்வதி நாணமுற்று மேலே பெருகிச் செல்லமாட்டாமல் திகைத்துநின்று அந்தர்வாஹினியாய்ச் சென்று கடல் சேரலுற்றாளென்னு மிதிஹாஸம் இங்கு உணர்க.

735. (யதோக்த. 6) உத்தரார்த்தத்தில் திருமழிசைப் பிரானுடைய இதிஹாஸத்தை அநுஸந்திக்கிறார். திருமழிசைப் பிரானுக்காக இப்பெருமான் போவதும் வருவதுமாயிருந்தானென்கிற சரிதையை அநுஸந்தித்தவாறே அஸ்தமதாதிகளின் ஸம்ஸாரகாந்தார கதாகதங்கள் தொலையுமென்கிறார். யாதவாப்யுதயத்திலே "பத்தம் ததா பாவயதாம் முகுந்தம் அயத்நவிச்சேதிநி கர்மபந்தே" என்றருளிச்செய்த ச்லோகம் இங்கு ஒருவாறு நினைக்கத்தகும். வெண்ணெய் களவுகண்ட கண்ணபிரான் உரலிலே கட்டுண்டு கிடந்தானென்று சிந்தனை செய்தவாறே

நம்முடைய கருமபந்தங்களெல்லாம் கட்டவிழ்ந்து தொலையுமென்றது அங்கு.

736. (யதோக்த. 8) ஸ்ரீஹஸ்தி சைலசிகரோஜ்ஜ்வல பாரிஜாதமான தேவப்பெருமாளுக்கு வரந்தரும்பெருமாளென்கிற திருநாமமும் அத்திருநாமத்திற்கீடான வரமளிக்கும் பெருமையும் யதோக்தகாரி யெம்பெருமானுடைய ஸந்நிதான விசேஷத்தினால்தான் வாய்த்ததென்று ஸ்வாநுபவத்தைக்கொண்டு அருளிச்செய்கிறாரிதில். இவர் முன்னே திருவவதரித்தருளாவிடில் தேவப்பெருமாள் அவதரிக்கவே ப்ரஸக்தியில்லையாகுமென்பது தத்துவமாதலால் இவ்வுண்மையை இங்ஙனே வெளியிட்டவாறு.

737. (அஷ்டபுஜாஷ்டகாநுபவம் சிறிது செய்வோம்.) கீழேதுதித்த ஸ்ரீயதோக்தகாரியின் ஸந்நிதிக்குத் தென்புறத்திலே திகழ்கின்ற அஷ்டபுஜ திவ்யதேசத் தெம்பெருமானை ஓர் அஷ்டகமிட்டுத் துதிக்கிறாராசிரியர். இத்தலத்தி லீடுபட்ட பேயாழ்வார் *தொட்ட படையெட்டுந் தோலாத வென்றியான் அட்டபுயகரத்தான் அந்நான்று, குட்டத்துக் கோள்முதலை துஞ்சக் குறித்தெறிந்த சக்கரத்தான், தாள் ரதலே நங்கட்குச் சார்வு.* என்று இப்பெருமானை ஸ்ரீகஜேந்த்ர ரக்ஷகனாக அநுஸந்தித்துப் பேசுகையாலே அவ்வபதாநத்தையே இந்த ஸ்துதிக்கு உயிராகவைத்து “கஜேந்த்ர ரக்ஷகத்வரிதம்” என்று உபக்ரமித்தருளுகிறார்.

738. (அஷ்டபு. 2) [*அஷ்டபுஜாஸ்பதேச!*] அஷ்டபுஜ! என்று விளிக்கலாமாயிருக்க இங்ஙனே விளிப்பது எதற்காக? அஷ்டபுஜனுடைய ஆஸ்பதத்திற்கு ஈசனே! என்று ஏதுக்குச் சொல்லவேண்டும்? என்று விகிசித்ஸை பிறக்கும். திருமங்கையாழ்வாருடைய அநுபவத்தை இங்கு உணர்த்தித் தெளிவு பிறப்பிக்கக் கடவோம். பெரிய திருமொழியில் (2–8) * திரிபுர மூன்றெரித்தானும்* என்கிற திருமொழியினால் திருமங்கையாழ்வார் இத்தலத்தை யநுபவித்தாரென்பது ப்ரஸித்தம். இதற்குமுந்தின திருமொழியில் ஆழ்வார் தாமான தன்மையை இழந்து தாய்வாக்காலே பேசும்படி அடைந்த க்லேசங்களைத் திருவுள்ளம்பற்றின எம்பெருமான் ‘ இவ்வாழ்வாரை இப்படியோ நாம் துடிக்கவிட்டோம்! தம் துடிப்பைத் தாமே முறையிட்டுக் கொள்ளும்படியாகவும் நாம் பிற்பட்டோமே! ’’ என்று முடிமேல் மோதிக்கொண்டு, அடியார்களுக்குத் தான் உதவின குணங்களையும் பரமவிலக்ஷணமான வடிவழகையும் பிரகாசப்படுத்திக் கொண்டு கச்சிப்பதி



யொன்றிலே *செம்பொனிலங்கு வலங்கைவாளி திண்சிலை தண்டொடு சங்கமொள்வாள் உம்பரிருசுடராழியோடு கேடகமொண்மலர்பற்றி அஷ்டபுஜனாய்ப் பரமபோக்யனாக ஆழ்வார்க்கு ஸேவைஸாதித்தான். ஆழ்வாரும் கீழ்த்திருமொழியின் அநுபந்தமாகவே பரகால நாயகியான நிலைமையிலேயே நின்று அப்பெருமானை ஸேவித்தார். எற்றைக்கும் எங்குங் கண்டறியாத திருக்கோலமாயிருந்தது. *ஆழியொடும் பொன்னார் சார்ங்கமுடைய வடிகளை இன்னாரென்றறியேன்* என்றாப்போலே அப்பெருமானை இன்னாரென்று அறியமாட்டிற்றிலர். அறிந்துகொள்ளாமலிருக்கவும் மனமில்லை. ஸ்வபுத்தியாலே அறிந்துகொள்ளவும் முடியவில்லை. என்னசெய்வது! நீர் ஆர் ? என்று கேட்கலாமென்று பார்த்தாலோ வாய் எழும்பவில்லை. முகத்தை நேரே பார்த்து வார்த்தை சொல்லமுடியாதபடி சோதிவெள்ளம் அலையெறிந்து தள்ளுகின்றது; அதனால் முகம் நோக்கி நீர் யார்? என்று கேட்கமாட்டிற்றிலர். ‘ இவர் நம்முடைய பர்த்தாவாகவேயிருக்கக்கூடும் ’ என்று நெஞ்சிலே ஒரு தோற்றமும் தோன்றினமையால் வெட்கத்தாலும் ‘ நீர் ஆர் ? ’ என்று கேட்கமாட்டிற்றிலர். கேட்டுத் தெரிந்துகொள்ள விருப்பமோ அதிகரித்துவிட்டது. அவர் தம்மையே நேரே முகம்பார்த்துக் கேளாமல் வேறொருவரை நோக்கி ‘ இப் பெரியவர் யாவர் ?’ என்று கேட்க, அதற்கு எம்பெருமான் தானே ‘‘ நான் அட்டபுயகரத்தேன் ’’ என்று மறுமொழி கூற, படுக்கைத் தலையிலே இப்படிச் சில வார்த்தைகள் நடந்துகொண்டிருப்பதைப் பரகால நாயகியின் தாய்மார் தோழிமார் முதலானார் செவியுற்று ‘‘ நங்காய் ! ஏதேனும் பிரமித்தாயோ ? இவை என்ன வார்த்தைகள் ?’ என்று கேட்க; ‘‘ பிரமித்தேனல்லேன்; ஒரு மஹாபுருஷரை ஸேவிக்கப்பெற்றேன் ; அவரை நேராக வினவமாட்டாமல் வேறொருவரை நோக்கிக் கேட்கும் பாவனையாக ‘ இவரார்கொல் ?’ என்று கேட்டேன் ; அஷ்டபுஜப்பெருமாள் ‘ நான் தான் அட்டபுயகரத்தேன் ’ என்று விடை கூறுகிறார் காண்மின் ’’ என்று பரகால நாயகி தன் தாய்மார்க்கும் தோழிமார்க்கும் நடந்த செய்தியைச் சொல்லுவதாக அமைக்கப்பட்டது அத்திருமொழி. இங்கே விமர்சிக்க வேண்டுவதொன்றுண்டு ; ‘ இவரார்கொல்? ’ என்றதற்கு விடை தருகின்ற எம்பெருமான் ‘ நான் அஷ்டபுஜன் ’ என்ன வேண்டியிருக்க, ‘அட்டபுயகரத்தேன் ’ என்றது ஏன் ?

என்று. இதற்குக் கேண்மின். 'நான் அட்டபுயன்' என்று சொல்லிக்கொண்டால் தன்னை எம்பெருமானாகத் தானே வெளியிட்டதாய் விளங்கிவிடும். அப்படி ஸ்பஷ்டமாகச் சொல்லிக்கொள்ள எம்பெருமானுக்குத் திருவுள்ளமில்லை. வேற்று மனிதனாகப் பொய் சொல்லிக்கொள்ளவும் விருப்பமில்லை; ஆகவே வெகு சாதுரியமாகச் சொன்ன விடை 'அட்டபுயகரத்தேன்' என்பது. 'அஷ்டபுஜ க்ஷேத்திரத்திற்கு நான் அதிபதி' என்றதாகவுமாம்; 'அஷ்டபுஜ க்ஷேத்திரத்தில் கிடப்பானொருவன் நான்' என்று ஸாமான்யமாகச் சொல்லிக்கொண்டதாகவுமாம்.

739. துஷ்யந்தமஹாராஜன் வேட்டையாடிக்கொண்டே சகுந்தலை யாச்ரமத்தை யடைந்தபோது இவனை இன்னானென்று தெரிந்துகொள்ள விரும்பி நீ யார்? என்று கேட்டார்க்கு அரசன் விடை கூறும்போது "பவதி ய: பௌரவேண ராஜ்ஞா தர்மாதிகாரே நியுக்தஃ ஸோஹம்" [புருவம்சத்து ப்ரபுவினாலே தரும காரியங்களைச் செய்யுமாறு நியமிக்கப்பட்டவன் யான்] என்று சாதுரியமாக விடை கூறினது இதற்கு உவமையாகும். புருவம்சத்து அரசனாகிய தன் தந்தையினால் நியமிக்கப்பட்ட அரசன் தான் என்றும், புருவம்சத்து ராஜாவுக்கு வேலைக்காரன் தான் என்றும் இருவகையாகப் பொருள்படுமாறு உரைத்தபடி. அஷ்டபுஜாஸ்பதேச! என்றவிதுவும் அந்தச் சாயையிலே யருளிச்செய்ததாம். "அஷ்டபுஜாகிலேச!" என்ற சிலருடைய பாடம் ஸர்வாத்மனா விரஸமென்று தவிர்க்க. சிலர் (அஷ்டபுஜாஸ்பதேச) என்றே பாடங்கொண்டும் பொருளின் மருமமுணராமல் "எட்டு புஜங்களுக்கு இருப்பிடமான ஈசனே" என்றுரைத்தனர்; அதுவும் அஸம்பத்தம். மற்றுஞ்சிலர் (அஷ்டபுஜாபதேச!) என்று பாடங்கூறுவர்; அஷ்டபுஜனென்று வ்யபதேச முடையவனே! என்று பொருள் கூறிவிடலாமாயினும் பாடம் ஆசிரியருகந்ததன்று. 'அட்டபுயகரத்தான்' என்கிற ஆழ்வாரருளிச் செயலுக்குச் சேர்ந்த பாடம் (அஷ்டபுஜாஸ்பதேச!) என்பதேயாம் என்று தெளிக.

740. (அஷ்டபு. 3) * ஸ்வரூப ரூபாஸ்த்ர * இத்யாதி. இந்த ச்லோகத்தின் கருத்தை அநுபவரஸிகர்களே உய்த்துணர வல்லவர்கள். அஷ்டபுஜனாய் நின்ற நிலையிலே பரத்வ ஸௌலப்யங்களிரண்டும் பொலிய நின்றாலும் பரத்வத்திற்காட்டிலும் ஸௌலப்யமே விஞ்சியிருக்கும்படியைத் திருவுள்ளம்பற்றி அதற்



கொரு ஹேது விசேஷத்தை உல்லேகிக்கிறாரிதில். ஸ்வரூபமோ பரத்வமே வடிவெடுத்தது. திவ்யமங்கள விக்ரஹமோ "ரூபமேவாஸ்ய ஏதந்மஹிமாநம் வ்யாசஷ்டே" என்கிற கணக்கிலே பரத்வத்தைக் கோட்சொல்லித் தருகின்றது. செம்பொனிலங்கு வலங்கைவாளி திண்சிலை தண்டொடு சங்க மொள்வாள், உம்பரிருசுட ராழியோடு கேடக மொண்மலர் * என்னப்பட்ட அஷ்ட திவ்யாயுதங்களும், * கிரீட மகுட சூடாவதம்ஸ மகர குண்டல க்ரைவேயக ஹார கேயூர கடக ஸ்ரீவத்ஸ கௌஸ்துப முக்தா தாம உதரபந்தந பீதாம்பர காஞ்சீகுண நூபுராத்யபரிமித திவ்ய பூஷணங்களும் "வக்ஷஸ் ஸ்தலயாம் துலஸி கமலா கௌஸ்துபைர் வைஜயந்தீ ஸர்வேசத்வம் கதயதிதராம் ரங்கதாம்நஃ" என்று பட்டரருளிச் செய்தபடியே பரத்வ பிசுநங்களாயிரா நின்றன. ஆக இவற்றையடைய ஸேவிக்கும்போது 'இவன் பராத்பரனல்லனோ? இவனை நாமோ அணுகுவது!' என்று கூச வேண்டியிருக்கும். அங்ஙன் கூசினவர்கள் * வளவேழுலகு தலையெடுத்துப் பிற்காலிக்க வேண்டியதாயுமிருக்கும். அங்ஙனே ஆகாமைக்காக ஸௌசீல்யாதி குணங்களைக் காட்டி யீடுபடுத்திக் கொள்ளுவது எம்பெருமானுடைய இயல்பு. அவ்வெளிமைக் குணங்களை ஏக காலத்திலேயே முற்றும் காட்டிவிட்டால் பரத்வத்தை யநுபவிக்கப் பாங்கில்லையாகும். பரத்துவத்தை மட்டும் காட்டிப்போந்தால் அதையநுபவிக்க அதிகாரிகளில்லை; சீலாதிகளான எளிமைக் குணங்கள் காட்டிலெரித்த நிலாவாகியொழியும். எம்பெருமான் பரம சதுரனாகையாலே ஸாத்மிக்க ஸாத்மிக்க அநுபவிப்பிக்க வேண்டி 'இவன் பராத் பரனல்லனோ!' என்கிற சிந்தையே விளையாதபடிக்கு ஸௌசீல்ய ஸௌலப்யாதிகளான எளிமைக் குணங்களை க்ரமேண காட்டியருளும்படியைக் கூறினாராயிற்று. [போகே ம்ருதுஉபக்ரமதாம் அபீப்ஸந்] பரத்வத்தை ப்ரகாசிக்க வொட்டாமல் சீலாதிகளாலே மறைப்பதற்குக் காரணம் சொல்லுகிறது. முந்துற முன்னம் பரத்வத்தை யநுபவிக்கப்புக்கால் பெருவெள்ளத்திலே அமிழ்ந்து போம்படியாமத்தனை. இது மிக வியக்கத்தக்க உல்லேகம்.

741. (அஷ்டபு. 5) * அபீதிஹேதோரித்யாதி * களைவாய் துன்பம் களையாதொழிவாய் களைகண் மற்றிலேன் * என்கிற பாசுரத்தை யுட்கொண்டு அருளிச் செய்யும் சுலோகமிது. அபீதிஸ்தவத்தின் தொடக்கத்தில் "அபீதிரிஹ யஜ்ஜுஷாம்

யதவதீரிதாநாம் பயம் பயாபயவிதாயிநோ ஜகதி யந்நிதேசே ஸ்திதாঃ " என்றருளிச்செய்த ச்லோகம் இங்கு அநுஸந்தேயம். ஸம்ஸாரபயம் முதலானவற்றைப் போக்கவேணுமானால் தேவரீர் போக்கலாகுமே யொழிய அல்லாதார் போக்க அவகாசமேது? அவர்கள் தங்களுக்கு நேரும் பயத்தையே தாங்கள் போக்கிக் கொள்ளமாட்டாமல் தேவரீரைத் தஞ்சமாகப்பற்றி நிற்கும்போது, எங்கள் பயத்தைப் போக்க ப்ரஸக்திதானுண்டோ? என்கை. தேவரீரைப்பற்றி " நின்னருளே புரிந்திருந்தேன் " என்றிருக்கு மெங்களுக்கு பயந்தானுண்டாகவும் மாட்டாது. தேவரீர் யார் பக்கலில் சீறியருளுகிறதோ அவர்கள் வேறு யாரிடத்திலும் ரக்ஷை பெறமுடியாதென்கிறார். " ப்ரஹ்மா ஸ்வயம்பூঃ சதுராநநோ வா.........த்ராதும் ந சக்தா யுதி ராமவத்யம் " என்ற திருவடிவாக்கை நினைப்பது.

742. (அஷ்டபு. 7) * ஸமாதிபங்கேஷ்வபி * இத்யாதி. சாஸ்த்ரங்களிலே பக்தியோகாதிகள் மத்ப்ராப்தி ஸாதநமாகச் சொல்லியிருக்கையாலே ஜ்ஞாந சக்திவைகல்ய மில்லாதவரான நீர் அவற்றிலே யிழிந்து அவ்வழியாலே என்னைப் பெறலாகாதோ வென்று எம்பெருமான் திருவுள்ளம் பற்றினனாக, ஆசிரியர் அதற்கு விண்ணப்பஞ் செய்கிறாரிதில், ஸ்வப்ரவ்ருத்திகள் ஸர்வாத்மநா ஸாபாயங்களாகையாலே அவற்றுக்கு இடையூறுகள் விளைந்தே தீரும். * பதநாந்தாஸ் ஸமுச்ச்ரயா: * என்கிற கணக்கிலே ஆரூட பதிதனாகை ப்ராப்தமாகக் கூடும். ஸித்தோபாய பூதரான தேவரீரை வரித்து " நிர்ப்பரோ நிர்ப்பயோஸ்மி " என்றிருக்கக் கடவனான அடியேன் ஒருகால் பக்தியோகத்தில் ஆரோஹண நிலையையும் அடுத்தபடி பாப ப்ராசுர்யத்தாலே கீழ் விழும் நிலைமையையும் ஸஹிக்ககில்லேன். தேவரீர்கை பார்த்திருக்குமதுக்கு மேற்பட க்ஷேமமில்லை யென்று கொண்டேன் என்றாராயிற்று.

743. காமாஸிகாஷ்டகத்தைச் சிறிது அநுபவிப்போம். மன்னுமதிட்கச்சி வேளுக்கையாளரியை " என்று பெரிய திருமடலில் திருமங்கையாழ்வாரும், மூன்றாந் திருவந்தாதியில் * சிறந்தவென்சிந்தையும் * அன்றிவ்வுலகம் * விண்ணகரம் வெஃகா * என்கிற பாசுரங்களில் பேயாழ்வாரும் மங்களாசாஸனம் செய்தருளின திருப்பதி வேளுக்கையென்பது. இத்தலத் தெம்பெருமான் ந்ருஸிம்ஹரூபியாக ஸேவைஸாதித்தருள்வதனால் ' சிங்கப்பெருமாள் கோயில் ' என்றும் வழங்கப்பெறுமித் தலம். ' வேள் இருக்கை ' என்கிற இரண்டு சொற்கள் சேர்ந்து வேளுக்கையென மருவிற்று. வேள் என்று ஆசைக்குப் பெயர்; ஆசையோடு எழுந்தருளியிருக்குமிட மென்றவாறு. காமாஸிகா என்ற வடமொழி நாமத்தின் பொருளுமிதுவேயாகும். காமேந ஆஸிகா - காமாஸிகா. இதில் முதல் சுலோகத்திலேயே " *காமாத் அதிவஸந்* " என்று இப்பொருள் விவரிக்கப் பட்டதாயிற்று. இப்பொருளிலேயே ' மதநாஸிகா ' என்றுமருளிச்செய்கிறார். காமசப்தமும் மதநசப்தமும் பர்யாயமிறே. ஒவ்வோரெம்பெருமானுக்கும் எட்டெட்டாகவே ஸ்துதிகளையிட்டருள்வது " இனமலரெட்டுமிட்டு " என்றும் * கந்தமாமலரெட்டுமிட்டு * என்றும் திருமங்கையாழ்வாரருளிச்செய்த கணக்கிலே அஷ்டவித புஷ்பங்களை யிடுவதோடொக்கும். "அஹிம்ஸா ப்ரதமம் புஷ்பம் புஷ்பமிந்த்ரிய நிக்ரஹঃ, ஸர்வபூத தயா புஷ்பம் க்ஷமா புஷ்பம் விசேஷத:, ஜ்ஞாநம் புஷ்பம் தப; புஷ்பம் த்யானம் புஷ்பம் ததைவ ச ; ஸத்யமஷ்டவிதம் புஷ்பம் விஷ்ணோঃ ப்ரீதிகரம் பவேத்" என்று அஷ்டவித புஷ்ப விவரணம் காண்க. ஆண்டாள் பாமாலை வேறாகவும் பூமாலை வேறாகவும் ஸமர்ப்பித்தாள் ; அங்ஙனன்றியே நம் ஆசிரியர், பாமாலையையே பூமாலையாக ஸமர்ப்பிக்கிறார் போலும்.

744. (காமாஸிகா. 7) "அங்கண்ஞாலமஞ்ச அங்கோராளரியாய் " என்றும் " எரிந்தபைங்கணிலங்கு பேழ்வாய் எயிற்றொடு இதெவ்வுருவென்று இரிந்து வானோர் கலங்கியோட விருந்தவம்மான் " என்றும் சொல்லுகிறபடியே மஹா பயங்கர ரூபியாக ஆளரி அவதரித்தாலும் " ஸ்மேராநநாக்ஷி கமலைர் நமத: புநாநாந் தம்ஷ்ட்ராகதாப்ருகுடிபிர் த்விஷதோ துநாநாந் " என்ற கணக்கிலே பிரதிகூலர்க்கு அணுகவொண்ணாததாயும் அநுகூலர்க்கு ஸௌம்யமாயுமிறேயிருப்பது திருமுகமண்டலம். அதுதன்னை யநுபவிக்கிறாரிதில். வக்த்ரே என்கிற விசேஷ்யத்திற்கு நான்கு விசேஷணங்கள் இடப்பட்டன. ஸடாபடலங்களினால் பயங்கரமாயும் ஸிம்ஹ கர்ஜனையினால் உத்படமாயு மிருக்குமிருப்புக்கு மேலே சீற்றத்தையும் புருவநெறிப்பையும் ஏறிட்டுக் கொண்டதனால் ஆஸுரப்ரக்ருதிகளுக்கு அணுகவொண்ணாத நிலை சொல்லிற்றாயிற்று. இந்த நிலைமையிலும் * பள்ளியிலோதி வந்த சிறுக்கன்மேல் திருவருள் வெள்ளம் குறையற்றிருக்கு

மிருப்பு உத்தரார்த்தத்தில் பேசப்படுகிறது. [*தநுஜடிம்பதத்த ஸ்தநா* க்ருபா] க்ருபையானது ப்ரஹ்லாதாழ்வானுக்கு ஸ்தந்யபானம் செய்விக்கிறதாக இங்குச் சொன்னது—அவனை அஞ்சக் கொடாதே போஷிக்கின்றதென்னும் தாத்பர்யத்திலேயாம். திருவாய்மொழியில் (3—6—6) * சீற்றத்தோடு அருள் பெற்றவனடிக் கீழ்ப் புகநின்ற செங்கண்மால் * என்றவிடத்து ஈடுமுப்பத்தாருயிரப்படியில்—" ஹிரண்யன்பக்கல் சீற்றம் செல்லாநிற்க ஸ்ரீப்ரஹ்லாதாழ்வானுக்குக் கிட்டலாயிருந்தபடி எங்ஙனே ? யென்று எம்பெருமானுரைச் சிலர் கேட்க, ஸிம்ஹம் ஆனைமேலே சீறினும் குட்டிக்கு முலையுண்ணலாம்படியிருக்குமிறே என்று அருளிச்செய்தார். ஆச்ரித வாத்ஸல்யத்தாலே அவர்கள் விரோதிகள் மேலே சீறின சீற்றமானால் பின்னை அவர்களுக்கு அணையவொண்ணுதபடி யிருக்குமோ? என்று மருளிச் செய்தார் " என்றுள்ள ஸம்வாதம் இங்கே அநுஸந்தேயம். எம்பெருமானுரருளிச் செய்தவிது "இழவு தரியாததோரீற்றுப்பிடியிளஞ்சீயம் தொடர்ந்து முடுகுதலும் குழவியிடைக் காலிட்டெதிர்ந்துபொருங் கோவர்த்தனம் " என்கிற பெரியாழ்வார் திருமொழியை யுட்கொண்டேயாம். இவ்விடங்களில் முலையுண்ணக் கொடுத்தல் பேசப்பட்டிருப்பதை யுட்கொண்டே ஆசிரியர் இங்கு " *தத்தஸ்தநா* " என்றருளிச்செய்தாரென்றுணர்க.

745. (காமாஸி. 8) * த்வயி ரக்ஷதி, * ஈச்வரனையொழிந்தவர்கள் ரக்ஷகரல்லரென்னுமிடம் ப்ரபந்நபரித்ராணத்திலே நிரூபிதமாகையாலே அதுதன்னை ஸ்திரீகரித்தருளா நின்றுகொண்டு இந்த ச்லோகமருளிச் செய்கிருர். ஸர்வேச்வரன் கைவிடாது ரக்ஷித்தருளுமளவில் இதர ரக்ஷகர்களைத் தேடியலையவேண்டா ; அவன் ரக்ஷித்தருளத் திருவுள்ளம் பற்ருதே கைவிட்டானுகில் அப்போதும் ரக்ஷகாந்தராணும் அந்வேஷணம் விபலம் என்று திண்ணிய அத்யவஸாயம் கொண்டிருக்கும்படியைத் தெரிவித்தருளினுராயிற்று. அஷ்டபுஜாஷ்டகத்தில் (6) " த்வயி ப்ரவ்ருத்தே மம கிம் ப்ரயாஸை: த்வய்யப்ரவ்ருத்தே மம கிம் ப்ரயாஸை: " என்றருளிச் செய்ததும் இதுவும் பர்யாயமேயென்றுணர்க.

746. (சரணுகதிதீபிகாநுபவம் தொடங்கப்படுகிறது.) விளக்கொளியெம்பெருமானென்று தென்மொழியிலும் தீபப்ரகாசனென்று வடமொழியிலும் வழங்கு மெம்பெருமா னெழுந்தருளியிருக்கும் திவ்யதேசம் திருத்தண்காவென்று ப்ரஸித்திபெற்றிருக்கும். " என்னை யாளுடை யீசனை யெம்பிரான் தன்னை யாம் சென்று காண்டும் தண்காவிலே " என்று பெரியதிருமொழியிலும், " விளக்கொளியை மரதகத்தைத் திருத்தண்காவில் " என்று திருநெடுந்தாண்டகத்திலும் திருமங்கையாழ்வாரால் மங்களாசாஸனம் செய்யப்பெற்ற திவ்யதேசமிது. இத்தலத்தின் பரிஸரத்திலேயே ஆசிரியர் தாமும் அவதரித்தருளினர். இத்தலத் தெம்பெருமானைத் துதிக்கத் திருவுள்ளம்பற்றின வாசிரியர் இந்த ஸ்துதிக்கு சரணுகதி தீபிகையென்று திருநாமமிட்டருளினர். சரணுகதி ரஹஸ்யார்த்த தத்துவங்களை இதில் வெளியிட்டருளத் திருவுள்ளம்பற்றியே இந்தத் திருநாமமிட்டருளினர்.

747. சரணுகதிக்கு இன்னுர் அதிகாரியென்பது, சரணுகதியின் ஸ்வரூபம் இத்தகைத்தென்பது, சரணுகதர்களின் மேன்மையிருக்கும்படி முதலான பல விஷயங்கள் எளியமுறையில் வெளியிடப்பட்டிருப்பது இதுதன்னிலேயாம். ந்யாஸ தசகம், ந்யாஸ திலகம், ந்யாஸ விம்சதி என்னும் க்ரந்தங்களோடொக்கப் பரிகணநீயமானது இது, சாஸ்த்ரார்த்தங்களை ஸ்தோத்ரத்திலேயேறிட்டு அருளிச்செய்யும் வழியை முதன் முதலாக ஆளவந்தார் காட்டியருளினுர். ஸ்தோத்ரரத்நத்திற்கு அவதரித்திருக்கிற தனியனைக்கொண்டு அதனை யுணரலாம் ; 'ஸ்வாதயந்நிஹ ஸர்வேஷாம் த்ரய்யந்தார்த்தம் ஸுதுர்க்ரஹம். ஸ்தோத்ரயாமாஸ யோகீந்த்ர: ' என்றிறே அந்தத் தனியனிருப்பது. அவ்வண்ணமாகவே இந்த ஸ்துதியின் முதல் ச்லோகமே நன்கு அமைந்ததாயிற்று.

748. (சரணுகதிதீபிகை 1) "எதிவரனுர் மடைப்பள்ளி வந்த மணமெங்கள் வார்த்தையுள் மன்னியதே " என்றும் " இதி யதிராஜமஹாநஸ பரிமள பரிவாஹ வாஸிதாம் பிபத " என்று மருளிச்செய்பவர் ஆசிரியர். எம்பெருமானுர் பக்கலிலே பழுக்கக் கேட்ட கிடாம்பியாச்சான் மூலமாகக் கிடாம்பி யப்புள்ளாரளவும் வந்து தேங்கின அர்த்த விசேஷங்கள் இந்த சரணுகதி தீபிகையென்னும் ஸ்துதி நூல் வழியாக வெளிவருகின்றமை பாரீர் என்று விவக்ஷித்து " யதீச்வர மஹாநஸ ஸம்ப்ரதாயம் இஹ பச்யந்து " என்றருளிச் செய்தாராயிற்று. யதீச்வர மஹாநஸ ஸம்ப்ரதாயார்த்தம் அநேக விஷயகங்களாக இருந்தாலும் ப்ரக்ருதம் வெளிவருவது சரணுகதி விஷயகமென்று தெரிவிக்க

வேண்டி "ப்ரபதந ப்ரவணா மஹாந்த: பச்யந்து" என்றார். 'எம்பெருமானுக்கு இதுவொரு ஸ்தோத்ர நூல்" என்று ஸாமாந்யமாக நினைக்கலாம்படியிருந்தாலும். இது, மற்ற ஸ்தோத்ரங்களைப் போன்றதன்றென்றும் சரணாகதியின் விசேஷார்த்தமே ஸ்துதியாக வடிவெடுத்ததென்றும் முதல் பாதத்தினால் வ்யஞ்ஜிதமாயிற்று. மூன்றாவது பாதத்தில் ஸ்வரூப ப்ராப்தமான நைச்யாநுஸந்தானமுறைத்திருக்கும். சிறந்த அர்த்த விசேஷமானது நீசனேன் நிறைவொன்றுமிலேனான என்னுடைய வாக்கோடே கலசியிருந்தாலும் கெடுதலொன்று மடைந்ததில்லை யென்கை. ப்ராமாணிகத்வமும் ப்ரபந்நஜந பரிக்ராஹ்யத்வமுமாகிற ஸ்வபாவம் குன்றாமையை (அஜஹத் ஸ்வபாவம்) என்பதனாலருளிச் செய்தபடி.

749. (சரணாகதிதீபிகை 3) *தீபஸ் த்வமேவ ஜகதாம் தயிதா ருசிஸ் தே தீர்க்கம் தம: ப்ரதிநிவர்த்யமிதம் யுவாப்யாம். * ஸ்தவ்யம் ஸ்தவப்ரியதமம் சரணோக்தி வச்யம் ஸ்தோதும் பவந்தமிஹ வாஞ்சதி ஜந்துரேஷ:. * விளக்கொளியென்றும் தீபப்ரகாசனென்றுமுள்ள திருநாமம் எம்பெருமானொருவனுக்கே வழங்கப்பட்டு வந்தாலும் இது திவ்ய தம்பதிகளுக்கே ஏற்ற திருநாமமாகுமென்பதை மூதலியாநின்று கொண்டு ஸ்துதியிலே தமக்குள்ள விருப்பத்தை விண்ணப்பஞ் செய்கிறாரிதில். "அநந்யா ராகவேணாஹம் பாஸ்கரேண ப்ரபா யதா" என்று பிராட்டியும், "அநந்யா ஹி மயா ஸீதா பாஸ்கரேண ப்ரபா யதா" என்று பெருமாளும் தனித்தனியே பணித்தருளினபடியே எம்பெருமான் மணித்யுமணிதீபாதிரூப ப்ரபாவத் பதார்த்தமாயும், பிராட்டி தத்குண பூதமான ப்ரபாபதார்த்தமாயுமிருக்கை சாஸ்த்ரஸித்தம். "ஜயத்யாச்ரித ஸம்த்ராஸ த்வாந்த வித்வம்ஸநோதய:, ப்ரபாவாந் ஸீதயா தேவ்யா பரமவ்யோம பாஸ்கர:" என்று ஆசிரியர் தாமும் (ரகுவீர கத்யோபக்ரமே) இதுதன்னை யருளிச்செய்தார். பட்டரும் ஸ்ரீகுணரத்ந கோசத்திலே "ஸ்வயா தீப்த்யா ரத்நம் பவதபி மஹார்க்கம் ந விகுணம் ந குண்ட ஸ்வாதந்த்ர்யம் பவதி ச ந சாந்யாஹித குணம்" என்று அந்யபரோக்தியினாலே இதுதன்னை நிபந்தித்தார். ஆக, விளக்கும் ஒளியும் சேர்ந்தே தமோநிரஸநக்ஷமமாகக் காண்கையாலே திவ்ய தம்பதிகளான நீங்களிருவரும் சேர்ந்து இவ்விருள்தருமாஞாலத்தின் தன்மையைத் தொலைத்தருளலாகுமென்றார்



பூர்வார்த்தத்தாலே. இத்தால் ஆசிரியர் தம்முடைய தமோ நிராஸத்தையும் ஸித்தவத்கரித்துக்கொண்டு அபஹததமஸ்கரான தாம் ஸ்துதிக்ருதிக்கு அர்ஹரென்னுமிடத்தை உத்தரார்த்தத்தாலே பேசுகிறாராயிற்று.

750. ஸஹஸ்ரநாமத்திலே "ஸ்தவ்ய: ஸ்தவப்ரிய:" என்றதை "ஸ்தவ்யம் ஸ்தவ ப்ரியம்" என்று அநுபாஷிக்கிறார். ஸ்தவ்யத்வமாகிறது ஸ்துதி யோக்யத்வம். "கொள்ளக் குறைவிலன்" (திருவாய்மொழி 3—9—5) என்றவிடத்து ஈடுமுப்பத்தாறாயிரத்திலே "நீங்கள் யாவை யாவை சில ஏற்றங்களையிட்டுக் கவி பாடினிகோள், அவற்றை ஸ்வீகரிக்குமிடத்தில் ஒரு குறையுடையனல்லன்" என்றருளிச் செய்தது இங்கே அநுஸந்தேயம். இதன் கருத்து யாதெனில்; தலையில் மயிரில்லாதானொருத்தனைக் குழலழகனென்று பாடினால் அவன் வெள்கவேண்டியிருக்கும்; அறிவொன்று மில்லாதானொருவனைக் கல்விக் கடலென்று பாடினால் அவன் அந்த ஸ்துதியைக் கொள்வதற்கு லஜ்ஜிக்க வேண்டியிருக்கும். எம்பெருமான் ஸமஸ்த கல்யாண குணாத்மகனாகையாலே யார் எங்ஙனே துதித்தாலும் அவ்விதமான ஸ்துதிகளைக் கொள்ளக் குறைவில்லாதானாயிருப்பன்; இதுவாயிற்று ஸ்தவ்யத்வம். இனி ஸ்தவப்ரியத்வமாவது—மக்களின் மழலைச் சொற்களைக் கேட்க ஆசைகொண்டிருக்கும் மாதா பிதாக்களைப்போலே நம்போல்வாருடைய அவத்யஜடிலமான துதிமொழிகளையும் கேட்கையிலே ருசியுடையனா யிருக்கையாம். ஸ்தவே ப்ரிய:- ஸ்தவப்ரிய: ; ஸ்தவ: ப்ரிய: யஸ்ய ஸ:- ஸ்தவப்ரிய:, என்று தத்புருஷ பஹுவ்ரீஹிகளிரண்டுமாம்.

751. (அதிலேயே) [சரணோக்திவச்யம்] சரணாகதி தான் மாநஸிகம் வாசிகம் காயிகம் என்று மூன்று படிப்பட்டிருக்குமே. "ஜ்ஞாநாந் மோக்ஷமாகையாலே மாநஸமாகக் கடவது" என்று சாஸ்த்ரார்த்தமிருக்கச் செய்தேயும் மநஸ் ஸஹகாரமின்றிக்கே சரணமென்று உக்திமாத்ரமுண்டானாலும் அவ்வளவுக்கே ஸர்வாத்மநா வசம்வதனா யிருப்பனென்கை. "என்னாரைச் சொன்னாய், என்பேரைச் சொன்னாய், என்னடியாரை நோக்கினாய், அவர்கள் விடாயைத் தீர்த்தாய், அவர்களுக் கொதுங்க நிழலைக் கொடுத்தாய்" என்றாப்போலே மடிமாங்காயிட்டு விஷயீகரிக்கு மெம்பெருமான் சரணோக்தியைப்பெற்றானாகில் ஸர்வஸ்வமும் பெற்றானாய்க் களிப்பனாயிற்று. * மாதவனென்றதே

கொண்டு * என்றும் * திருமாலிருஞ் சோலைமலை யென்றேன் என்னத் திருமால் வந்து என்னெஞ்சு நிறையப் புகுந்தான்* என்றுமுள்ள பாசுரங்களை இங்கே யோஜிப்பது. 'அஹம் வாஞ்சாமி' என்ன வேண்டுமிடத்து 'ஏஷ ஜந்துர் வாஞ்சதி' 'ஏஷ ஜனோ வாஞ்சதி' என்ருப்போலே ப்ரதம புருஷனையிட்டுச் சொல்லுகை கவி ஸம்ப்ரதாயம்.

752. (சரணுகதி. 5) *ஸ்வாமிந்! கபீரஸூபகம் ச்ரமஹாரி பும்ஸாம் மாதுர்யரம்யமநகம் மணிபங்க த்ருச்யம், வேகாந்தரே விதநுதே ப்ரதிபிம்பசோபாம் லக்ஷ்மீஸரஸ்ஸரஸிஜாச்ரய மங்ககம் தே.* * மிக விலக்ஷணமான சிலேடையில் இந்த சுலோகமமைந்தது. வேகவதியாற்றினுள்ளே பிராட்டியின் திருமேனியும் எம்பெருமான் திருமேனியும் பிரதிபலிக்கின்றது. இதை யுற்றுநோக்குமிடத்து, பிராட்டியின் திருமேனிதான் எம்பெருமான் திருமேனியாகத் தோன்றுகின்றதோ; அல்லது எம்பெருமான் திருமேனிதான் பிராட்டியின் திருமேனியாகத் தோன்றுகின்றதோ! என்று விதர்க்கிக்கலாம்படியுள்ளது. ஸ்த்ரீயான பிராட்டியின் உருவமும் புமானுன எம்பெருமானுடைய உருவமும் இந்த விதர்க்கத்தை எங்ஙனே ஸஹிக்குமென்று சங்கை தோன்றக்கூடும். விசேஷண ஸாம்யத்தையிட்டு அந்த வாசி தோன்ருதபடி செய்திருப்பது விலக்ஷண கவிதாசாதுர்யம்.

753. பிராட்டி ஒரு தடாகமாக ரூபணம் செய்யப்பட்டாள்; அத் தடாகமும், * தாமரை நீள்வாசத்தடம் போல் வருவானே * என்றும் * தயரதன் பெற்ற மரதக மணித்தடம் * என்றும் தடமாகச் சொல்லப்பட்ட எம்பெருமானும் விசேஷணங்களினுல் ஒற்றுமை பெறுவிக்கப்படுகிற அழகைக் காண்மின். பிராட்டியை ஒரு தடாகமாக ரூபித்தபடியாலே தடாகத்திற்கும் பிராட்டிக்கும் ஸ்வபாவ ஸாம்யத்தை முன்னம் கிரஹிக்கவேணும். இவ்விரண்டுக்கும் எம்பெருமானுக்கும் ஸ்வபாவ ஸாம்யத்தை உடனே க்ரஹிக்கவேணும். ஆக மூன்று விசேஷ்யங்களுக்கு [தடாகம், பிராட்டி, எம்பெருமான்களுக்கு]ப் பொருந்தக்கூடிய விசேஷணங்களின் பொருட்சுவையை இனியநுபவிப்பது.

754. தடாகம் ஸாமாந்யமானதன்று; அஃது எப்படியிருக்குமென்ருல், [*கபீரஸூபகம்*] ஆழமுள்ளதும் அழகுள்ளதுமாயிருக்கும். [*பும்ஸாம் ச்ரமஹாரி*] தன்னிலே அவகாஹித்தவர்களின் சிரமத்தை யெல்லாம் போக்கும். [*மாதுர்ய ரம்யம்*]



இனிப்பான தீர்த்தமுடையதாயிருக்கும். (*அநகம்*) அழுக்கு முதலிய கல்மஷமற்றிருக்கும். (*மணிபங்கத்ருச்யம்*) "பங்கஸ் தரங்க ஊர்மிர்வா" என்கிற அமரகோசத்தின்படி பங்கமென்று அலைக்குப் பெயர். மணிகொழிக்கு மலைகள் மோதப் பெற்றிருக்குமென்கை. (*ஸரஸிஜ ஆச்ரயம்*) தாமரைகளுக்கு இருப்பிடமாயுமிருக்கும். இனி பிராட்டி பக்ஷத்தில், (*கபீரஸூபகம்*) கம்பீரத்தன்மையும் ஸௌபாக்யமும் பொருந்தியவள். (*பும்ஸாம் ச்ரமஹாரி*) தன்னை யடிபணிந்தவர்களின் சிரமங்களை யெல்லாம் புருஷகாரக்ருத்யத்தினுல் போக்குமவள். [*மாதுர்ய ரம்யம்*] எம்பெருமானை வசீகரிக்கவல்ல வாங்மாதுர்யத்தை யுடையவள். [*அநகம்*] சிலரை யநுக்ரஹிப்பதும் சிலரை நிக்ரஹிப்பதுமான குற்றமற்றிருப்பவள், [*மணிபங்கத்ருச்யம்*] அநேக திவ்யபூஷண பூஷிதையாயிருக்கையாலே ரத்ன சகலங்கள் விளங்கப்பெற்றிருப்பவள். [*ஸரஸிஜ ஆச்ரயம்*] "பத்மப்ரியே பத்மினி பத்மஹஸ்தே பத்மாலயே பத்மதளாயதாக்ஷி" என்கிறபடியே பத்மஸம்பந்தம் மிக்கிருப்பவள்.

755. இனி எம்பெருமான் பக்ஷத்தில் [*கபீரஸூபகம்*] காம்பீர்ய ஸௌந்தர்யங்களில் குறையற்றவன். (*பும்ஸாம் ச்ரமஹாரி*] *நினைந்திருந்தே சிரமம் தீர்ந்தேன்* என்கிறபடியே சிந்தித்தவளவிலேலே சிரமங்களைப் போக்குமவன். (மாதுர்ய ரம்யம்) "ம்ருதுர் தயாளுர் மதுரஸ் ஸ்திரஸ் ஸம:" என்று ஆளவந்தாரருளிச்செய்தபடியே தேனும் பாலும் நெய்யும் கன்னலுமமுதுமொத்து அக்காரக்கனியாயிருப்பவன். (அநகம்) அகில ஹேயப்ரத்யநீகன். (மணிபங்கத்ருச்யம்) "மணிவிடம்பினி தஸ்ய மநோஹரே வபுஷி" என்னும்படியாயிருக்கும் திருமேனி. (ஸரஸிஜா ஆச்ரயம்) ஸரஸிஜாயா:—கமலாயா: ஆச்ரயபூதனுயிருப்பவன். ஆக இத்தகைய ஸ்வபாவ ஸாம்யங்களாலே பிராட்டியாகிற ஸரஸ்ஸிலே எம்பெருமான் பிரதிபலிப்பதாகவும் திவ்ய தம்பதிகளிருவரும் வேகவதீ ஸரித்ஸலிலத்திலே பிரதிபலிப்பதாகவும் வைத்து இங்ஙனே விலக்ஷண பாவனை பொலியப் பேசினவிது அத்புதவாக் சமத்காரம்.

756. (அதிலேயே 11) நிலாத்தென்றல் சந்தனம் குஸுமம் முதலான அசேதனப் பொருள்கள் தனக்கென்று ஒரு போகமின்றிக்கே பிறருடைய போகத்திற்கே எப்படி உறுப்பாகின்றனவோ, அப்படியே சேதநனும் தன்னிடத்தில் போக்த்ருத்வமிருப்

பதாக நினையாதே அசேதநத்திற்குப் போலே தனக்கும் போக்ய தைதான் வடிகட்டின வடிவென்று அத்யவஸித்து அதற்கேற்ப வர்த்திக்கவேணும். "செய்த்தலையெழுநாற்றுப்போல் அவன் செய்வன செய்துகொள்ள" என்று பெரியாழ்வாரருளிச் செய்த படியே வர்த்திக்கையாம். ஜீவாத்மா அசேதனம் போலன்றிக்கே ஜ்ஞாதாவாகத் தேறுகையாலே அதடியாக கர்த்தாவாகவும் தேறுவன். கர்த்தாவானபோதே போக்தாவாகவும் தேறுவன். ஆனால் இது வடிகட்டவேண்டிய நிலையேயல்லது வடிகட்டின நிலையன்று. ந்யாஸதசகத்திலே "ஸ்வாமீ ஸ்வசேஷம் ஸ்வவசம்" என்கிற சுலோகத்திலே ஸ்வசப்தத்தை ஒன்பதின்கால் இட்டருளி வடிக்கட்டிவைத்த சாஸ்த்ரார்த்தமுணர்க. ப்ரக்ருத ச்லோகத்தில், ஜ்ஞாதாவும் கர்த்தாவுமான ஜீவனிடத்திலே போக்த்ருத்வத்தை எம்பெருமான் தானே விரும்பி வைத்திருந்தாலும் ஸ்வரூபஜ்ஞனான ஜீவன் அசித்வத் பாரதந்த்ர்யமே தனக்கு வேஷமென்றுணர்ந்து 'போக்த்ருத்வம் எம்பெருமானுக்கே யல்லது நமக்கன்று; நமக்கு போக்யதையே வடிவம்' என்றிருக்கக் கடவன் என்பதை (இந்த சுலோகத்தில்) ஒரு விலக்ஷண த்ருஷ்டாந்த முகத்தாலே சிக்ஷித்தருளுகிறார்—*பாஞ்சாலிகா சுகவிபூஷண போகதாயீ இத்யாதியால்.* பாஞ்சாலிகா—பதுமை. சுகம்—கிளி. கிளிவடிவமாக ஒரு பதுமையைப் பண்ணி அதற்குச் சில போகங்களைக் கொடுத்து அது புஜிப்பதுபோல ஊட்டி உகந்திருக்கும் மஹாப்ரபு போலே யென்கிறார். "பாஞ்சாலி காம்சுக" என்கிற பாடத்தில் மரப்பாச்சிக்குச் சேலையையுடுத்திக் கண்டு களிப்பதைச் சொன்னபடி.

757. (அதிலேயே 12) * *த்வாம் மாதரம் ச பிதரம் ஸஹஜம் நிவாஸம் ஸந்தஸ் ஸமேத்ய சரணம் ஸுஹ்ருதம் கதிம் ச, நிஸ்ஸீமநித்ய நிரவத்ய ஸுகப்ரகாசம் தீபப்ரகாச! ஸவிபூதிகுணம் விசந்தி.* * "மாதா பிதா ப்ராதா நிவாஸச் சரணம் ஸுஹ்ருத் கதிர் நாராயண:" என்னுமுபநிஷத் வாக்யமே இந்த சுலோகமாக வடிவெடுத்துள்ளது. நாராயண சப்தார்த்தத்தை யனுஸந்திக்குமாசாரியர்கள் ஸ்ரீமந் நாராயணனையே எல்லாவுறவு முறையுமாக அநுஸந்திப்பார்கள். அதற்கு மூலம் மேலேகாட்டிய ச்ருதி வாக்யமேயாகும். பரப்ரஹ்மத்தை நிர்க்குணமாகவும் நிர்விபூதிகமாகவும் கொள்ளுமவர்களைப் போலன்றிக்கே ஸமஸ்தகல்யாண குணாத்மகமாகவும்



விபூதிவிஸ்தாரஸநாதமாகவும் கொள்ளுகின்ற ஸ்ரீவைஷ்ணவ பரமைகாந்திகள் தேவரீரையே ஸகலவித பந்துவுமாகப் பற்றி தேவரீருடைய திருக்கல்யாணகுண விசேஷங்களையும் விபூதிகளையும் அநுபவித்து ஆநந்திக்கிறார்களென்றாராயிற்று. விசந்தி—நிர்விசந்தி என்றபடி.

758. (அதிலேயே 13) * *ஜந்தோரமுஷ்ய ஜநநே விதிசம்புத்ருஷ்டௌ ராகாதிநேவ ரஜஸா தமஸா ச யோக:, த்வைபாயநப்ரப்ருதயஸ் த்வதவேக்ஷிதாநாம் ஸத்வம் விமுக்திநியதம் பவதீத்யுசந்தி.* * "ஜாயமாநம் ஹி புருஷம் யம் பச்யேந்மதுஸூதந:, ஸாத்விகஸ் ஸ து விஜ்ஞேயஸ் ஸ வை மோக்ஷார்த்த சிந்தக:" என்கிற ப்ரமாணம் ஜாயமாந காலத்திலே ஸ்ரீமந்நாராயணன் கடாக்ஷிக்க நேர்ந்தால் ஸத்வகுணோந்மேஷ முண்டாகிறதென்று தெரிவிக்கின்றது. "பச்யத்யேநம் ஜாயமாநம் ப்ரஹ்மா ருத்ரோதவா புந:, ரஜஸா தமஸா சாஸ்ய மாநஸம் ஸமபிப்லுதம்" என்கிற ப்ரமாணம்—பிரமனோ ருத்ரனோ அப்போது பார்க்க நேர்ந்தால் ரஜஸ்தமோ குணங்களினால் அபிபவிக்கப்படுகையாகுமென்று தெரிவிக்கின்றது. ஆக இவ்விரண்டு ப்ரமாணங்களும் இந்த சுலோகமாக வடிவெடுத்திருக்கிறபடி. பகவச்சரணாகதியில் ஆபிமுக்யம் ஜாயமாந கடாக்ஷ விசேஷத்தினால் விளைகின்றதென்கையிலே தாத்பர்யம். [*ராகாதிநேவ*] துணி முதலியவற்றில் ரஞ்ஜக பதார்த்தங்களினால் விளையும் ராகலேபம் கழற்றவொண்ணாதாப் போலேயாயிற்று இந்த ரஜஸ்தமோலேபமும் என்றவாறு.

759. (அதிலேயே 14) * *கர்மஸ்வநாதிவிஷமேஷு ஸமோ தயாளு: ஸ்வேநைவ க்ல்ப்தமபதேச மவேக்ஷமாண:, ஸ்வப்ராப்தயே தநுப்ருதாம் த்வரஸே முகுந்த! ஸ்வாபாவிகம் தவ ஸுஹ்ருத்த்வமிதம் க்ருணந்தி.* * கீழ் "த்வாம் மாதரஞ்ச பிதரஞ்ச" (12) என்கிற சுலோகத்தில் உபாத்தமான ச்ருதியில் (*ஸுஹ்ருத்*) என்னப்பட்ட மஹாகுணத்தை விவரிக்கிறது இது. எம்பெருமான் ஸஹஜஸௌஹார்த குணத்தினால்தான் சரணாகதியில் ஆபிமுக்யத்தை விளைவித்தருளுகிறானென்கையிலே நோக்காக இஃதருளிச் செய்கிறபடி. "சோபநம் ஹ்ருத் யஸ்ய ஸ:—ஸுஹ்ருத்" என்று வ்யுத்பத்தியாகக் கடவது. சோபநாசம்ஸியான ஹ்ருதயத்தையுடையவரென்கை. விமுகர்களையும் வாரிப் பிடியாகப் பிடிக்க

வேண்டி, ஸர்வமுக்தி ப்ரஸங்க பரிஹாரார்த்தமாகச் சில வியாஜங்களை ஸ்வயமேவ கல்பித்து, வைத்திருப்பதை சாஸ்த்ரமுகத்தாலே அறிகிறேம். "என்னூரைச் சொன்னுய், என் பேரைச் சொன்னுய், என்னடியார்களை நோக்கினுய், அவர்கள் விடாயைத் தீர்த்தாய், அவர்களுக்கொதுங்க நிழலைக் கொடுத்தாய்" என்று தாணுக ஏறிடும் யாத்ருச்சிக ப்ராஸங்கிக ஆநுஷங்கிகாதி ஸுக்ருத விசேஷங்களையே இங்கு அபதேச மென்கிறது. "நன்மை யென்று பேரிடலாவதொரு தீமையுங் காணுதே" என்கிறபடியே பல சேதனர்களிடத்திலே இதுதானுங் காண வரிதாயிறேயிருப்பது. தனக்கேற இடம் பெறுவது சிலரிடத்திலேயாயிற்று. அதுதானும் தன்னுடைய ஸாமர்த்த்ய விசேஷத்திஞலாயது. இதுக்கடியான குணம் ஸௌஹார்தம். அதனைப் பேசிஞராயிற்று. இங்கு [த்வரஸே முகுந்த] என்றது "இன்று விண்ணுலகம் தருவாணுய் விரைகின்ருன் விதிவகையே" என்கிற திருவாய்மொழியை யநுவதித்தபடி.

760. (அதிலேயே 15) * நித்ராயிதாந் நிகமவர்த்மநி சாருதர்சீ ப்ரஸ்தாநசக்திரஹிதாந் ப்ரதிபோத்ய ஜந்தூந், ஜீர்ணஸ்தநந்தய ஜடாந்தமுகாநிவாஸ்மாந் நேதும் முகுந்த! யதஸே தயயா ஸஹ த்வம், * கீழ்ச்லோகத்தில் விவரிக்கப்பட்ட ஸௌஹார்தமே இதிலும் ப்ரகாராந்தரேண விவரிக்கப்படுகிறது. "நிகமவர்த்மநி நித்ராயிதாந்" என்றது வைதிகவிதிகளை யநுஷ்டிக்கப் பாங்கான ஞானமற்றவர்கள் என்றபடி. "ப்ரஸ்தாநசக்திரஹிதாந்" என்றது ஸ்வல்பஜ்ஞானமுண்டாணுலும் ஆசரிக்க சக்தியற்றவர்களென்றபடி. இப்படிப்பட்டவர்களை [தயயா ஸஹ ப்ரதிபோத்ய] ஒருபடி ஜ்ஞாநுநுஷ்டானங்களையுடையவர்களாகக்கொண்டு தட்டியெழுப்பி. இதற்கு ஹேது ஏதென்ன; [சாருதர்சீ] என்கிற ஸாபிப்ராய விசேஷணத்திஞல் அது சொல்லுகிறது. அப்போதப்போது பிராட்டி செய்தருளும் உபதேசங்கள் ["கிமேதத்? நிர்தோஷ: க இஹ ஜகதி!" இத்யாதிகள்] பலிக்கப் பெற்றவணுகையாலே மணற் சோற்றிலே கல்லாராயத் தகாது என்று கொண்டு உள்ள சில நன்மைகளையே சிறிதைப் பெரிதாக்கிப் பார்ப்பவணுகையாலே யென்றவாறு. [ஜீர்ண ஸ்தநந்தய ஜட அந்தமுகாநிவ அஸ்மாந் நேதும் யதஸே] கிழவர்கள் ஸ்தநந்தய ப்ரஜைகள் அறிவிலிகள் குருடர்கள் முதலானவர்கள் ஸர்வாத்மநா பராதீந ப்ரவ்ருத்திகர்களாகையாலே



அவர்களை வழிநடத்த முயலுமாபோலே எங்களையும் வழிநடத்தியநுக்ரஹிக்க முயன்றருள்வது ஸஹஜ ஸௌஹார்த்தகார்யமென்றதாயிற்று. * அஹம் ஸ்மராமி மத்பக்தம் நயாமி பரமாம் கதிம் * என்ற வராஹ சரமச்லோகத்தில் நோக்காக "நேதும் யதஸே" என்ருராயிற்று.

761. (அதிலேயே 16) * பக்தி: ப்ரபத்திரத வா பகவந்! ததுக்திஸ் தந்நிஷ்டஸம்ச்ரய இதீவ விகல்ப்யமாநம் யத்கிஞ்சிதேகமுபபாதயதா த்வயைவ த்ராதாஸ் தரந்த்யவஸரே பவிநோ பவாப்திம். * கீழ்ச்லோகத்தில் "நேதும் யதஸே" என்ருர்; அந்த யத்நத்திற்கு ஒரு கைம் முதல் வேணுமே; அதுதன்னைச் சொல்லுகிறது இதில். சாஸ்த்ரங்களில் பகவத் ப்ராப்திக்கு ஒரே உபாயம் சொல்லப்பட்டிருக்கவில்லை. பக்தியென்றும், ப்ரபத்தியென்றும், 'பக்தோஸ்மி, சரணுகதோஸ்மி' என்கிற உக்திமாத்ரமென்றும், இவையுடைய ஓர் உத்தமாதிகாரியை யாச்ரயித்திருத்தல் என்றும் சிலவுண்டே, இவற்றுள் ஏதேனுமொன்றைத் தானே கல்பித்துக்கொண்டு தானே ஸம்ஸாரிகளைக் காத்தருள்கின்றமை சொல்லிற்ருயிற்று. (அவஸரே) என்றது தேஹாவஸாநஸமயே என்றபடி.

762. (அதிலேயே 20) * க்வாஸௌ விபு: க்வ வயமித்யுபஸத்திபீதாந் ஜந்தூந் க்ஷணந் த்வதநுவ்ருத்திஷு யோக்யயந்தீ, ஸம்ப்ராப்தஸத்குருதநோ: ஸமயே தயாளோராத்மாவதிர் பவதி ஸம்ஸ்க்ருதிரீக்ஷணம் தே * எம்பெருமான் விபவாவதாரங்கள் செய்து ரக்ஷிக்கும் அளவன்றிக்கே, பீதகவாடைப்பிராணுர் பிரமகுருவாகி வந்து" என்கிற பெரியாழ்வார் ஸ்ரீஸூக்திப்படியே ஆசார்யரூபேணவும் அவதரித்து அநுக்ரஹித்தருளுகிறபடி சொல்லுகிருர். "அம்மாணுழிப் பிரான் அவனெவ்விடத்தான் யாணுர்" [திருவாய்மொழி 5-1-7] என்று அத்தலையில் ஏற்றத்தையும் இத்தலையில் தாழ்வையும் சிந்தித்து அணுகுவதற்கு அஞ்சுவார் பலருண்டே; அன்னவர்களுக்கு அவனுடைய ஸௌசீல்ய ஸௌலப்யாதிகுண விசேஷங்களை யெடுத்துக்காட்டி 'நாம் பகவதநுவ்ருத்திக்கு அர்ஹராகத் தட்டில்லை' என்று உறுதிகொள்ளுவதற்குப் பாங்காக உபதேசங்கள் செய்தருள ஆசார்ய ரூபத்தை ஏற்றுக்கொண்டு, நிக்ரஹாநுக்ரஹ ஸாதாரணமான தன்மையை விட்டிட்டு அநுக்ரஹைக தீக்ஷையுடன் கடாக்ஷித்தருளுமது யாவ

தாத்மபாவி நன்மையைப் பயக்குமதாகத் தலைக்கட்டுகின்றது என்றாராயிற்று.

763. (அதிலேயே 22) * பத்மாபிராமவதநேக்ஷண பாணிபாதம் திவ்யாயுதாபரண மால்யவிலேபநம் த்வாம், யோகேந நாத! சுபமாச்ரயமாத்மவந்த: ஸாலம்பநேந புரிசிந்த்ய ந யாந்தி த்ருப்திம் * பரமைகாந்திகளின் ஸாலம்பநஸமாதி ஸாரஸ்யத்தை யருளிச்செய்கிறார். திருவாய்மொழியில் *எங்ஙனேயோவன்னைமீர்காள்!* என்னும் பதிகத்தில் பத்துப்பாசுரங்களிலும் பின்னடிகள்தோறும் ஸாலம்பநஸமாதியே ஸ்வாநுபவமுகேந அருளிச்செய்யப்பட்டிருப்பது காண்க. ''சங்கினோடும் நேமியோடும் தாமரைக் கண்களோடும் செங்கனிவாயொன்றினோடும் செல்கின்றதென் னெஞ்சமே'' ''மின்னு நூலுங் குண்டலமும் மார்வில் திருமறுவும் மன்னுபூணும் நான்கு தோளும் வந்தெங்கும் நின்றிடுமே'' ''வென்றி வில்லுந் தண்டும் வாளும் சக்கரமும் சங்கமும் நின்றுதோன்றிக் கண்ணுள்நீங்கா நெஞ்சுள்ளும் நீங்காவே'' இத்யாதிகளை யநுஸந்திப்பது.

764. ப்ரக்ருதமான இருபத்திரண்டாம் சுலோகத்தில் ஒன்று சொல்லித் தீரவேண்டியதாகிறது. திருக்குடந்தையிலிருந்த வித்வான்கள் மற்ற ஸ்தோத்ரங்களுக்குப் போலே இந்த ஸ்தோத்ரத்திற்கும் வடமொழி தென்மொழி வியாக்கியானமச்சிட்டிருக்கிறார்கள் நெடுநாளைக்கு முன்னமே. அவற்றை நாம் ஆங்காங்குப் பரீக்ஷித்துப் பார்த்தபோது இவை பண்டிதர்களுக்கு முபகாரகமன்று, பாமரர்களுக்கு முபகாரகமன்று என்று கருதவேண்டியதாயிற்று. இக்கருத்தை நாம் முன்னமே சில பத்திரிகைகளில் வெளியிட்டுமிருந்தோம். பெரிய வித்வான்களெழுதியவற்றுக்கும் குறைகூறுவதாவென்று சிலர் க்ஷேபித்ததுமுண்டு. தடஸ்தர்களுக்கு இங்கொன்று காட்டுகிறேன். 'பத்மாபிராமவதநேக்ஷணபாணிபாதம்' என்பது இந்த ச்லோகத்தின் முதற்பாதம். இங்கு வியாக்கியாநத்தில் சதுர்வேதசதக்ரது ஸ்ரீராகவாசார்யரென்கிற வித்வானெழுதுகிறார் * ப்ராண்யங்கத்வாத் ஏகவத்பாவ:'' என்று; வியாகரண சாஸ்த்ரத்திலே * ப்ராணிதூர்ய ஸேநாங்காநாம் ஏகவத்பாவத்தை விதித்திருப்பது வாஸ்தவம். அது எந்த ஸமாஸத்திலென்னில், பஹுவசந ப்ரஸக்தியுள்ள தான த்வந்த்வஸமாஸத்திலல்லது பஹுவ்ரீஹிஸமாஸத்திலன்று. பஹுவ்ரீஹியானது அந்யபதார்த்த ப்ரதாநமாகையாலே



விசேஷ்யாநுஸாரியான வசநத்தைத்தான் கொண்டு நிற்கும்; விசேஷ்யவாசகபதம் பஹுவசநாந்தமாக இருக்குமானால் ''பத்மாபிராமவதநேக்ஷணபாணிபாதாந்'' என்று விசேஷணமும் பஹுவசநாந்தமாகத்தானாகும். இங்கு (த்வாம்) என்பதிலே அந்வயிக்கவேண்டியதற்காக (...பாணிபாதம்) என்று ஏகவசநாந்தமாக ப்ரயோகிக்கப் பட்டதேயன்றி இது ஏகவத்பாவவிதியை யநுஸரித்து ப்ரயோகிக்கப்பட்டதன்று; இப்படி அஸ்தாநே மருள்கள் பலபல.

765. (அதிலேயே 25) * உத்பாஹுபாவமபஹாய யதைவ கர்வ: ப்ராம்சும் பலம் ஸமபியாசதி யோகிசிந்த்ய!, ஏவம் ஸுதுஷ்கரமுபாயகணம் விஹாய ஸ்தாநே நிவேசயதி தஸ்ய விசக்ஷணஸ் த்வாம், * காளிதாஸமஹாகவி ரகுவம்சத்தில் * ப்ராம்சுலப்யே பலே லோபாத் உத்பாஹுரிவ வாமந: * என்று தமக்கொரு த்ருஷ்டாந்தமிட்டார். உயரமான மரத்தில் பழுத்துத் தொங்குகிற பழத்தைப் பறிக்க நினைப்பவன் உந்நதபுருஷனாயிருந்தால் எளிதாகப் பறித்துண்கிறான்; வாமனனாயிருந்தால் எட்டியெட்டிப்பறிக்கப் பார்ப்பன்; கையைத் தூக்குவன்; பழமோ கையிலெட்டாது; பார்ப்பவர்கள் பரிஹஸிக்க நிற்பன்—என்பது இதன்பொருள். இதையறிந்த மற்றொரு வாமனன் பழத்தை விரும்பித் தான் கைதூக்கிப் பரிஹாஸ்யனாகாமே உந்நத புருஷனான ஒருவனை நோக்கி 'நீர் பறித்துத் தாரும்' என்று பிரார்த்தித்தானாகில் அப்பழத்தை எளிதில் பெற்று உண்கிறான். அதுபோல் சில அசக்தர்கள் தங்களுக்கு அசக்யங்களான கர்மஜ்ஞான பக்தியோகங்களிலே கைவைத்துப் பலன் பெறமாட்டாதே பரிஹாஸ்யராய் நிற்க, சில ஸமர்த்தர்கள் அந்த கர்மஜ்ஞான பக்திகளின் ஸ்தானத்திலே எம்பெருமானையே நிறுத்தி 'நீயே பேறுதந்தருள்வாய்' என்றிரந்து, எளிதாகப் பேறுபெறுகிறார்கள்; இதுதான் சரணாகதியின் மருமம் என்று தெரிவித்தருளினபடி.

766. அதிலேயே 26) * நித்யாலஸார்ஹமபயம் நிரபேக்ஷமந்யை: விச்வாதிகாரம் அகிலாபிமதப்ரஸூதிம், சிக்ஷாவிசேஷஸுலபம் வ்யவஸாயஸித்தா: ஸத்குர்வதே த்வயி முகுந்த! ஷடங்கயோகம் * ப்ரபத்தியின் ஸ்வரூபத்தையும் அதன் பெருமையையும் விளக்குவது இந்த சுலோகம். சுலோகம் தொடங்கும்போதே (நித்யாலஸார்ஹம்) என்றருளிச்

செய்தது "காம்பறத் தலைசிரைத்து உன் கடைத்தலை யிருந்து வாழும் சோம்பரை யுகத்திபோலும் சூழ்புனலரங்கத்தானே" என்கிற திருமாலைப்பாசுரம் ஸ்வாமியின் திருவுள்ளத்தில் ஓடுகின்றதென்பதைக் காட்டித்தரும். வாழுஞ் சோம்பர், கெடுஞ் சோம்பரென்று அலஸர் இருவகைப்படுவர். கர்மயோகாதிகளை நாஸ்திக்யத்தாலே விடுமவர்கள் கெடும் சோம்பர். ஸ்வரூபயாதாத்ம்யஜ்ஞானத்தாலே [நல்லதெளிவோடே] விடுமவர்கள்— அவன்கையையே எதிர்பார்த்திருக்குமவர்கள் வாழுஞ் சோம்பர், அன்னவர்களேயாயிற்று இங்கு நித்யாலஸசப்தவிவக்ஷிதர்கள். இந்த ச்லோகத்திற்கு வ்யவஸாய ஸித்தாঃ என்பது உயிர்நிலையாகும். "வ்யவஸாயமில்லாதவனுக்கு இதில் அந்வயம் ஆமத்தில் போஜனம் போலே" என்கிற பூர்வாசார்யஸூக்தியை யடியொற்றி யருளிச்செய்தபடி. அபயம் என்றது நிரபாயமென்கை. சேதநஸாத்யமாயிருந்தால் நடுவே அபாயங்கள் புகுருகைக்கு அவகாசமுண்டு; இங்கு அதற்கு ப்ரஸக்தியில்லையே. [அந்யை: நிரபேக்ஷம்] ஈச்வரனையபேக்ஷித்திருக்கையொழிய "உன்னலல்லால் யாவராலுமொன்றுங் குறைவேண்டேன்" என்கிறபடியே வேறொன்றையும் அபேக்ஷித்திராதென்கை. [விச்வாதிகாரம்] ந்யாஸதிலகத்தில் * ஸத்யாதிவத் வ்யாபிநீ * என்றருளிச் செய்தார். ஸத்யஞ் சொல்லுவதென்பது எப்படி ஸர்வாதிகாரமோ அப்படியேயாயிற்றிதுவும். [சிக்ஷாவிசேஷஸுலபம்] ஸதாசார்ய ஸேவையில் பழுத்தவர்களுக்கே எளிது என்கை.

767. (அதிலேயே 27) * த்வத்ப்ராதிகூல்யவிமுகா, ஸ்புரதாநுகூல்யா: க்ருத்வா புநঃ க்ருபணதாம் விகதாதிசங்கா:, ஸ்வாமிந்! பவ ஸ்வயமுபாய இதீரயந்த: த்வய்யர்ப்பயந்தி நிஜபாரமபாரசக்தெள * கீழ்ச்லோகத்தில் ஷடங்கயோகமென்றதை விவரிக்கிறது. பகவச்சாஸ்த்ரங்களிலே "ஆநுகூல்யஸ்ய ஸங்கல்ப: ப்ராதிகூல்யஸ்ய வர்ஜநம், ரக்ஷிஷ்யதீதி விச்வாஸோ கோப்த்ருத்வவரணம் ததா, ஆத்மநிக்ஷேப கார்ப்பண்யே ஷட்விதா சரணுகதி:" என்று ஷடங்கப்ரபத்தி சொல்லப்பட்டுள்ளது. அங்கியையும் அங்கங்களிலே ஒன்றுகச் சேர்த்து உபசாரேண ஷடங்கமென்கிறதென்றும், ஆத்மநிக்ஷேபமென்பதுதான் அங்கியென்றும் அஃதொழிந்த மற்றையைந்தும் அங்கமென்றும் நூற்கொள்கை. ஶ்ரீரஹஸ்யத்ரயஸாரத்தில் பரிகரவிபாகாதிகாரத்தில்—"இவ்வித்யைக்கு பரிகர



மாவது ஆநுகூல்யஸங்கல்பமும் ப்ராதிகூல்யவர்ஜநமும் கார்ப்பண்யமும் மஹாவிச்வாஸமும் கோப்த்ருத்வவரணமும், இவ்விடத்திலே * ஆநுகூல்யஸ்ய ஸங்கல்பঃ...ஷட்விதா சரணுகதி; * இத்யாதிகளில் சொல்லுகிற ஷாட்வித்யமும் அஷ்டாங்கயோகமென்னுமாபோலே அங்காங்கி ஸமுச்சயத்தாலே யாகக்கடவதென்னுமிடமும், இவற்றில் இன்னதொன்றுமே அங்கி, இதரங்கள் அங்கங்களென்னுமிடமும் * நிக்ஷேபா பரபர்யாயோ ந்யாஸ: பஞ்சாங்கஸம்யுத:, ஸம்ந்யாஸஸ் த்யாக இத்யுக்த: சரணுகதிரித்யபி * என்கிற ச்லோகத்தாலே ந்யாயநிரபேக்ஷமாக ஸித்தம்." என்று விசதீகரிக்கப்பட்டுமுள்ளது. ஆகவே இங்கு மூன்று பாதங்களினால் ஐவகைப்பட்ட அங்கங்களைச் சொல்லி நாலாம்பாதத்தினாலே அங்கியைச் சொல்லித் தலைக்கட்டுகிறார். "க்ருபணதாம் க்ருத்வா." என்றது—ஆகிஞ்சந்யாநுஸந்தானம் பண்ணியென்றபடி. பஞ்சாங்கங்களில் இதுவுமொன்றிறே. (விகதாதிசங்கா:) என்பதனால் *ரக்ஷிஷ்யதீதி விச்வாஸமுடைமை சொன்னபடி. மூன்றுவது பாதம்—கோப்த்ருத்வவரண ப்ரதிபாதகம். [அபாரசக்தெள] சரணுகதிதான் ஸர்வாதிகாரமாகையாலே ஸ்வரக்ஷா பரத்தை உலகமடங்கலும் தன் பக்கலில் ஸமர்ப்பித்தாலும் ஏற்றுக்கொண்டு காரியம் செய்யப் பாங்கான சக்தியுடையவனென்கை.

768. (அதிலேயே 28) *அர்த்தாந்தரேஷு விமுகாந் அதிகாரஹாநே: ச்ரத்தாதிகாந் த்வதநுபூதி விலம்பபீதாந், தீபப்ரகாச! லபஸே ஸுசிராத் க்ருதீவ ந்யஸ்தாத்மநஸ் தவ பதே நிப்ருதாந் ப்ரபந்நாந். ***கீழ்ச்சொன்ன ப்ரபந்நாதிகாரிகளிடத்திலே எம்பெருமானுடைய பரிமாற்றமிருக்கும்படி சொல்லுகிறது இதில். "ப்ரபந்நா: த்வாம் லபந்தே" என்றருளிச்செய்ய வேண்டியிருக்க அங்ஙனமருளிச்செய்யாது (ப்ரபந்நாந் த்வம் லபஸே) என்றருளிச்செய்தது வடிக்கட்டின ஸம்ப்ரதாயார்த்தம். கீதையில் *வாஸுதேவஸ் ஸர்வமிதி ஸ மஹாத்மா ஸுதுர்லப: * என்று இழவு தோற்றப்பேசினவனுகையாலே அதைத் திருவுள்ளம்பற்றி உன்னிழவுதீர்ந்து பேறுபெற்றுயிறே! என்கிறார். [அதிகாரஹாநே: அர்த்தாந்தரேஷு விமுகாந்] அநந்யார்ஹசேஷத்வம் அநந்யசரணத்வம் அநந்யபோக்யத்வமாகிற அதிகாரபூர்த்திக்குக் கொத்தையாமிறே உபாயாந்தர உபேயாந்தரங்களில் நசையுண்டாமாகில்; ஸ்வாதிகார

பூர்த்தியை நன்குணர்ந்து அதற்கொரு ஹாநி வாராமைக்காக உபாயோபேயங்களில் திடமான நிஷ்கர்ஷமுடையவர்களேயேயாயிற்று எம்பெருமான் உத்தமாதிகாரிகளாகவுகப்பது. * ந தேவலோகாக்ரமணம் நாமரத்வமஹம் வ்ருணே. ஐச்வர்யம் வாபி லோகாநாம் காமயே ந த்வயா விநா * என்றிருக்குமவர்களைச் சொல்லுகிறது. (ச்ரத்தாதிகாந்) மஹாவிச்வாஸத்தையாயிற்று ச்ரத்தையென்கிறது. அஃதில்லையாகில் மற்று எவையிருந்தாலும் பயனில்லையே. பேற்றிலே ஸம்சயமின்றிக்கே மார்பிலே கைவைத்துறங்குமவர்களென்கை. பேறுதப்பாதென்று துணிந்திருக்கையை இதனுற்சொல்லி, பேற்றுக்குத்வரிக்கையை அடுத்த விசேஷணத்தினுற் சொல்லுகிருர் [த்வதநுபூதி விலம்பபீதாந்] என்று. "தாவி வையங்கொண்ட தடந்தாமரைகட்கே கூவிக்கொள்ளுங்கால மின்னங் குறுகாதோ?" "எனைநாள்வந்து கூடுவன் யான்" என்று பதறுமவர்கள். கீழ் "கர்மஸ்வநாதிநிதநேஷு" (14) என்கிற சுலோகத்திலே "ஸ்வப்ராப்தயே தநுப்ருதாம் த்வரஸே முகுந்த!" என்று அவன் பதறுவதாகச் சொல்லிவைத்து, இங்கு 'த்வதநுபூதிவிலம்பபீதாந்' என்று அவர்கள் பதறுவதாகச் சொல்லுவதெங்ஙனே யென்று சங்கிக்க வேண்டா; உண்மையில் பேறு பெறுபவனும் த்வரிப்பவனும் அவனே; இத்தலையில் சைதந்யமென்று ஒன்றிருக்கையாலே இது இவனைப் பேறுபெறத் தூண்டுவதோடு த்வரிக்கவும் செய்யாநின்றதாயிற்று. ஆனுலும் இதுவன்று கார்யகரம்; (ஸுசிராத் க்ருதீவலபஸே) என்கிற பதங்கள் அருமை பெருமை வாய்ந்தவை. ஸுசிராத் என்றது இனிமேல் நெடுங்காலம் கழித்து என்றபடியன்று; கீழ் நெடுங்காலம் தவங்கிடந்து பெருதே இழவோடே கிடந்து இப்போதாகப் பெறுகிருய் என்றபடி. [க்ருதீவ] 'இப்போதே நான் க்ருதக்ருத்யனுனேன்' என்று எம்பெருமான் சொல்லிக்கொள்ளுகிருன்போலும். க்ருதக்ருத்யத்வம் சேதநன்பக்கலிலே யன்றிக்கே தன்பக்கலிலேயானபடி; "க்ருதக்ருத்யஸ் ததா ராமோ விஜ்வரः ப்ரமுமோத ஹ." என்ருனிறே வால்மீகி மஹர்ஷி.

769. (அதிலேயே 51) * த்யாகே குணேச! சரணுகத ஸம்ஜ்ஞிநோ மே ஸ்த்யாநாகஸோபி ஸஹஸைவ பரிக்ரஹே வா, கிம் நாம குத்ர பவதீதி க்ருபாதிபிஸ் தே கூடம் விசாரய குணேதர தாரதம்யம்.*** இது வெகு சாதுரியமாக விண்ணப்பம் செய்கிறபடி. அடியேனைப் பரித்யஜிப்பதற்கும் பரிக்ரஹிப்பதற்கும் உரிய



காரணங்களுண்டு; இவன் குற்றம் நிரம்பியவன் என்று இதைப் பார்த்தால் பரித்யஜிக்கவே ப்ராப்தம். இவன் ப்ரபந்நகுலத்திற் பிறந்தவன் என்று இதைப்பார்த்தால் பரிக்ரஹிக்கவே ப்ராப்தம். ஆனுலும் இதில் விபர்யாஸமுமாகலாம். எங்ஙனே யென்னில், இவன் நாமதாரி ப்ரபந்நனேயாகையாலே இவன் பரிக்ராஹ்யனல்லன், பரித்யாஜ்யனேயாவன் என்று திருவுள்ளம்பற்றலாம்; இவன் பரிபூர்ணுபராதனுகையாலே * தோஷோ யத்யபி தஸ்ய ஸ்யாத் ஸதாமேததகர்ஹிதம் * என்று சொல்லியிருக்கிற நமக்கு இப்படிப்பட்ட துஷ்டாதிகாரியைப் பரிக்ரஹிப்பதே நன்று என்று திருவுள்ளம்பற்றலாம்; ஆக அடியேன்பால் பரித்யாஜ்யதைக்கும் பரிக்ராஹ்யதைக்கும் விஷயமுண்டு; எது செய்வதிலும் தேவரீர் ஸ்வதந்திரர். ஆனுலும் அடியேன் விண்ணப்பம் செய்வதொன்றே; இவனைப் பரிக்ரஹிப்பது நன்ரு? பரித்யஜிப்பது நன்ரு? என்பதை தேவரீர் தனியாக விசாரித்து முடிவுசெய்வதிற் காட்டிலும் தயாவாத்ஸல்யாதிகல்யாண குணங்களோடுங் கூடி விசாரித்தல் நன்று என்கிருர். அங்ஙனே விசாரிக்கு மளவில் அந்தத் திருக்குணங்கள்தாம் ஜீவிக்கவேண்டி பரித்யாக பக்ஷத்தைக்கண்டித்துப் பரிக்ரஹபக்ஷத்தையே நிலைநாட்டுமென்று திருவுள்ளம். தயாவாத்ஸல்யாதி குணங்களைப் பழுதுபடுத்தாமல் அந்த திருக்குணங்கள் ஸார்த்தகமாம்படி அடியேனைப் பரிக்ரஹித்தருள வேணு மென்ருராயிற்று. இது இந்த சுலோகத்தின் பரமதாத்பர்யம்.

770. (அதிலேயே 52) * ஸ்வாமீ தயாஜலநிதிர் மதுரः க்ஷமாவாந் சீலாதிகः ச்ரிதவசः சுசிரத்யுதாரः, ஏதாநி ஹாதுமநகோ ந கிலார்ஹஸி த்வம் விக்க்யாதிமந்தி பிருதாநி மயா ஸஹைவ * கீழ்ச்லோகத்தில் [க்ருபாதிபிः ஸஹ கூடம் விசாரய] என்ருரே; அதில் ஆதி பதக்ராஹ்யங்களான குணவிசேஷங்களைத் தாமே விவரித்து, இந்த குணங்களை விடுவதானுல் அடியேனை விடலாம்; ஸ்வரூபாநுபந்திகளான இந்த குணங்களும் விடமுடியாதவை, அடியேனும் விடமுடியாதவன் என்று நிகமிக்கிருர். [ஸ்வாமீ] உடையவன் உடைமையை விடலாகுமோ? [தயாஜலநிதிः] கருணைக்கடலாயிருப்பவன் நிர்க்ருணர் செய்வது செய்யலாமோ? என்றபடி. [மதுரः] * தேனே பாலே கன்னலே யமுதே யென்னும்படி யிருப்பவன் அந்த மாதுர்யத்தைக் காட்டி லெறித்த நிலாவாக ஆக்கலாமோ? [க்ஷமாவாந்] க்ஷமைக்கு இரை தேடிக்கொடுக்க வேண்டியதன்ருே உன்பணி. (சீலாதிகः)

என்னை விட்டால் ஸௌசீல்யம் ஜீவிக்குமோ? (ச்ரிதவச:) ஆச்
ரிதபரதந்த்ரனென்றும் பக்தபராதீனனென்றும் பெயர் சுமப்பது
வெறுமனேயோ? (சுகி:) கைம்மாறு கருதாமல் உபகரித்தலாகிற
தூய்மைக்குக் கொத்தை விளையலாமோ? (அத்யுதார:)*எனக்கே
தன்னைத் தந்த கற்பகம் * என்று தன்னுடைமையயுங் கொடுத்
துத் தன்னையுங் கொடுக்கும் வள்ளல்தனத்திற்குப் பொருந்துமோ?
என்று இங்ஙனே பல கேள்விகள் கேட்கிறபடி. ... (*)

771. (அதிலேயே 54) * ரக்ஷ்யஸ் த்வயா தவபரோ
ஸ்ம்யஹமித்யபூர்வாந் வர்ணுநிமாந் அஹ்ருதயாநபி
வாசயித்வா, மத்தோஷநிர்ஜிதகுணே மஹிஷீஸமக்ஷம்
மாபூஸ் த்வதந்ய இவ மோகபரிச்ரமஸ் த்வம்.* இதுவும்
ஒரு சமத்காரமான வார்த்தையாக அவதரிக்கின்றது. 'தேவரீர்
என்னைக் காத்தருளவேணும்' என்று என் வாக்கினின்றும் வெளி
வருகின்ற வார்த்தையானது மனப்பூர்வமாக வருவதன்று ; அது
தானும் என்னைக்கொண்டு தேவரீர் சொல்லுவித்ததேயொழிய
நானுகச் சொன்னதுமன்று. இந்த வார்த்தையை சொல்லுவிப்ப
தற்கு தேவரீர்பட்ட பரிச்ரமத்தின் அளவு தேவரீருக்கே தெரியும்.
இந்த பரிச்ரமத்திற்குப் பலன் என்னை ரக்ஷித்தருள்வதேயன்றோ.
அதற்காகவன்றோ பரிச்ரமப்பட்டு அந்த வார்த்தையைச் சொல்லு
வித்தது. பட்ட பரிச்ரமத்தைப் பழுதாக்கிக் கொள்ளலாமோ ?
ஏற்கெனவே பிராட்டி "கிம் த்வாமந்யத வைதேஹ ......ஸ்த்ரியம்
புருஷ விக்ரஹம் " என்று பேசியிருக்கிறுள். அவள் முன்னிலை
யில் மீண்டும் ஏச்சுக்கிடமாக நடந்துகொள்வது நலமன்று ;
ஆகவே என்னை ரக்ஷித்தருளி தேவரீருடைய பரிச்ரமத்தையும்
ஸபலமாக்கிக் கொள்ளவேணுமென்றுராயிற்று. [த்வதந்ய இவ]
அஜ்ஞரும் அசக்தருமான இதரர்களின் செயல் பழுதுபடலாம் ;
ஸர்வஜ்ஞரும் ஸர்வசக்தருமான தேவரீருடைய செயல் பழுது
படலாகாதென்கை.

772. (அதிலேயே 58) *இத்தம் ஸ்துதிப்ரப்ருதயோ
யதி ஸம்மதாஸ் ஸ்யு: யத்வா அபராதபதவீஷ்வபி விம்
விசந்தி, ஸ்தோகாநுகூல்யகணிகாவசவர்த்திநஸ் தே
ப்ரீதிக்ஷமாப்ரஸரயோ ரஹமஸ்மி லக்ஷ்யம் * எம்பெரு
மான் விஷயத்திலே நாம் செய்யும் வழிபாடுகள் ஸ்வரூபாநு
ரூபங்களாகையாலே அவனும் இவற்றை ஸ்வரூபாநுரூபமே
யென்று திருவுள்ளம்பற்றி உகந்தருள்வனுகில் அவனுடைய ப்ரீ



திக்கு நாம் இலக்காகும்படியாயிருக்கும். ஸர்வப்ரகாரத்தாலும்
நமக்குள்ள நிஹீநதையை நினைக்குங்கால் "த்வத்கிங்கரத்வவி
பவே ஸ்ப்ருஹயாபராத்யந் " என்று கீழே ஆசிரியர்தாமே அரு
ளிச்செய்தபடி இவை அபராதகோடியிலே பரிகணநீயமாகும்.
எம்பெருமான் திருவுள்ளத்தாலே இவை உபசாரகோடியிலா
கிறதோ. அபசாரகோடியிலாகிறதோ என்பது அறுதியிடவொண்
ணுததாகையாலே உபசாரமாகத் திருவுள்ளம்பற்றிஞல் ப்ரீதிக்கு
இலக்காகிறேம், அபசாரமாகத் திருவுள்ளம்பற்றிஞல் க்ஷமித்
தருளவேணுமென்று வேண்டி க்ஷமாகுணத்திற்கு இலக்காகி
றேம். இரண்டுபடியும் உத்தேச்யமேயென்று ஸமாஹிதராய்த்
தலைக்கட்டுகிறுர். (சரணுகதிதீபிகாநுபவம் முற்றிற்று)

## — ந்யாஸதசகத்தில் சிறிது அநுபவம் —

773. ஸகல சாஸ்த்ரார்த்த தத்துவங்களையும் கரதலாமலக
மாகக் கண்டருளின ஸ்ரீமந்நிகமாந்த மஹாதேசிகன் ப்ரபத்தி
சாஸ்த்ரார்த்தங்களைப் பல திவ்யக்ரந்தங்களாலே வெளியிட்டரு
ளத் திருவுள்ளம்பற்றி முந்துறமுன்னம் ந்யாஸதசகமேயருளிச்
செய்தார். இதில் முதல் ச்லோகமொன்றுமட்டும் பரோபதேச
ப்ரக்ரியையில் அவதரிக்கிறது. மற்றச்லோகங்களெல்லாம்
ப்ரபத்தியை தாம் ப்ரயோகிக்கிற முறையிலே [அதாவது ஸ்வா
நுஷ்டாந ப்ரக்ரியையில்] அருளிச் செய்யப்படுகின்றன. இந்த
ஸ்தோத்ரம் தேவப்பெருமாள் விஷயமானதென்பது வ்யக்தம்.

774. (ந்யாஸதசகம் 1) *அஹம் மத்ரக்ஷணபரோ மத்ர
க்ஷணபலம் ததா, ந மம ஸ்ரீபதேரேவேதி ஆத்மாநம் நிக்ஷிபேத்
புத:* ஆத்மஸமர்ப்பணம் பண்ணும்போது "நாமார்? ஸர்வஸ்வா
மிக்கு ஸமர்ப்பிக்க நமக்கென்று ஒரு பொருளுண்டோ ? ஆழ்வா
ரும் *எனதாவி தந்தொழிந்தேனினி மீள்வதென்பதுண்டே * என்
றருளிச்செய்து உடனே *எனதாவி யார் யானுர் தந்தநீ கொண்
டாக்கினையே * என்றருளிச் செய்தாரன்றோ ? * உதவிக் கைம்
மாறு என்னுயிரென்னவுற்றெண்ணில், அதுவுமற்றங்கவன் தன்
னது—எதுவுமொன்று மில்லை செய்வது இங்குமங்கே * என்று
மருளிச்செய்தாரே; அப்படியருளிச் செய்தவர்தாமே *தோள்களை
யாரத் தழுவி யென்னுயிரை அறவிலை செய்தனன் சோதீ ! *
என்றுமருளிச்செய்து வைத்தாராதலால் நிர்வேதத்துடன் ஆத்ம
ஸமர்ப்பணம் பண்ணவும் ப்ராப்தம் ' என்றுகொண்டு நானும்

எனக்குரியேனல்லேன்; என்னை ரக்ஷித்துக்கொள்ளும் பொறுப்பும் எனக்கில்லை; என்னுடைய ரக்ஷணத்தினாலாகும் பயனும் ஸ்வாமியான அவனுடையதேயன்றி என்னுடையதன்று என்று உள்ளபடியநுஸந்தித்துக்கொண்டு விவேகியானவன் ஆத்மநிக்ஷேபம் பண்ணக்கடவனென்றதாயிற்று.

775. (அதிலேயே 2) [* ந்யஸ்யாம்யகிஞ்சந: ஸ்ரீமந்! அநுகூலோந்யவர்ஜித:, விச்வாஸப்ரார்த்தநா பூர்வம் ஆத்மரக்ஷாபரம் த்வயி *] ஆத்மஸமர்ப்பணம் பண்ணும்போது விச்வாஸமும் ப்ரார்த்தனையும் அதில் சொருகியிருக்கவேணும். விச்வாஸமாவது நம்பிக்கை; ஸ்வாமியாகையாலே ஸ்வவஸ்துரக்ஷணத்தை ஸ்வயமேவ செய்து தலைக்கட்டியே தீருவன் என்ற நம்பிக்கை. இதுதான் மஹாவிச்வாஸமெனப்படும். ப்ரார்த்தநையாவது *த்வமேவோபாயபூதோ மே பவேதி ப்ரார்த்தநாமதி:, சரணாகதிரித்யுக்தா * என்கிறபடியே 'ஸ்வாமிந்! தேவரீரே உபாயபூதராகவேணும்' என்கிற ப்ரார்த்தனை. மானஸிகமான இந்த ப்ரார்த்தநைதான் சரணாகதியென்று பகவச்சாஸ்த்ரங்களில் சொல்லப்பட்டிருக்கையாலே "ப்ரார்த்தநாபூர்வம்" என்று ப்ரார்த்தநையை வேறுபடுத்திச் சொன்னதெங்ஙனேயென்று நினைக்கலாகாது. ஆத்மநிக்ஷேபத்தை வாசிகமாகவோ காயிகமாகவோ செய்யுமிடத்து விச்வாஸப்ரார்த்தநைகள் முற்பட்டிருக்கும்படியையருளிச்செய்ததத்தனை. * நோற்றநோன்பிலேன் நுண்ணறிவிலேன் * என்றும், * ந தர்மநிஷ்டோஸ்மி நசாத்மவேதீ * என்றும் சொல்லுகிறபடியே ஆகிஞ்சந்யத்தையுடையனாயும் ஆநுகூல்யஸங்கல்பயுக்தனாயும் ப்ராதிகூல்யவர்ஜிதனாயும் ஆத்மநிக்ஷேபம் செய்யாநின்றேனென்றாராயிற்று.

776. (அதிலேயே 3) [* ஸ்வாமிந் ஸ்வசேஷம் ஸ்வவசம் ஸ்வபரத்வேந நிர்ப்பரம், ஸ்வதத்த ஸ்வதியா ஸ்வார்த்தம் ஸ்வஸ்மிந் ந்யஸ்யஸி மாம் ஸ்வயம்.*] இத்தால் முதல் ச்லோகம் நன்கு வியாக்கியானிக்கப் பட்டதாயிற்று. இரண்டாம் ச்லோகத்தில் "அகிஞ்சந: அஹம் ந்யஸ்யாமி" என்றருளிச் செய்ததைக்கண்டு சிலர் கலங்காமைக்காக இந்த சுலோகத்தினால் நல்ல தெளிவு பிறப்பிக்கப்பட்டதாயிற்று, திருவாய்மொழியில் * என்னுணர்வினுள்ளே யிருத்தினேன் * என்றரீதியில் முந்தின ச்லோகமவதரித்தது; *அதுவுமவன தின்னருளே* என்ற ரீதியில் இந்த ச்லோகமவதரித்தது. இதில் 'ஸ்வாமிந்' என்கிற ஸ்தானத்திலே 'ஸ்வாமீ' என்றும் 'ந்யஸ்யஸி' என்கிற ஸ்தானத்திலே 'ந்யஸ்யதி' என்றும் பாடபேதமுண்டு. அதுவே நன்று.

777. (அதிலேயே 4) *ஸ்ரீமந்! அபீஷ்டவரத! த்வாமஸ்மி சரணம் கத:, ஏதத் தேஹாவஸாநே மாம் த்வத்பாதம் ப்ராபய ஸ்வயம்.* * மரணமானால் வைகுந்தம் கொடுக்கும் பிரான் * என்ற ஆழ்வார் ஸ்ரீஸூக்தியின்படி ப்ரபந்நாதிகாரிக்கு வர்த்தமாந தேஹாவஸாநத்தில் மோக்ஷமென்கிற சாஸ்த்ரார்த்தம் இந்த ச்லோகத்தில் ஸூசிதமாயிற்று. திருக்கச்சிநம்பிகளாறு வார்த்தைகளில் இதுவுமொன்றென்பது ப்ரஸித்தம். கர்மாவஸானத்தில் மோக்ஷமா? தேஹாவஸானத்தில் மோக்ஷமா? என்கிற விசாரத்தில், கர்மாவஸானத்தில் மோக்ஷமென்னும் பக்ஷத்தில் திடுக்கிட்டிருக்கவே வேண்டிவரும். ப்ரபந்நர்களுக்கு தேஹாவஸானத்தில் கர்மாவஸானத்தைச் செய்வித்து மோக்ஷமளிப்பதாக நூற்கொள்கை.

778. (அதிலேயே 5) [குரு மாம் நித்ய கிங்கரம்] "*பாஷாணகல்பதைவ முக்தி:*" என்றும் "ஆத்யந்திக து:க்கத்வம்ஸ ஏவ முக்தி:" என்றும் சொல்லுவார் திரளிலே சேராமல் *ஒழிவில் காலமெல்லாமுடனாய் மன்னி வழுவிலாவடிமை செய்யுமதேமுக்தியென்கிற ஸதாசார்யஸம்ப்ரதாயத்திலே நிற்பார பரமபுருஷார்த்தமான அந்த கைங்கர்யத்தைப் பிரார்த்திக்க வேண்டுவது சைதந்யகார்யமாய் ஸ்வரூபாநுபந்தியாய் அவர்ஜநீயமாகையாலே அந்த கைங்கர்ய ப்ரார்த்தநையை இந்த ச்லோகத்தினால் செய்துபோருகிறார். [*த்வச்சேஷத்வே ஸ்திரதியம்*] * களைவாய் துன்பம் களையாதொழிவாய் களைகண் மற்றிலேன் * என்று திண்ணிதானதோர் அத்யவஸாயமுடைமையைச் சொன்னபடி. [*த்வத்ப்ராப்த்யேகப்ரயோஜநம்*] கெடுமரக்கலம்கரை சேர்ந்தாப்போலே பிறவிக்கடலுள்நின்று துளங்குமவனுக்கு பரமப்ராப்யனை ப்ராபிக்கை யொழிய வேறு ப்ரயோஜனமில்லாமையாலே இதை நன்கு உணர்ந்தவனடியேன் என்றாராயிற்று,

779. (அதிலேயே 7) [*மாம் மதீயஞ்ச நிகிலம் சேதநாசேதநாத்மகம், ஸ்வகைங்கர்யோபகரணம் வரத! ஸ்வீகுரு ஸ்வயம்] * என்னையு மென்னுடைமையையும் உன் சக்கரப்பொறியொற்றிக்கொண்டு * என்கிற பெரியாழ்வார் பாசுரத்தையுட்கொண்டு அருளிச்செய்தது இந்தச்லோகம். நாம் செய்கிற கைங்கரியத்திற்கு ப்ரதிஸம்பந்தி எம்பெருமானொருவனே யன்றிக்கே

தத்ஸம்பந்தி ஸம்பந்திகளுமாகிருப்போலே, நம்மோடு ஸாக்ஷாத் பரம்பரயா ச ஸம்பந்தம் பெற்ற சேதநாசேதனப் பொருள்களெல்லாம் பரம சேஷியானவவனுடைய கைங்கர்யத்தில் உபயுக்தமாக வேணுமென்று விரும்புகை ப்ராப்தமாகையாலே அந்த விருப்பம் வெளியிட்டதாயிற்று இதில். நம்முடைய சரீரத்திலுள்ள ஸகலாவயவங்களும் உள்ளுறையுமாத்மாவுக்குக் கைங்கர்யோபகரணமாகிறபடியைக் காணாநின்றோமிறே; இங்ஙனமே அந்த ஆத்மாவும் ஆத்மீயங்களுமெல்லாம் பரமசேதநனுக்குக் கைங்கர்யம் பண்ணக் கடமைப்பட்டவை யென்பதுணர்க.

780. (அதிலேயே 8) *த்வதேக ரக்ஷ்யஸ்ய மம த்வமேவ கருணாகர, ந ப்ரவர்த்தய பாபாநி ப்ரவ்ருத்தாநி நிவர்த்தய * பாபங்கள் புகாதபடிக்கும், புகுந்தபாபங்கள் பலன்கொடுக்க சக்தமாகாதபடிக்கும் தேவரீரே செய்தருள வேண்டுமென்று ப்ரார்த்தித்தாராயிற்று. ''*ப்ரவ்ருத்தாநி பாபாநி நீவர்த்தய*'' என்று வேண்டினது உசிதம்; ''*பாபாநி ந ப்ரவர்த்தய*'' என்று வேண்டலாமோ? * பாவமே செய்து பாவியானேன் * என்றும் * நானே நானாவித நரகம் புகும் பாவஞ் செய்தேன் * என்றுமன்றோ ஞானிகள் அநுஸந்திப்பது. பாவங்களைச் செய்து போருவது நாமேயாயிருக்க 'நீ பாவங்களைச் செய்விக்காதே' என்று கோருவதற்கு ப்ரஸக்தியுண்டோ? என்று சங்கிக்கநேரும்; இதற்குப் பல படிகளிலே பரிஹாரமுண்டு; * ஏஷ ஏவ அஸாது கர்ம காரயதி யம் அதோ நிநீஷதி * என்னு முபநிஷத் ப்ரமாணத்தைக்கொண்டு இங்ஙனே சொல்லக் குறையில்லை. ப்ரஹ்ம ஸூத்ரம் * கர்த்தா சாஸ்த்ரார்த்த வத்த்வாத் * என்று சொல்லி வைத்திருந்தும் அடுத்தபடியாக *பராத் து தத் ச்ருதே:* என்றும் சொல்லிவைத்திருக்கையாலே அநுமந்த்ருத்வத்தை எம்பெருமான் பக்கலிலே இசைந்து தீர வேண்டிற்றிறே. 'நான் பாப ப்ரவ்ருத்தி பண்ணும்போது பிரானே! நீ அநுமந்தாவாக இராதொழியவேணும்' என்பது இங்கு முக்கியமாக விவக்ஷிதம்.

781. (அதிலேயே 9) *அக்ருத்யாநாஞ்ச கரணம் க்ருத்யாநாம் வர்ஜநஞ்ச மே, க்ஷமஸ்வ நிகிலம் தேவ! ப்ரணதார்த்திஹர! ப்ரபோ. * இந்த ச்லோகம் கீழ்ச்லோகத்தை ஒருபுடை விவரிக்கின்றதாயிராநின்றது. நம்முடைய பாபங்களானவை அக்ருத்யகரண ரூபமாயும் க்ருத்யாகரண ரூபமாயும் இருவகைப் பட்டிருக்கும். செய்யத் தகாதவையாக சாஸ்திரங்களிலே நிஷேதிக்கப்பட்டவற்றைச் செய்கை அக்ருத்யகரணமாகும். பரஹிம்ஸை பரஸ்தோத்ரம் பரதார ப்ரிக்ரஹம் பரத்ர வ்யாபஹாரம் அஸத்யகதநம், அபக்ஷ்யபக்ஷணம் தொடக்கமானவை அவை. இனி க்ருத்யாகரணமாவது சாஸ்த்ரங்களிலே கர்த்தவ்யங்களாக விதிக்கப்பட்டுள்ள ஸத்கர்மங்களைச் செய்யாமை. இவை, சாஸ்த்ர விச்வாஸியான ப்ரபந்நனுக்கு புத்தி பூர்வகமாக நேர ப்ரஸக்தியில்லை; இருள் தருமா ஞாலத்திலிருப்பாலே ப்ராமாதிகமாக நேர்ந்ததாகில் * என்னடியாரது செய்யார் செய்தாரேல் நன்று செய்தாரென்பர் போலும் * என்றும் * குன்றனைய குற்றஞ் செய்யினும் குணங்கொள்ளும் * என்று மிப்புடைகளிலேயுள்ள பாசுரங்களை நினைத்து அவலிப்தனாயிருக்கத் தகாது; *இருகரையுமழிக்கும் க்ருபா ப்ரவாஹம் எந்த ஸமயத்திலே எந்த அதிகாரி பக்கலிலே பெருகுமென்பது * ப்ரேக்ஷே கஞ்சித் கதாசந * என்ற அவனொருவனுடைய திருவுள்ளத்திற்கன்றி மற்றொருவற்கும் தெரிய விரகில்லாமையாலே ''நம்முடைய அக்ருத்ய கரண க்ருத்யாகரணங்கள் அவனுக்கு உகப்பாம்'' என்று நினைத்துச் செருக்குற்றிருக்க அவகாசலேசமுமில்லை; க்ஷமாநிதி பக்கலிலே க்ஷமை கொள்ளவேவேணும். எம்பெருமானார் தாமும் சரணாகதி கத்யத்திலே ''*மநோவாக்காயை:*'' என்று தொடங்கி மூன்று சூர்ணைகளாலே ப்ரார்த்தித்த கட்டளையிலே இங்கும் ப்ரார்த்திக்கிறாராயிற்று. ... ... ... *



## — பகவத் த்யாந ஸோபாநத்தில் ப்ரவேசம் —

782. தேசிகன் திருவரங்கம் பெரிய கோயிலிலே நித்யவாஸம் செய்தருளவிரும்பி அங்கேற எழுந்தருளினபோது அருளிச்செய்த ஸ்தோத்ரங்களுள் தலையானது பகவத்த்யாநஸோபானம். ஆழ்வாரருளிச் செயல்களில், திருப்பாணாழ்வாரருளிச் செய்த அமலனாதிபிரானை யொத்ததாம் இது. அழகிய மணவாளனுடைய பாதாதி கேசாந்தமான வடிவழகை யநுபவிப்பதில் இவ்விரண்டு திவ்யக்ரந்தங்களுக்கும் ஸாம்யமுள்ளது. ''*ஸ்ரீரங்கராஜத்யான ஸோபாநம்*'' என்று திருநாமம் சாத்தாமல் ''பகவத் த்யாநஸோபாநம்'' என்று திருநாமம் சாத்தினது பகவச்சப்தவாச்யத்வம் ஸ்ரீரங்கநாதனிடத்திலே யோகரூடமென்னும் திருவுள்ளத்தினாலென்று பெரியோர் கூறுவர். ஸோபாநமென்று படிக்குப் பெயர்; பக்தர்களின் சித்தவ்ருத்தியானது ஸ்ரீரங்கநாத

னுடைய திருவடிகளினின்று திருமுடியளவும் ஏறுவதற்கு இந்த ஸ்தோத்ரம் படிக்கட்டுபோன்றதென்று சமத்காரசாலியான உக்தி. இதைக்கொண்டு எம்பெருமானுடைய ஸகல அவயவங்களையும் அடைவே அநுபவிப்பது எளிது என்றபடி. இதில் முக்கியமான அநுபவங்களைப் பிறகு செய்வோம். ... *

## கோபால விம்சதியில் சில அநுபவங்கள் செய்வோம்

783. இருபது சுலோகங்கள் கொண்ட கோபாலவிம்சதியானது கண்ணபிரான் திருவாய்ப்பாடியில் வளர்ந்தருளின காலத்துச்செய்த சிறுச்சேவகங்களை மட்டும் அற்புதமாக அநுபவிப்பதாம்! யாதவாப்யுதய காவ்யத்தில் மிக விரிவான அநுபவமிருந்தாலும் இந்த ஸம்க்ஷிப்தமான அநுபவம் ரஸிகஹ்ருதயரமணீயம். ஸ்ரீராமாவதாரத்திற்கு அடுத்தபடி நேர்ந்தது ஸ்ரீக்ருஷ்ணாவதாரம். அந்தத் திருவவதாரத்தில் சக்கரவர்த்தி திருமகனாய்த்தோன்றினவன் இவ்வவதாரத்தில் இடைப்பிள்ளையாய்ப் பிறந்தானே! என்று சிறுக நினைக்கவேண்டா; சக்கரவர்த்தித்வத்திற்கு இங்கும் குறையில்லையென்று காட்டுதற்காக இதில் உபக்ரமத்திலேயே * *ஜயதி வல்லவ சக்ரவர்த்தீ* * என்கிறார். ‘வல்லானுயர் தலைவன்’ என்று திருவாய்மொழியில் ஆழ்வாரிட்டருளின திருநாமத்தை யடியொற்றினபடி. வல்லவ:—கோபால:.

784. (கோபாலவிம்சதி 1) * வந்தே, ப்ருந்தாவனசரம் வல்லவீஜநவல்லபம், ஜயந்தீஸம்பவம், தாம வைஜயந்தீவிபூஷணம்.* இது யாதவாப்யுதயத்திலும் முதல்சுலோகமாகக் காணப்படுகிறது. இந்த சுலோகத்தின் இன்சுவையை நுகர்வோம். கண்ணன் வஸுதேவதேவகீ ஸுதனாய் வடமதுரையிற் பிறந்தமையை முந்துறமுன்னம் கூறவேண்டியிருக்க, அதை ஆறாவது சுலோகத்தில் * *மதுராபாக்யம்—வஸுதேவவதூஸ்தநந்தயம்** என்று சுருங்கப் பேசுவாராய், தொடங்கும்போதே *ப்ருந்தாவநசரம்-வல்லவீஜநவல்லபம் * என்றருளிச்செய்தது கண்ணபிரானுடைய அந்தரங்கத்தையடியொற்றியதாம். விருந்தாவனத்தில் விளையாட வேணுமென்றும் இடைப்பெண்களோடே கலந்துபரிமாறவேணுமென்றும் இதுவே குதூஹலமாக க்ருஷ்ணாவதாரமாதலால் அவன் திருவுள்ளம் உகக்குமாறு உரைத்தபடி. ப்ருந்தா என்று துலஸிக்குப் பெயரென்றும் ப்ருந்தாவனமென்றது திருத்துழாய்க்காடென்றபடி யென்றும் சிலர் கூறுவர்; அது



தவறு. நெரிஞ்சிக்காடு என்றபடி. ஸ்ரீவிஷ்ணுபுராணத்தில் * ப்ருந்தாவனம் பகவதா க்ருஷ்ணேந அக்லிஷ்ட கர்மணா, சுபேந மநஸா த்யாதம் கவாம் வ்ருத்திமபீப்ஸதா * என்றுள்ள சுலோகத்தை வியாக்கியானித்தருளும் பூருவர்கள் * *உத்பந்நநவசஷ்பாட்ய* * மென்றதற்குச் சேரவும் நெருஞ்சிக்காடென்றே வியாக்கியானம் பண்ணினார்கள்.

785. [*ஜயந்தீஸம்பவம்*] ரோஹிணீ நக்ஷத்ரத்தோடு கூடின ச்ராவணமாஸ க்ருஷ்ணாஷ்டமிக்கு ஜயந்தி யென்று ஸம்ஜ்ஞையுள்ளது; இந்த ஸம்ஜ்ஞை ஏற்கெனவேயுள்ளதா. கண்ணபிரான் திருவவதரித்தபிறகு ஏற்பட்டதா என்பதை விமர்சிக்க நம்மிடம் ஸாமக்ரியில்லை. [*வைஜயந்தீ*] எம்பெருமானுக்கு அஸாதாரண மாலையான வனமாலைக்குப்பெயர். இதனால் * ஜாதோஸி தேவதேவேச! கங்கசக்ரகதாதர! * என்கிறபடியே திவ்யாயுதங்களோடுங்கூட அவதரித்தமை தெரிவிக்கப்பட்டதாம்.

786. (அதிலேயே ச்லோ. 3) * ஆம்நாயகந்திருதிதஸ்புரிதாதரோஷ்டம்* பெருமாள் திருமொழியில் ஸ்ரீகுலசேகராழ்வார் *அழுகையுமஞ்சி நோக்கு மந்நோக்கும் அணிகொள் செஞ்சிறுவாய் நெளிப்பதுவும் * என்றதை நெஞ்சார அநுபவித்துப் பேசுகிறபடி. அழுகையிலே ஆம்நாயகந்தம்—வேதபரிமள மிருப்பதாக ஸாதிப்பது வேதாந்த குருவரரின் உல்லேகசமத்காரம்; கண்ணன் உரலோடு கட்டுண்டு அழுதேங்குகிறபோது * உபநிஷதர்த்த முலூகலே நிபத்தம் * என்றார்களன்றோ.

787. (அதிலேயே ச்லோ. 4) * ஹர்த்தும் கும்பே விநிஹிதகர:* திருவாய்மொழியில் (5—10—3) * நெய்யுண்வார்த்தையுள் அன்னை கோல்கொள்ள நீயுன்தாமரைக் கண்கள் நீர்மல்க, பையவேநிலையும் வந்து * என்றபாசுரத்தைச் சிந்தனை செய்துகொண்டே இந்தச்லோகமருளிச் செய்தபடி.

788. (அதிலேயே ச்லோ. 8) *நிகடேஷு நிசாமயாமி நித்யம் நிகமாந்தை ரதுநாபி ம்ருக்யமாணம் * திருமங்கையாழ்வார் பெரிய திருமொழியில் *நான்மறைகள் தேடியோடுஞ் செல்வன் * என்றும் * நான்மறைகள் தேடியென்றுங் காணமாட்டா* என்றுமருளிச்செய்தபடியே வேதங்களுக்கெட்டாத பெருமானைத் தாம் *நிகடேஷு நிசாமயாமி!* என்றது * பத்துடையடியவர்க்கெளியவன் * என்றதை மூதலித்தபடி.

789. (அதிலேயே ச்லோ. 20) *வாஸோ ஹ்ருத்வா திநகரஸுதா......காமீ கச்சித் கரகமலயோஃ அஞ்ஜலிம் யாச மாநஃ* கோபீவஸ்த்ராபஹரண கதையைப் பெரியாழ்வாரும் திருமங்கையாழ்வாரும் அநுபவித்திருந்தாலும் ஆண்டாள் அநுபவித்த விதம் விலக்ஷணம். நாச்சியார் திருமொழியில் *தோழியும் நானும் தொழுதோம்* என்றது மற்றையாழ்வார்களின் திருவாக்கில் வெளிவந்திலது. ஆடையிழந்த ஆய்ச்சிகள் "தோழியும் நானும் தொழுதோம்" என்று சொன்னதற்கு ஹேது தெரியவேணுமே; அதைத் தெரிவிக்கின்றது இந்த சுலோகம். ... *

## பெருமாள்திருமொழியில் *ஊனேறுசெல்வப்பதிகத்தின் அநுபவம்

790. குலசேகராழ்வாரருளிச்செய்ததான பெருமாள்திருமொழியில் பத்துப் பதிகங்களும் இன்சுவையே வடிவெடுத்தவை. இப்போது அதில் நான்காவது பதிகமொன்றை யநுபவிப்போம். (ஊனேறுசெல்வம்) *கொல்லிகாவலன் கூடல்நாயகன் கோழிக்கோன் குலசேகரன்* என்றும் *ராஜாநம் குலசேகரம்* என்றும் சக்ரவர்த்தியாகச் சிறந்த பிறவிபெற்ற விவ்வாழ்வார் *வானாளுஞ் செல்வமும் மண்ணரசும் யான்வேண்டேன்* என்று உபயவிபூதிச் செல்வத்தையும் வெறுத்து *செம்பவளவாயான் திருவேங்கடமென்னும் எம்பெருமான் பொன்மலைமேல் ஏதேனுமாவேனே* என்று திருவேங்கடமலையோடு ஸம்பந்தமுடைய திர்யக் ஸ்தாவரஜன்மங்களில் ஏதேனுமொன்றாகப் பெறுவேனாக வேணுமென்று இத்திருமொழி முழுவதனாலும் அருளிச்செய்திருப்பது ஜன்மோத்கர்ஷாபகர்ஷ விஷயத்தில் சிறந்த சாஸ்த்ரார்த்தத்தைத் தெளிவிப்பதாகும். இத்திருமொழியினுள்ளே புகுந்து சிறிது ரஸாநுபவம் செய்யக் குதுகலிக்கின்றேன்.

791. முதற்பாட்டில் *உடற்பிறவி யான்வேண்டேன்* என்று பிறவியை இகழ்ந்தவர்தாமே *குருகாய்ப்பிறப்பேனே* என்று பிறவியையே விரும்பினமையால், வேங்கடத்துக் கோனேரியில் பிறப்பது பிறப்பன்று, அது விரஜாநதியைச் சார்ந்து வைகுண்டத்தில் அப்ராக்ருதசரீரம்பூண்டு வாழ்வதோடொக்குமென்று ஆழ்வார் திருவுள்ளம்பற்றினரென்பது தெற்றென விளங்கும். [குருகாய்ப்பிறப்பேனே] நாரை கொக்கு குருகு இவை



ஒரே ஜாதி. நம்மாழ்வார் திருவாய்மொழியில் தூதுவிடும் பதிகங்களில் *அஞ்சிறையமடநாராய்* *வைகல்பூங்கழிவாய்வந்து மேயுங் குருகினங்காள்* *எங்கானலகங்கழிவாய் இரைதேர்ந்து இங்கினிதமரும் செங்காலமடநாராய்!* என்று முந்துறமுன்னம் தூதுபோக விளித்தது இதனையேயாதலால் *குருகாய்ப் பிறப்பேனே* என்று குருகான பிறவியிலே முதன்முன்னம் விருப்பங் காட்டினராழ்வார்.

192. [*திருவேங்கடச்சுனையில் மீனாய்ப் பிறக்கும் விதியுடையேனாவேனே*] கீழ்ப்பாட்டில் 'குருகாய்ப் பிறப்பேனே' என்றவர் அப்பிறவியில் ஓர் குறைதோன்றி மீனாம் பிறவியை வேண்டுகின்றாரிப்பாட்டில். குருகுக்கு இறகுகள் உண்டாகையாலே அது திருமலையைவிட்டுப் பறந்து வேற்றிடத்திற்குச் சென்றிடவுங்கூடும். திருமலையில் வாழவேணுமென்னுமாசை தமக்கு இப்போதிருப்பினும் குருகாய்ப் பிறந்தபோதும் இருக்குமென்ன முடியாதாதலால் அப்பிறவியில் குறை தோன்றிற்றென்க. மீனாய்ப்பிறந்தால் இடம்விட்டுப் பெயரமுடியாதன்றோ. 'குருகாய்ப் பிறப்பேனே' என்றதையும் 'மீனாய்ப்பிறப்பேனே' என்றதையும் சேர்த்து நோக்குமிடத்து, மத்ஸ்யபக்ஷகமான குருகாய்ப்பிறத்தலோடு, அதற்கு இரையாகின்ற மீனாய்ப் பிறத்தலோடு இவர்க்கு வாசியில்லை—திருமலையில் ஏதேனுமொரு பிறப்பை விரும்புபவராதலால்—என்பது விளங்கும். எம்பெருமான் திருவுள்ளமுகந்துகொண்ட பல அவதாரங்களுள் முதலவதாரமாயிருத்தலும், நீர்மையுள்ளவிடத்தே செழித்து வளர்தலும், ஆதாரமான இடத்தைவிட்டுப் பிரிந்தால் உயிர்தரியாமையும் முதலியன மீனினிடமுள்ள குணவிசேஷங்கள். *குருகாய்ப் பிறப்பேனே* என்றதுபோல் *மீனாய்ப்பிறப்பேனே* என்னாமல் *பிறக்கும் விதியுடையேனாவேனே* என்றது—இப்பொழுதே அங்கு யான் மீனாய்ப் பிறந்திடாவிடினும் என்றைக்கேனும் ஏதேனுமொரு நல்வினையால் அங்கு எனக்கு நேருமென்னும் நிச்சயமுண்டானாலும் போதுமென்ற கருத்தைக் காட்டும்.

793. [*வேங்கடக்கோன்தானுமிழும் பொன்வட்டில் பிடித்துடனே புகப்பெறுவேனாவேனே*] கீழ்ப்பாட்டில் விரும்பிய மீன் பிறவியிலும் ஒரு குறை தோன்றிற்று; நீரைவிட்டுப் பிரிந்தால் உயிர் தரித்திருக்கமாட்டாதது மீன் பிறவி; சுனை

வற்றிப்போனால் மீனுக்கு ஸத்தையில்லையாம்; ஆகவே அப்பிறவியும் வேண்டாவென்று தோன்றி, திருமலையப்பனுக்கு அந்தரங்ககிங்கரனாய் அவன் வாய்நீர் உமிழும் பொற்காளாஞ்சியை ஏந்திக்கொண்டு ஒருவராலும் தகையவொண்ணாதபடி துணிந்து விரைந்து உள்ளே புகுமவனும்பிறவி வாய்க்கவேணுமென்று அபேக்ஷிக்கிறார்.

794. [வேங்கடத்துச் செண்பகமாய் நிற்குந் திருவுடையேனாவேனே] கீழ்ப்பாட்டில் விரும்பிய பொன்வட்டில் பிடிக்கும் கிங்கரனான பிறவியிலும் ஒரு குறை தோன்றிற்று; ஒரு கைங்கர்ய பரனுமளவில் அறிந்துமறியாதும் நிகழ்கின்ற குற்றங்காரணமாகக் கோவிலதிகாரிகள் சினங்கொண்டு 'இன்ன குற்றத்திற்காக உன்னைக் கைங்கரியத்தினின்றும் விலக்கிவிட்டோம்' என்று கடிந்து விலக்கவுங்கூடும்; பொன்வட்டிலைக் களவுசெய்ய ஆசைதோன்றி ராஜதண்டனைக்கு உட்பட நேர்ந்தாலும் நேரும்' என்று தோன்றிற்று. அதனால் அப்பிறவி யாசையைவிட்டு, அத்தகைய குற்றத்திற்கு இடமற்ற ஒரு ஸ்தாவரப்பிறவியை விரும்புகிறார். *வானவர் வானவர்கோனொடுஞ் சிந்துபூமகிழுந் திருவேங்கடம்* என்றபடி பரமபதத்திலுள்ளார் புஷ்பவர்ஷம் வர்ஷிக்குமிடமாதல்பற்றிப் புஷ்பமண்டபமெனப்படுகின்ற திருமலையிலே அப்பனுக்கு புஷ்பகைங்கரியஞ் செய்வது விசேஷமாதலால் அக்கைங்கரியத்திற்கு உபயோகப்படுவதொரு பூமரமாக இருக்க வேண்டினாராயிற்று.

795. [எழில் வேங்கட மலைமேல் தம்பகமாய்நிற்குந்தவமுடையேனாவேனே] கீழ்ப்பாட்டில் சண்பகப்பிறவியை விரும்பிய ஆழ்வார்க்கு புராணகதையொன்று நினைவுக்குவந்தது: "கற்பகக் காவு கருதிய காதலிக்கு, இப்பொழுது ஈவனென்று இந்திரன் காவினில், நிற்பனசெய்து நிலாத்திகழ்முற்றத்துள் உய்த்தவன் * என்றும் *மட்டேறு கற்பகத்தை மாதர்க்காய் வண்துவரை நட்டான் * என்றும் ஆழ்வார்களருளிச்செய்கிறபடியே ஸத்யபாமைப் பிராட்டிக்காக தேவேந்திரனது சோலையினின்று கற்பகத்தரு பெயர்த்துக்கொண்டு போகப்பட்ட கதை; அங்ஙனம் யாரேனும் மஹாப்ரபுக்கள் திருமலைக்குவந்து சண்பக மரத்தின் சதிரைநோக்கி தேவஸ்தானத்தில் நிதிக்குவை செலுத்திப் பெயர்த்துக்கொண்டு செல்லக்கூடுமோ! என்று சங்கித்து



அப்பிறவியை இகந்து, இலை காய் கனி நிழல் ஒன்றுக்குமுதவாததொரு மலட்டுமரமாய்ப் பிறக்கும் பிறவியை விரும்புகிறாராயிற்று. தம்பகம்—வீணே தோன்றி வளர்ந்து அங்கே தீந்து போவதொரு புதருமாம்:

796. [*வேங்கடத்துள் அன்னனைய பொற்குவடாம் அருந்தவத்தனாவேனே *] கீழ்ப்பாட்டில்—திருமலையில் தம்பகமாய் நிற்க ஆசைப்பட்ட ஆழ்வார் அப்பிறவியிலும் குறை கண்டார்; அரசாங்கத்தார் மலையிலுள்ள செடிசெட்டுகளை அடிக்கடி சோதிப்பவர்களாதலால் திடீரென்று அவர்கள் தம்பகத்தைக் களைந்தெறிந்திடக்கூடுமெனவும், அதுதானே விரைவில் தீந்தொழியக்கூடுமெனவும் சிந்தித்தார்; அக்குறைக்கு இடமில்லாமே அத்திருமலையில் ஒரு பெரிய பாறையாக இருக்கப்பெறவேணுமென்று விரும்பினபடி.

797. [* திருவேங்கடமலைமேல் கானாறாய்ப்பாயுங் கருத்துடையேனாவேனே *] கீழ்ப்பாட்டில், திருமலையில் ஒரு பெரும் பாறையாகவிருக்க விரும்பியதிலும் ஒரு குறை தோன்றிற்று; நூதன ஆலயங்களில் மூலபிம்பம் அமைக்கப் பெரும் பாறையைத் தேடி வருமவர்கள் இதைக்கொண்டு ஒரு பௌத்த விக்ரஹமடித்துப் போட்டால் என்செய்வதென்று சிந்தித்தார். அப்படி உடைத்துக்கொண்டு போவதற்கு இடமறும்படி திருமலையில் கானாறாய்ப் பெருகவேணுமென்று பாரிக்கிறாரிதில்.

798. [* திருவேங்கடமலைமேல் நெறியாய்க் கிடக்கும் நிலையுடையேனாவேனே *] கீழ்ப்பாட்டில் கோலின கானாறும்பிறப்பிலும் ஒரு குறையுணர்ந்தார்; கானாறு எப்போதும் பெருகக்கூடியதன்றே; சில காலங்களில் வற்றிப்போமே; அப்போது திருமலையில் வாழ்ச்சி இழந்ததாமே என நினைத்தார். அங்ஙனமன்றி எப்போதும் ஒரு தன்மைத்தாகத் திருவேங்கடமுடையானை ஸேவிக்க வருகின்ற பாகவதர்களின் ஸ்ரீ பாததூளி படும்படி வழியாயிருக்கப் பெறவேணுமென்று பாரிக்கிறாரிதில்.

799. [* படியாய்க்கிடந்துன் பவளவாய் காண்பேனே *] வழியாய்க் கிடப்பதிலும் ஒரு குறை தோன்றிற்று. திருமலைக்குப் பல வழிகளுண்டு. சந்திரகிரிவழி அணித்தென்று அவ்வழியே போகக்கூடும். இப்போது வேறுவழியும் ஏற்பட்டுவிட்டதே. மேலும் வழியென்பது விலகிநிற்பதாதலாலும் அதை

யும்விட்டு, திருமலையப்பனுடைய திருவருள் நோக்கம் பதியுமாறு அவனது கண்முகப்பிலே படியாயிருந்து, அதில் சைதன்யமும் குடிபுகுந்து பவளவாய்காணப் பெறுவேனாக வேணுமென்று பாரிக்கிறாரிதில்.

800. [எம்பெருமான் பொன்மலைமேல் ஏதேனுமாவேனே] நாம் கருங்கற்படியாய்க்கிடந்தால் திருவேங்கடமுடையானுடைய செல்வச் சிறப்புக்கு ஏற்ப அதன்மேல் ஸுவர்ண கவச ஆவரணமேற்பட்டால் படியாகியும் பயனில்லையாமென்று கருதி, 'நானுமறியாமே அவன்றானுமறியாமே திருமலையில் ஏதேனுமொரு பிறப்பாகுக' என்று சாதுரியமாகப் பேசிப் பதிகத்தைத் தலைக்கட்டினாராயிற்று. ... ... *

* எம்பெருமான் பொன்மலைமேலேதேனுமாவேனே * என்றவிடத்திற்குப் பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானத்திலுள்ள ஸ்ரீஸூக்தி வருமாறு—'' [ஏதேனுமாவேனே] அனந்தாழ்வான், இவ்விடத்துக்கு, 'திருவேங்கடமுடையான் தானாகவுமமையும்' என்னும். அதுக்கு ஹ்ருதயமென்னென்னில், சேஷபூதர் திரளுக்குப் புறம்பான சேஷியாகிலு மமையுமென்கை. அங்ஙனன்றிக்கே, பட்டர் அருளிச்செய்யும்படி—நானு மறியவேண்டா, திருவேங்கடமுடையானு மறியவேண்டா; திருமலையிலே யுள்ளதொரு பதார்த்தமாக வமையும்' என்பர். ...'' திருவேங்கடமுடையான் தானாகவும் அமையும் '' என்ற அனந்தாழ்வானுடையவும் பட்டருடையவும் திருவுள்ளம் ஒன்றேயாகும்—எவ்விதமாகவோ திருமலையில் வாஸம் உத்தேச்யம்—என்பதேயாம். ... *

இத்திருமொழியை அடியொற்றி

''மாடாக நிழற்று செழுமரனாகத் தவச்சிறிய
பூடாகக் குழைத்த நறும்புதலாக வழிப்படுமோர்
ஓடாகப் பெறுவமெனி லுயிர்காள்! நற்கதிபெறலாம்
வீடாகத் திருநெறிமால் வீற்றிருக்கும் வேங்கடத்தே''

என்று திருவேங்கடக் கலம்பகத்தில் கூறியது காண்க.

அண்ணாஸ்வாமி அமுதமொழியாயிரத்தில்
எட்டாவதுநூறு முற்றிற்று.





# (ஒன்பதாவது நூறு)

[ஸ்ரீ ஸ்வாமி, ஸம்க்ஷேப ராமாயண விவரணத்தை வியாஜமாகக் கொண்டு அற்புதமாக எழுதிய ஸ்ரீ ராமாயண விசேஷார்த்தங்கள் இந்த ஒன்பதாவது நூறில் சேகரிக்கப்படுகின்றன.]

801. நம்முடைய பூர்வாசாரியர்கள் அநுபவித்தருளின இதிஹாஸபுராணங்களில் ஸ்ரீராமாயணமொன்றே தலைமை பெற்றிருக்கும். இதைத்தான் இதிஹாஸச்ரேஷ்ட மென்று வ்யபதேசித்தருளினார்கள். பகவத்விஷயாதிகளிலும் மிக மிக வெடுத்துக் கையாள்வதும் வியாக்கியானிப்பதும் ஸ்ரீராமாயணமே. இதற்கடுத்தபடியாக ஸ்ரீவிஷ்ணுபுராணம். அதற்கடுத்தபடியாக பகவத்கீதை அவையிரண்டையும்விட ஸ்ரீராமாயணத்திற்கே ப்ராபல்யமென்பது புநருக்தம். ஸ்ரீராமாயணத்திலிருந்து நம் ஆசாரியர்கள் நாலாயிரதிவ்யப்ரபந்த வியாக்கியானங்களில் பெரியவாச்சான் பிள்ளையும் வடக்குத் திருவீதிப் பிள்ளையும் கச்சத் கச்சத்தாக வியாக்கியானித்தருளியிருப்பவற்றைத் திரட்டி ஸ்ரீராமாயண ஸௌரபமென்று பலவாண்டுகட்கு முன்பு வெளியிட்டிருக்கிறேன். இப்போது சேகரிக்கப்படுகிற இந்த நூலின் ப்ரமேயமென்னவென்றால்—இன்சுவையே வடிவெடுத்த ஸ்ரீராமாயணத்தை ஆங்காங்கு உபந்யஸிப்பவர்களுக்கும் உபந்யஸிக்க விரும்புமவர்களுக்கும் உபகாரகமாக ஸ்ரீராமாயண சுலோகரத்னங்கள் பலவற்றுக்கும் இன்சுவைப் பொருள்களை உபஹரிப்பதேயாம். அப்பொருள்கள் ஆசார்ய ஸ்ரீஸூக்திகளின் மணித்திரள்களேயாம்.

## —வால்மீகி நாரதஸமாகமம்—

802. ஸ்ரீராமாயணத்தின் உபக்ரமம் வால்மீகி நாரத ஸம்வாதமாக நிகழ்ந்திருக்கின்றது. அதாவது வான்மீகி முனிவர் நாரத மஹர்ஷியைக் கேட்பதாகவும் அவர் விடை கூறுவதாகவும் தோன்றியிருக்கின்றது ஸ்ரீவிஷ்ணுபுராணம் மைத்ரேயபராசர ஸம்வாதமாக அவதரித்தது. ஆனால் அதன் அவதாரக்ரமத்திலும் இதன் அவதாரக்ரமத்திலும் வாசியுள்ளது. பராசர பகவான் அநுஷ்டானத்தை முடித்துக்கொண்டு ஸ்வாச்ரமத்தில் வீற்றிருக்க, அங்கே மைத்ரேயர் சென்று ஸ்வரூபாநுரூபமாகத் தெண்டனிட்டு ப்ரச்னம் பண்ணினதாக அங்குள்ளது. இங்கு ''நாரதம் பரிபப்ரச்ச வால்மீகி:'' என்றிவ்வளவே உள்ளது. வான்மீகி முனிவரின் ஆச்ரமத்தை நோக்கி தேவலோக மஹர்ஷியாகிய நாரத பகவான் எழுந்தருளினதாகவும் அவரை நோக்கி வான்மீகி பதினாறு கேள்விகள் கேட்டதாகவும் அவற்றுக்கு நாரதர் விடை கூறும் முகத்தால்

ஸ்ரீராம கதைகளை ஒருவாறு கூறித் தலைக்கட்டுவதாகவும் அமைந்துள்ளது.

## —வான்மீகி வினவின் கருத்து—

803. அநவரதமும் ராம ராமேதி கூஜநம் செய்து போது போக்கும் வால்மீகிகோகிலத்திற்கு ஸ்ரீராம கதையையே கேட்க விருப்பமிருந்தும், தம்மிட மெழுந்தருளின நாரதமுனிவரை நோக்கி ராமகதையைச் செவிகுளிரக் கேட்க விரும்பியிருக்குமெனக்கு அதனைச் சொல்லுமையா! என்று ருஜுவாகக் கேட்கலாமாயிருக்க, அங்ஙனம் கேளாமே சில குணவிசேஷங்களைச் சொல்லி இவற்றையுடையவன் யாவனோ அவனைச் சொல்லுமென்று கேட்டது எதற்காக வென்னில்; இத்தகைய திருக்குணங்களையுடையவர் சக்ரவர்த்தி திருமகனொருவரேயன்றி மற்றெவருமல்லர் என்கிற வுறுதி வான்மீகி தமக்கு உள்ளது; அது, ப்ரஹ்ம வித்துக்களில் தலைவரான நாரத மஹரிஷியின் உக்தியாலும் ஊர்ஜிதமாக வேணுமென்கிற அபிநிவேசத்தினாலத்தனை. இராமபிரானுடைய பெருமையைச் சொல்லுமென்று வினவி அதை அவர் சொல்லக் கேட்பதிலுங் காட்டில் ஸாமாந்யமாக ப்ரச்னம் பண்ணி விசேஷமாகச் சொல்லக் கேட்பது ரஸவத்தரமன்றோ?

804. எம்பெருமானுருடைய திருவடிகளில் ஆச்ரயித்தவர்களில் எவர் பெரும் புகழாளரோ அவரைச் சொல்லும் என்று வினவினவளவிலே, வினவப்பட்டவர் “கூரத்தாழ்வானொருவரே அத்தகைய பெரும் புகழாளர்” என்று விவரித்துரைத்தால் அது ரஸவத்தரமாகுமே யல்லது, கூரத்தாழ்வானுடைய பெருமையைச் சொல்லு மென்று அபேக்ஷித்து அதை யொருவர் சொல்லக் கேட்பதில் சிறப்பில்லையன்றோ. ஆக, ஸ்ரீராம கதையைக் கேட்கக் குதூஹலங் கொண்டிருந்த வான்மீகி முனிவர் மறைத்துக் கேட்டது ஆர்ஜவக் குறையினாலென்று நினைக்கவும் தகாது; தமது உறுதியை நிலைநாட்டிக் கொள்ளவேயாம்.

805. [தபஸ் ஸ்வாத்யாயநிரதம் தபஸ்வீ வாக்விதாம் வரம், நாரதம் பரிபப்ரச்ச வால்மீகிர் முநிபுங்கவம்]. இது வால்மீகியல்லாது வேறொருவர் பணித்ததுபோல் தோன்றநின்றாலும் வால்மீகி பணித்ததே. “நாரதம் முநிபுங்கவம் வால்மீகி ரஹம் பர்யப்ருச்சம்” என்று சுலோகமியற்றியிருக்கலாமே யென்னில், அது லௌகிக கோஷ்டிகளில் பரிமாறும் முறை; இது மஹர்ஷி கோஷ்டிகளில் பரிமாறும் முறை என்று கொள்க. இங்கு வால்மீகி தமக்கு தபஸ்வீ என்று விசேஷணமிட்டுக் கொண்டது தம்மைத் தபோநிஷ்டராகச் சொல்லிக்கொள்ள விரும்பியன்று; தபஸ்வீ தாபஸச் சோச்ய; என்கிற நிகண்டுவின்படி ‘நிர்வேதமுடையவர்’ என்கிற பொருளை விரும்பியாம்.



## —தபஸ்வியென்றதன் பொருளை விவரித்தல்—

806. நைஷத காவியத்தில், நளமஹாராஜனால் பிடியுண்ட ஹம்ஸம் தன்னை விட்டுவிடுமாறு வேண்டிக்கொள்ளுகையில் அவ்வரசன் மனத்தில் இரக்கம் பிறக்குமாறு சொல்லுமடைவிலே “மதேக புத்ரா ஜநநீ ஜராதுரா நவப்ரஸூதிர் வரடா தபஸ்விநீ” என்றது; இங்கு (தபஸ்விநீ) என்றது தபஸ்வீ என்பதன் ஸ்த்ரீலிங்க ரூபம். இத்தால் சோசநீயார்த்தே லோகப்ரயோகமுமுண்டென்று காட்டினபடி. அது நிற்க. ஆசார்யோபஸத்தி பண்ண விரும்புமவனுக்கு நிர்வேதமே முக்கியம் என்னுமிடத்தை *பரீக்ஷ்ய லோகாந் கர்ம சிதாந் ப்ராஹ்மணோ நிர்வேதமாயாத்* என்கிற சுருதியும் ஓதிற்று. “சுகஸ்ய ததநாதரச்ரவணாத் ததாத்ரவணாத் ஸூச்யதே ஹி” என்கிற ப்ரஹ்மஸூத்ரமும் காட்டிற்று. ப்ரக்ருதத்தில் வான்மீகிக்கு எவ்விதமான நிர்வேத மென்னில், ஆசார்யன் முகமாகக் கேட்டாலன்றி வித்யை ப்ரதிஷ்டிதமாகா தென்கிற சாஸ்த்ரார்த்தத்தைத் தாம் உணர்ந்தவராகையாலே அப்படி உபதேசிக்கவல்ல ஆசார்ய ரொருவர் நேர்படவில்லையே! என்றிருந்த நிர்வேதமேயாயிற்று. சொல்லுகிற ஆசாரியர் தம்முடைய வாக்கு வல்லமையினாலே சடக்கெனச் சொல்லிவிடுவதில் ரஸமில்லை; விவக்ஷிதமான விஷயத்தை மனனம் பண்ணிப்பண்ணித் தாமநுபவித்து உருகுந் தன்மையுமிருக்கவேணு மென்பதைக் காட்டவே நாரதமஹர்ஷிக்கு வாக்விதாம் வரம் என்றும் முநிபுங்கவம் என்றும் இரண்டு விசேஷணங்களிடப்பட்டன. வால்மீகி முனிவர் நாரத மஹர்ஷியை வினவின அம்சம் யாதென்னில்; அது மேல் மூன்று சுலோகங்களில்காண்க.

807. [“கோ ந்வஸ்மிந் ஸாம்ப்ரதம் லோகே குணவான் கச் ச வீர்யவான். தர்மஜ்ஞச் ச க்ருதஜ்ஞச் ச ஸத்யவாக்யோ த்ருடவ்ரத:”] இது முதலான மூன்று சுலோகங்களில் பதினாறு திருக்குணங்களையடக்கி இவையுடையவன் யாவனென்று கேட்கப்படுகிறது. இதில் மூன்று நிர்ப்பந்தங்கள் வைக்கப்பட்டன; அவையாவன 1. அஸ்மிந் லோகே என்கையாலே தேவலோகத்திலுள்ள வொருவனைச் சொல்லலாகாதென்பது முதல் நிர்ப்பந்தம். 2. ஸாம்ப்ரதம் என்கையாலே என்றைக்கோ இருந்து மறைந்து போனவனைச் சொல்லலாகாதென்பது இரண்டாம் நிர்ப்பந்தம். 3. *மஹர்ஷே! த்வம் ஸமர்த்தோஸி ஜ்ஞாதுமேவம்விதம் நரம்* என்கையாலே தேவயோனியிற் பிறந்தானொருவனைச் சொல்லுகையன்றிக்கே மநுஷ்யயோனியிற் பிறந்தவனையே சொல்லவேணுமென்பது மூன்

ரும் நிர்ப்பந்தம். ப்ரச்நம் பண்ணின திருக்குணங்களின் சுருக்கமான விவரணம் கேளீர்.

808. [குணவாந்.] பொதுவாகக் குணமுடையவன் என்பது இதன் பொருளன்று. குண: என்கிற சொல்லானது சீலம் (அல்லது) ஸௌசீல்யம் என்கிற குண விசேஷத்திற்குச் சிறப்புப்பெயர். ஆளவந்தார் ஸ்தோத்ரரத்னத்தில் *வசீ வதாந்யோ குணவாந்* இத்யாதிச்லோகத்திலே குணங்களிடையே குணவாந் என்றருளிச் செய்திருப்பது கொண்டு இதனை எளிதாக வுணரலாம். சீலமென்றாலும் ஸௌசீல்யமென்றாலும் பர்யாயம். மஹானாயிருப்பவன் தனது மேன்மையைக் கணிசியாதே தாழ்ந்தவர்களோடுங் கலந்து பரிமாறுகைக் கீடான குணமிது. குஹப்பெருமாள் போல்வார் இக்குணத்திற்கு இலக்காயினர்.

809. [வீர்யவாந்.] (சரணாகதிகத்யே) குணசூர்ணையில் சௌர்யவீர்யபராக்ரமங்கள் மூன்றும் ஒருசேர்த்தியாகப் பேசப்படுகின்றன. எதிரிகளின் சேனை எவ்வளவு பிரபலமாக இருந்தாலும் அது கண்டு அஞ்சாமை; அந்தச்சேனையினுள்ளே அஸஹாயனாய்ப் புகுந்து எதிரிகளை அநாயாஸமாகப் பொடிபடுத்துந் திறல்; அப்படிச் செய்யுமளவில் தனக்குச் சிறிதளவேனும் க்ஷதியேற்படாதபடியான மிடுக்கு. ஆக இம்மூன்றும் சௌர்ய வீர்ய பராக்ரமங்களாம். இங்கு ஒன்றைச் சொன்னது மற்றவற்றையுஞ் சொன்னபடி. கரதூஷணாதி வதத்தில் காணத்தக்கதிது. "அஸஹாயசூர! அநபாய ஸாஹஸ!" என்றது காண்க.

810. [தர்மஜ்ஞ:] தருமமறிந்தவரென்று பொருள். ஆண்டாள் நாச்சியார் திருமொழியில் கண்ணபிரானை *தருமமறியாக் குறும்பன்* என்கிறாள். அவ்வியல்புக்கு நேர்மாறாகத் தருமமறிந்தவரென்று கூறப்படுகிறான் இராமபிரான். இங்கு விவக்ஷிதமான தருமம் எதுவாயிருக்கக்கூடுமென்று பார்க்கில், ஸுந்தரகாண்டத்தில் (38-41) *ஆந்ருசம்ஸ்யம் பரோ தர்ம: த்வத்த ஏவ மயா ச்ருத:* என்று ஸீதா பிராட்டி, பலகாலும் ஆந்ருசம்ஸ்யமே பரம தர்மமென்று பெருமாள் உபந்யஸிக்கக் கேட்டதாகச் சொல்லுகையாலே கருணையே தருமமாகக் கருதப்படுகின்றது. பெருமாளுக்குக் கருணாகாகுஸ்தனென்றன்றோ ப்ரஸித்தி. *விதிதஸ் ஸஹி தர்மஜ்ஞச் சரணாகதவத்ஸல:" என்கிற பிராட்டியின் திருவாக்குப்படி சரணாகத வாத்ஸல்யமும் தருமமெனக் கொள்ளத்தகும்.

811. [க்ருதஜ்ஞ:] அயோத்யா காண்டத்தில் (1-11) *கதஞ்சிதுபகாரேணக்ருதேந ஏகேந துஷ்யதி, நஸ்மரத்யபகாராணாம் சதமபி ஆத்மவத்தயா* என்று கூறினபடியே தீமைகள் பல செய்யினும் அவற்றைப் பொருள்படுத்தாதே, நன்மை லவலேசம் கிடைத்தாலும் அதனையே பெருக்க மதித்திருப்பவன்.



812. [ஸத்யவாக்ய:] உள்ளதை உள்ளபடியே கண்டு உள்ளபடியே சொல்லுவது தான் ஸத்யமென்று உலகங்கொண்டிருப்பது ஒவ்வாது. ஒன்றை வேறொன்றாக மயங்குகையாகிற மருள் மனிதர்க்கு ஸஹஜமாகையாலே மருண்டு சொல்லுமவர்களை அஸத்யவாதி என்ன வேண்டிவரும். இதை பத்தாமத்யாயத்தில் "க்ஷமா ஸத்யம் தமச் சம:" என்றவிடத்து பாஷ்யத்தில்—உள்ளதை உள்ளபடியே கண்டு சொல்லுவது ஸத்யம் என்னாமல், தான் கண்டபடியே சொல்லுவது ஸத்யம்" என்றருளிச் செய்து, தான் கண்டபடியே சொல்லுவதுங்கூட சிலவிடங்களில் அநர்த்தமாக முடியுமாதலால் "ஸத்யம் பூதஹிதம் ப்ரோக்தம்" என்ற வ்யாஸஸ்ம்ருதியையே ஸித்தாந்தமாகக் கொண்டு நிகமனம் செய்தருளினார் பாஷ்யகாரர். ஆக பூதஹிதவாதீஎன்கை.

813. [த்ருடவ்ரத:] ஒரு காரியத்தைச் செய்து முடிக்கவேணுமென்கிற சங்கற்பத்திற்கு விரதமென்று பெயர். எந்த காரணத்தாலும் அது தடைபடாமல் உறுதியாய் இருக்கப் பெற்றவன் த்ருடவ்ரதனெனப்படுவன். தண்டகாரண்ய வாஸிகளான முனிவர்களுக்கு அபயமளித்தபோது பிராட்டி அந்த ப்ரதிஜ்ஞையை சிதிலமாக்கப் பார்க்கையில் "அப்யஹம் ஜீவிதம் ஜஹ்யாம் த்வாம் வா ஸீதே! ஸலக்ஷ்மணாம், நஹி ப்ரதிஜ்ஞாம் ஸம்ச்ருத்ய ப்ராஹ்மணேப்யோ விசேஷத:" என்று சொல்லியும், விபீஷணாழ்வான் திறத்தில் *ந த்யஜேயம் கதஞ்சந* என்று சொல்லியும் காட்டியருளின உறுதியை நினைப்பது.

814. [சாரித்ரேண யுக்த:] சரித்ரமேவ சாரித்ரம்; அதாவது நல்லொழுக்கம். பெரியார்களைப் பணிதல், தந்தைதாய் பேணுதல், சாஸ்த்ரவிஹிதங்களை வழுவற அனுஷ்டித்தல், தெய்வபக்தியுடைமை, பிறரை நலியாமை, பிறர் பொருள் தாரமென்றிவற்றைக் கவர நெஞ்சாலும் நினையாமை—என்றினைய வொழுக்கங்களுக்குப் பொதுப்படையான பெயர் சாரித்ரமென்பது. இவையெல்லாம் இராமபிரான் பக்கலிலே எளிதாகக் காணக்கூடியவை.

815 [ஸர்வபூதேஷு ஹித:] ப்ரியம் ஹிதம் என்னுமிரண்டில் தற்காலத்தில் இன்பம் தருமது ப்ரியமென்றும், தற்காலத்தில் அப்ரியமாயிருந்தாலும் உத்தரகாலத்தில் மிக நன்மை பயக்குமது ஹிதமென்றும் சொல்லப்படும். இராமபிரான் வைரிகள் திறத்திலே செய்தகாரியங்கள் அப்போது அப்ரியமெனினும் ஹிதகோடி

யிலே எண்ணத்தக்கவை என்க. காகன் பக்கலிலே அபராதம் கண்ட பெருமாள் அவனை வதைக்க நினைத்தால் அநாயாஸமாக வதைக்கலாமாயிருந்தும் ப்ரஹ்மாஸ்த்ரம் தொடுத்துவிட்டது "த்ராதும் ந சக்தா யுதி ராமவத்யம்" என்னுமுறுதியை உலகம் பரவச் செய்து மீண்டுமவனைக் காத்தருள்வதற்கே யன்றோ!

816. [வித்வான்:] உலகில் ஒன்றிரண்டு கலைகள் கற்றவரை வித்வானென்கிறோம். பெருமாள்படி அப்படியோ?* வேதவேதாங்கதத்வஜ்ஞ: சதுர்வேதே ச நிஷ்டித:. ஸர்வ சாஸ்த்ரார்த்த தத்வஜ்ஞ: ஸ்ம்ருதிமாந் ப்ரதிபாநவாந்.* என்று மேலே நாரதமஹர்ஷி விடை கூறும்படியன்றோ பெருமாளுடைய வைதுஷ்யமிருப்பது.

817. [ஸமர்த்த:] 'வித்வாந் க:' என்கிற வினவுக்கு அடுத்தபடி 'ஸமர்த்த: க:. என்னுமிவ்வினா தோன்றியிருப்பதனால் வித்வத்து வேறு, ஸாமர்த்தியம் வேறு என்பது பெறப்படும். மேலே (அயோத்யா.) *லௌகிகே ஸமயாசாரே க்ருதகல்போ விசாரத:* என்று சொல்லுகிறபடியே லௌகிக ஸாமர்த்தியமும் விஞ்சியவர் பெருமாள்.

818. [ஏகப்ரியதர்சந:] எவ்வளவுகாலம் பார்த்துக்கொண்டிருந்தாலும் தெகுட்டாமல் இனிமையே செல்லும்படியான பார்வையை யுடையவர் பெருமாள். அரண்யவாஸிகளான முரட்டாண்களையும் கவரவல்ல அழகு படைத்தவர். "தருணௌ ரூபஸம்பந்நௌ" என்று வையவந்த வாயாலும் வாழ்த்தவேண்டும்படியான ரூபலாவண்யமமைந்தவர்.

819. [ஆத்மவாந்:] ஆத்மாவையுடையவன் ஆத்மவாந். ஆத்மா என்னுஞ் சொல்லுக்கு வடமொழி நிகண்டுக்களில் ஐந்து பொருள்கள் கூறப்பட்டுள்ளன; "ஆத்மா ஜீவே த்ருதௌ தேஹே ஸ்வபாவே பரமாத்மநி" என்றது காண்க. த்ருதியாகிற தைர்யமுடைமையை இங்குக் கொள்ளலாம்; "ஜய ஜய மஹாவீர!" என்றவுடனே "மஹாதீர தௌரேய!" என்றும் 'அநபாயஸாஹஸ!'. என்றும் போற்றத்தக்க தைரியமுடையவர் பெருமாள்.

820. [ஜிதக்ரோத:] கோபத்தை வென்றவர் என்று பொருள். கோபமில்லாதவரென்று பொருளன்று; கோபத்தை வெல்வதாவது அதனை ஸ்வாதீனப்படுத்தி வைத்துக் கொள்ளுகை. எப்போதும் கோபிஷ்டர்களாகவேயிருப்பதும், கோபம் அடியோடு இல்லாமலிருப்பதுமாகிய இரண்டும் தவறு. கோபத்தைக்காட்டிக் காரியங்கொள்ள வேண்டிய ஸமயங்களில் மட்டும் கோபத்தை வரவழைத்துக்கொள்வதும், காரியம் ஆனவாறே அக்கோபம் போனவிடம் தெரியாதபடி செய்துகொள்வதும் உத்தம புருஷ லக்ஷணம்.



821. [த்யுதிமாந்:] த்யுதியாவது காந்தி; அதனை யுடையவர். கீழ் "ஏகப்ரியதர்சந: க:!" என்று வினா நிகழ்ந்திருக்கச் செய்தேயும் இங்கு 'த்யுதிமாந் க:?' என்று வினவியிருப்பதனால் இதில் ஒரு மருமமறியத்தக்கது. "வெங்கதிரோன் குலத்துக்கோர் விளக்காய்த் தோன்றி" என்கிறபடியே ஸூர்யகுலத்தில் அவதரித்த பெருமாள் *ராமதிவாகர:* என்னும்படி தாமும் ஸூர்யனாயிருப்பதால் ஸூர்யன் ப்ரபையை விட்டுப் பிரியாதிருப்பதுபோல "ப்ரபாவாந் ஸீதயா தேவ்யா பரமவ்யோம பாஸ்கர:" என்கிறபடியே ப்ரபாஸ்தாநீயையான ஸீதா பிராட்டியை விட்டுப் பிரியாதவர் என்பது உட்பொருள். "அநந்யா ராகவேணாஹம் பாஸ்கரேண ப்ரபா யதா" என்றும் "அநந்யாஹி மயா ஸீதா பாஸ்கரேண ப்ரபா யதா" என்றும் திவ்ய தம்பதிகளிருவரும் பேசும்படியான நித்யயோகமுடைமை.

822. [அநஸூயக:] நற்றங்களையும் குற்றமாகக் கொள்ளுகைக்கு உறுப்பான துர்க்குணம் அஸூயை. அஃதில்லாமை—குற்றங்களையும் நற்றமாகக் கொள்ளுகை. ஆக வாத்ஸல்யமுடையவர் என்றதாகத் தேறும். "சரணாகத வத்ஸல:" என்றும் "ரிபூணாமபி வத்ஸல:" என்றும் போற்ற நின்றவர் பெருமாள்.

823. [கஸ்ய பிப்யதி தேவாச் ச ஜாதரோஷஸ்ய ஸம்யுகே] கீழ்ப் பதினைந்து வினாக்களும் முதல் வேற்றுமையில் நிகழ்ந்து, இவ்வினா மட்டும் ஆறும் வேற்றுமையில் நிகழ்வதை நோக்குமிடத்து "இதம் தே நாதபஸ்காய நாபக்தாய கதாசந. ந ச அசுச்ரூஷவே வாச்யம் ந ச மாம் யோப்யஸூயதி" என்ற கீதாச்லோகம் நினைவுக்கு வரும். சதுர்த்தீவிபக்தி நிர்தேசமுள்ள மூன்று பாதங்களிற் காட்டிலும் வேறுபட நான்காவது பாதம் ப்ரதமாவிபக்தி நிர்தேசத்தோடு கூடியிருக்கிறதிங்கு. அதைப் பற்றி நம் பாஷ்யகாரர் "அஸமாந விபக்தி நிர்தேச: தஸ்ய அத்யந்த பரிஹரணீயதாஜ்ஞாபநாய" என்று அருளியிருக்கிறார். அதுபோல இங்கும் ஒரு விசேஷம் ஜ்ஞாபிதமாக வேணும்; கீழ் ப்ரஸ்தாவித்த பதினைந்து குணங்களும் ஒரு தட்டாய், இந்த பதினாறுவது குணம் மட்டும் ஒரு தட்டாயிருக்கை. போர்க்களத்தில் முன்னிற்கும்போது சீற்றத்தின் மிகுதியை நோக்கில் அநுகூலர்க்கும் அணுகவொண்ணாதபடி யிருக்கையைச் சொல்லுகிறது. ராகவ ஸிம்ஹமன்றோ.

824. அஸங்க்யேய கல்யாணகுணகணங்களுக்கு நிதியாக ப்ரஸித்தனான பகவானிடத்தில் இப்பதினாறு திருக்குணங்கள் மட்டுமாவுள்ளனவென்று கேட்கலாகாது; சந்திரனை ஷோடசகலா பரிபூர்ணனென்னுமாபோலே ஸ்ரீராமசந்திரனை ஷோடச சுபகுண பரிபூர்ணனாகவைத்துப் பேசினபடி. மற்றுமுள்ள குணங்களுமெல்லாம் இவற்றினுள்ளே அடங்கி யிருப்பனவாகக் கொள்க. [குறிப்பு:—இப்பதினாறு குணங்களையும் மிகமிக விவரித்து ஸ்ரீராமாயண கதைகளைப் பெரும்பாலும் இவற்றிலேயிணக்கி அபூர்வ ராமாயணமென்று நாமெழுதிய நூலானது தமிழ். தெலுங்கு, ஸம்ஸ்க்ருதம், ஆங்கிலம் ஆகிய நான்குபாஷைகளிலும் வெளிவந்துள்ளது.]

825. இங்கு முக்கியமாகக் குறிக்கொள்ளத்தக்கதொன்று. ஸ்ரீராமாயணம் வெறும் கதை நூலன்று; “வேதோபப்ர்ம்ஹணார்த்தாய தாவக்ராஹயத ப்ரபு:” என்கையாலே வேதார்த்தங்களை வியாக்கியானிக்கவே ப்ரவ்ருத்தமானது இது. இத்தகைய மஹாக்ரந்தத்தில் திருக்குணங்களைப்பற்றின வினாவே தலையாக அமைந்திருப்பதால் நிர்குணப்ரஹ்மவாதம் அடியறுக்கப்படுகிறதென்றும் அது வேதபுருஷனுக்கு அநபிமதமென்றும் முக்கியமாக உணரவேணும். பரமபதத்தில் எம்பெருமான் தன்னுடைய பரத்வமொன்றையே காட்டமுடிகிறது. ஸௌலப்ய ஸௌசில்யதயாக்ஷாந்தி வாத்ஸல்யாதி குணங்களை அங்குக் காட்ட முடிகிறதில்லை. ஏன்? அவற்றுக்கு விஷய (லக்ஷ்ய) பூதர் அங்கு ஒருவருமில்லாமையாலே. அத்திருக்குணங்கள் விலைச்செல்லவேண்டியே இவ்வுலகில் வந்து திருவவதரித்தது. *குணபரீவாஹாத்மநாம் ஜந்மநாம்* என்று பட்டர் அருளிச்செய்தது இதைக்கருதியே. ஆக நிர்க்குண ப்ரஹ்மவாதிகளுக்கு ஸ்ரீராமாயணம் அநுகூலமாயிருக்கத்தகுதியில்லை. நிர்க்குணப்ரஹ்மவாதத்தை நெஞ்சிலும் நினையாதவர்களே ஸ்ரீராமாயணாதிகாரிகளென்பது வால்மீகி நாரதமஹர்ஷிகளின் கருத்து.

826. [“ஏததிச்சாம்யஹம் ச்ரோதும் பரம் கௌதூஹலம் ஹி மே, மஹர்ஷே! த்வம் ஸமர்த்தோஸி ஜ்ஞாது மேவம்விதம் நரம்.”] இத்தகைய திருக்குணங்களுள்ளவரைச் சொல்வீர்’ என்னாதே ‘ச்ரோதும் இச்சாமி’ என்றது, ஏற்கனவே தமக்கும் தெரிந்திருந்தாலும் “புருஷார்த்தோய மேவைகோ யத் கதாச்ரவணம் ஹரே:” என்ற கணக்கிலே காதுபடைத்தது ஸபலமாம்படி கேட்டுக்கொண்டேயிருப்பதில் குதூஹலமென்று காட்டுகிறபடி. இங்கு (ச்ரோதும்) என்றது மத்யமதீபந்யாயேந [காகாக்ஷிந்யாயேந] முன்னும் பின்னும் அந்வயிக்கும். ‘ச்ரோதுமிச்சாமி’ என்று முந்தின அந்வயம்; ‘ச்ரோதும் மே கௌதூஹலம்’ என்று பிந்தின



அந்வயம். கேட்கத்தான் எனக்கு ஆசை; சொல்லுவதைவிட கேட்பதுதான் சிறந்தது என்று தெரிவிக்கப்பட்டதாயிற்று.

827. எல்லாருமே கேட்க ஆசைப்பட்டுவிட்டால் வக்தாவொருவர் வேணுமே. வக்தா இல்லாமல் கேட்பதெப்படி! வக்தாவாகைக்கு உரியவர் நாரதமஹர்ஷிதான் என்று உத்தரார்த்தத்தினால் காட்டப்படுகிறது. [ஏவம்விதம் நரம் ஜ்ஞாதும் த்வம் ஸமர்த்தோஸி] ஒருவர் ஒன்றையறிந்து கொள்வதானது “ஸ்வாத்யாய ப்ரவசநே” என்ற கணக்கிலே பிறர்க்கு அறிவிப்பதற்காகவேயாதலால், இங்கு ஜ்ஞாதும் என்றது ஜ்ஞாபயிதும் என்ற பொருளையும் தரும். [ணிச் ப்ரத்யயம் மறைந்து கிடக்கிறதென்பர் வையாகரணர்.] ணிச்சு உள்ளவிடத்தில் அதற்கு அர்த்தமில்லாமற் போவதும், ணிச்சு இல்லாதவிடத்தில் அதன் அர்த்தத்தைக் கொள்ளுதலும் சாஸ்த்ரஜ்ஞர்களுக்கு உடன்பாடென்க. ஆக, நாரத மஹர்ஷியே! ஜ்ஞாதாவும் ஜ்ஞாபயிதாவுமான தேவரீர் சொல்ல, அடியேன் கேட்க ஆசைப் படுகிறேனென்றாராயிற்று.

828. [முநே! வக்ஷ்யாம்யஹம் புத்த்வா தைர்யுக்த: ச்ரூயதாம் நர:] இங்கு ‘அஹம் புத்த்வா வக்ஷ்யாமி’ என்றது பகவத்குண ரஸிகர்களுக்கே நிலமான வார்த்தை. புத்த்வா—தெரிந்து கொண்டு, வக்ஷ்யாமி—சொல்லுவேன். என்பதாகப் பொருள் தோன்றும். இனிமேல் யாரிடம் கேட்டுத் தெரிந்து கொள்ளப் போகிறாரிவர். நான்முகக் கடவுளிடம் பலகால் ஸ்ரீராம குணங்களைக் கேட்டு நெஞ்சில் தேக்கிக் கொண்டிருப்பவரிவர்; இக்கதையைச் சொல்லுவதற்கென்றே இவ்விடம் வந்தவருமாவர் அப்படிப்பட்டவர் ‘இதோ சொல்லுகிறேன் கேளீர்’ என்று சொல்லித் தொடங்க வேண்டியிருக்க, ‘புத்த்வா வக்ஷ்யாமி’ [தெரிந்து கொண்டு சொல்லுவேன்] என்றது என்ன கருத்தினால் என்று ஆராயப்பட வேண்டும்.

829. புத்த்வா என்பதற்கு—தெரிந்து கொண்டு என்று அர்த்தமன்று. ‘மோஹம் நீங்கி அறிவு பெற்ற பின்பு’ என்பதே பொருள். வால்மீகே! நீர் ஏதோ சில குணங்களைக் கேட்கிற வியாஜத்தினாலே இராமனுடைய ஸகல கல்யாண குணங்களையும் நினைப்பூட்டிவிட்டீர்; அந்த குணக்கடலில் அமிழ்ந்து கரைகாணமாட்டாதே முசித்துக்கிடக்கிற எனக்கு புத்தி ஸ்வாதீனமானாலன்றோ சொல்ல இயலும்; ப்ரக்ருதிஸ்தனன்றிக்கே “காலாழும் நெஞ்சழியும் கண் சுழலும்” என்று கிடக்கிற நான் ப்ரக்ருதிங்கதனானவாறே ஆந்தனையும் சொல்ல முயல்கிறேனென்றாராயிற்று.

830. இங்கு ச்லோகங்கள் வரிசையாகக் காணப்பட்டாலும் "முநே! வக்ஷ்யாம்யஹம் புத்த்வா" என்ற பிறகு சில நாழிகைகளோ சில நாட்களோ நாரதர் பேசாதே கிடந்தாராகவேணும். திருவாய்மொழியில் நம்மாழ்வார் மூவாறுமாஸம் மோஹித்துக் கிடந்தது ப்ரஸித்தமன்றோ; அப்படியே இங்கு நாரதரும்.

831. [தைர் யுக்த: ச்ரூயதாம் நர:] இங்கு (நர:) என்பது அநபேக்ஷிதம். கீழ் வால்மீகி ப்ரச்நத்தில் "ஜ்ஞாது மேவம்விதம் நரம்" என்றிருக்கையாலே மநுஷ்ய யோநியிற் பிறந்தவனைப் பற்றியே தெரிவிக்க ப்ராப்தமாகுமாதலால் [நர: ச்ரூயதாம்] என்ன வேண்டாவே. ஆயினும் சொல்லியிருப்பதில் விளங்கும் மருமம் கேளீர். தசரதாத் மஜனாகத் திருவவதாரம் செய்தவன் ஸ்ரீமஹா விஷ்ணுவேயென்னுமிடம் ஸ்ரீராமாயணத்தில் அபலாபம் செய்யப்பட்டிருக்கவில்லை. [பால. 15.] *ஏதஸ்மிந்நந்தரே விஷ்ணுருபயாதோ மஹாத்யுதி:, சங்க சக்ரகதாபாணி: பீதவாஸா ஜகத்பதி:............... *தத: பத்ம பலாசாக்ஷ: ச்ருத்வா ஆத்மாநம் சதுர்விதம், பிதரம் ரோசயாமாஸ ததா தசரதம் ந்ருபம்* இத்யாதி ச்லோகங்களாலும், மேலே (அயோ. 1-7.) *ஸ ஹி தேவை ருதீர்ணஸ்ய ராவணஸ்ய வதார்த்திபி:, அர்த்திதோமாநுஷே லோகே ஜஜ்ஞே விஷ்ணுஸ் ஸநாதந:* இத்யாதி ச்லோகங்களாலும் ஸ்பஷ்டமாகவே அது தெரிவிக்கப்பட்டுள்ளது. ஆயினும் இராமபிரான் திருவுள்ளத்தால் விஷ்ணுத்வத்தில் வெறுப்பும் மநுஷ்யத்வத்தில் விருப்பம் காண்கிறது. ராவணவதானந்தரம் தேவதா வர்க்கங்கள் வந்து கூடி "பவாந் நாராயணோ தேவ:" என்றது கடலோசையாய் "ஆத்மாநம் மாநுஷம் மந்யே ராமம் தசரதாத்மஜம்" என்பதே திடமுற்றதன்றோ.

832. இங்கு (மந்யே) என்பதற்கு 'பஹுமந்யே' என்னுமர்த்தம் நம் ஆசார்யர்களுக்கு அபிமதம். பகவத் கீதையில் "அபி சேத் ஸுதுராசாரோ பஜதே மாம் அநந்யபாக், ஸாதுரேவ ஸ மந்தவ்ய:" என்றவிடத்தில் 'மந்தவ்ய:' என்பதற்கு 'ஜ்ஞாதவ்ய:' என்று சங்கராசாரியர் பணித்த பொருளைத்தள்ளி ஸ்வாமி "பஹுமந்தவ்ய:" "பஹுமந்தவ்ய:" என்றருளியதை வழிகாட்டியாகக் கொண்டு இங்கும் 'மந்யே' என்பதற்கு 'பஹுமந்யே' என்று பொருள் பணிப்பது அநவத்ய மென்னுமளவே யன்று, ரஸவத்தரமுமாகும்.

833. 'நான் உண்மையில் நாராயணனேயாயினும் மநுஷ்யத்வத்தில் தான் எனக்கு உகப்பு அதிகம்' என்று இராமபிரானே யன்றோ காட்டி நிற்கிறான். நடந்த கதைகளும் மநுஷ்யத்வத்திற்கே யன்றோ சாலப் பொருந்துவது. ஆகவேதான் விச்வாமித்ர முனிவன் மஹாஸதஸ்ஸிலே "வேதாஹ மேதம் புருஷம் மஹாந்தம்" என்ற ச்ருதிச் சாயையிலே "அஹம்வேத்மி மஹாத்மாநம்" என்று சொல்லி வைத்து, ஏகாந்தத்தில் திருப்பள்ளி யுணர்த்தும் போது "உத்திஷ்ட நரசார்தூல!" என்றே ஸம்போதனம் பண்ணிற்று. வால்மீகி தாமும் பட்டாபிஷேகத்தைப் பேசுமிடத்திலும் "அப்யஷிஞ்சந் நரவ்யாக்ரம்" என்றன்றோ பணித்தது. "அப்யஷிஞ்சந் மஹா விஷ்ணும்" என்றால் சுலோகம் கூடாதோ? ஸ்ரீ ராமாயணத்தைக் குசலவர்கள் பாடப் பெருமாள் முகம் சுளிக்காமல் கேட்பதற்கு (நரவ்யாக்ரம்) என்பதே பொருத்தமாகுமென்றும் அறிந்தன்றோ அங்ஙனே பேசிற்று. ஆக, "தைர் யுக்த: ச்ரூயதாம் நர:" என்ற விடத்தில் நாரத மஹர்ஷியின் விவக்ஷிதம்—வால்மீகே! 'ஜ்ஞாது மேவம்விதம் நரம்' என்று நீர் சொன்னபடியே உண்மையில் மநுஷ்ய வ்யக்தியைப் பற்றியே சொல்லுகிறேனென்பதாம்.

834. "இக்ஷ்வாகு வம்ச ப்ரபவ:" என்று தொடங்கி, [ஸத்யே தர்ம இவாபர:] என்னுமளவும் பன்னிரண்டு சுலோகங்களில் பெருமாளுடைய திருக் குணங்களைப் பரக்கச் சொல்லி, (19) *தமேவம் குண ஸம்பந்நம் ராமம் ஸத்யபராக்ரமம்...............யௌவராஜ்யேந ஸம்யோக்து மைச்சத் ப்ரீத்யா மஹீபதி:* என்று தொடங்கி (89) *ராமஸ் ஸீதா மநுப்ராப்ய ராஜ்யம் புநரவாப்தவாந்* என்னுமளவும் மகுடாபிஷேக முயற்சி முதலாக, பட்டாபிஷேகத்தளவாக ராமாயண கதையை ஸம்க்ஷேபமாகச் சொல்லித் தலைக்கட்டி வான்மீகி முனிவரிடம் விடைபெற்றுக் கொண்டு தேவலோகம் சென்று சேர்ந்தார் நாரதமுனிவர். ஸம்க்ஷேப ராமாயணத்தில் மற்றுமுள்ள சில ச்லோகங்களில் பொருட்சுவை கேளீர்.

835. ["ஸ ஸத்யவசநாத் ராஜா தர்மபாசேந ஸம்யத:, விவாஸயாமாஸ ஸுதம் ராமம் தசரத: ப்ரியம்.] சக்ரவர்த்தி தம்முடைய ப்ரிய புத்ரனைக் காட்டுக்குப் போகவிட்டானென்று சொல்லுமிவ்விடத்தில் (ஸத்யவசநாத்) என்கிற ஹேதுநிர்தேச மொன்றே போதும். (தர்மபாசேந ஸம்யத:) என்கிற ஹேதுகர்ப்ப விசேஷணமுமிட்டது ஒரு சாஸ்த்ரார்த்தத்தைத் தெரிவிக்கைக்காகவாம். அதாவது, வியாகரணத்தில் "யாப்யே பாசப்" என்றொரு ஸூத்ரம். "குத்ஸித: பிஷக்-பிஷக்பாச:" என்பது இதற்கு உதாஹரணம். அதுபோல தர்மபாச மென்றது குத்ஸித தர்ம மென்றபடி; தர்மாபாஸ மென்றதாகத் தேறும். கைகேயியின் வரப்ரார்த்தனைக்குக் கட்டுப்பட்டு மன்னவன் மகனைக் காட்டுக்குப் போகவிட்டதாகக்

கதை. கைகேயிக்கு அவன் வரங் கொடுத்திருந்தது எந்த யுகாந்தரத்திலோ தெரியாது. இன்னவிதமான வரம் என்று குறிப்பிடப்பட்டிருக்கவுமில்லை. அதுகிடக்க, இவ்வரசன் இராமனைத் தானாக வரவழைத்து 'நாளை உனக்கு மகுடாபிஷேகம்' என்று பலகால் சொன்னது நாடு நகரமும் நன்கறிந்தது. இங்ஙனே சொன்னதைத் தவறினவன் ஸத்யவாதியாக எங்ஙனம் ஆகமுடியும்?

836. இங்கு முக்கியமான விஷயம் ஒன்றே. *ராமோ விக்ரஹவாந் தர்ம:* என்று-வடிவெடுத்த ஸித்த தர்மமாகச் சொல்லப்பட்ட இராமபிரானோடு கூடி வாழ்வதை விட்டு ஆபாஸ தர்மமான ஸத்ய வசனத்தைத் தயரதன் பற்றி நின்றது அவனுக்கு அவத்யமாகவே சொல்லப்பட்டுள்ளது. முமுக்ஷுப்படியில் சரமச்லோகப்ரகரணத்தில் "ஸர்வதர்மாந் பரித்யஜ்ய" என்ற விடத்தில் பிள்ளை லோகாசார்யர் அருளிச் செய்துள்ள ஸ்ரீஸூக்தி "சக்ரவத்தியைப் போலே இழக்கைக்குறுப்பு" என்பதாம். இங்கு மணவாள மாமுனிகளின் வியாக்கியான ஸ்ரீஸூக்தி வருமாறு—; "முன்பே வரப்ரதானத்தைப் பண்ணிவைத்து இப்போதாக மறுக்க வொண்ணாதென்று ஆபாஸமான ஸத்ய தர்மத்தைப் பற்றிநின்று *ராமோ விக்ரஹவாந் தர்ம:* என்கிற பெருமாளோடே கூடி வாழவிருந்த பேற்றையிழந்த சக்ரவர்த்தியைப் போலே" என்று. இங்ஙனே ஆசாரியர்கள் நிர்வஹிப்பதற்கு மூலமாகவே இங்கு *தர்மபாசேந ஸம்யத:* என்றமைந்தது.

837. ["ஸ ஜகாம வநம் வீர: ப்ரதிஜ்ஞாமநுபாலயந், பிதுர் வசந நிர்தேசாத் கைகேய்யா; ப்ரியகாரணாத்"] பெருமாள் காட்டுக்கெழுந்தருளினதற்கு இரண்டு காரணங்கள் இங்குச் சொல்லப்படுகின்றன. இரண்டும் முக்கிய காரணமென்று கருதலாகாது. முற்படச் சொன்ன *பிதுர் வசந நிர்தேசாத்* என்னுங்காரணமே ப்ரபலமானது. ஸ்ரீராம லக்ஷ்மண பரத சத்ருக்நர்களென்கிற நான்கு திருமூர்த்திகளாகத் திருவவதரித்ததற்குக் காரணமருளிச் செய்யும் நம் ஆசார்யர்கள். பெரியவர் சொல்லியவற்றைச் சிறியவர் செய்வதென்கிற ஸாமாந்ய தர்மத்தை அநுஷ்டித்தார் பெருமாள்; சேஷி விஷயத்தில் சேஷத்வமே ஸ்வரூபமென்கிற விசேஷ தர்மத்தை ஆசரித்துக் காட்டினார் இளைய பெருமாள்; அதுதன்னிலும் மிகச் சிறந்த பாரதந்திரியத்தை யநுஷ்டித்துக் காட்டினார் பரதாழ்வான்; பாகவத சேஷத்வமே பரமதர்மமென்பதை ஸ்வாநுஷ்டாந முகத்தாலே காட்டினான் சத்ருக்நாழ்வான் என்றருளிச் செய்தார்கள்.

838. பெருமாள் அநுஷ்டித்த ஸாமாந்ய தர்மத்தை மூதலிக்குமிடத்து, *பிதுர் வசநநிர்தேசாத்—விச்வாமித்ரஸ்ய சாஸநாத்—



அகஸ்த்ய வசநாத்—பரத்வாஜஸ்ய சாஸநாத்* இத்யாதி ப்ரமாணங்களைக் காட்டியருளுகிறார்கள். பெருமாள் செய்திருக்கிற காரியமெல்லாம் பெரியாருடைய நியமனத்தைச் சிரமேற்கொண்டே செய்ததாகக் காண்கிறது. முதற் காரியமான தாடகாவதத்தையெடுத்துக்கொள்வோம். பெண்கொலை பெரும்பாதகமென்று உலகம் பகரும் இஃது இராமபிரானறியமாட்டாததன்றே. அறிந்திருந்தும் இதனைச் செய்தது [விச்வாமித்ரஸய சாஸநாத்].

839. சிலர் சொல்வதுண்டு—சூர்ப்பணகைக்குச் செய்வித்த அங்கபங்கத்தைத் தாடகைக்குச் செய்திட்டு சூர்ப்பணகையை முடித்திருக்கலாமே. அவளை உயிரோடுவிட்டதனாலல்லவோ அவள் இலங்கைக் கேகி இராவணனைத் தூண்டி ஸீதாபஹரணம் முதலிய கஷ்டங்களை விளைத்தனள்; அவளுயிரையே மாய்த்திருந்தால் ஒரு வருத்தமுமில்லையே என்று. இதுவாஸ்தவமே. தாடகையை வதை செய்யுமாறு நியமிக்க அங்கு ஒரு முனிவர் இருந்தது போல, பஞ்சவடியில் சூர்ப்பணகையை வதை செய்யுமாறு நியமிக்க ஒரு முனிவர் வந்து நிற்கவில்லையே. இனி முடிவில் செல்வோம் ராவண ஸம்ஹாரமான பின்பு விபீஷணாழ்வான் பெருமாளை அங்குச் சில நாள் தங்கி இருந்து விச்ரமிக்குமாறுவேண்ட "ந மே ஸ்நாநம் பஹுமதம் வஸ்த்ராண்யாபரணாநி ச, தம் விநா கைகயீபுத்ரம் பரதம் தர்மசாரிணம்" என்று சொல்லி உடனே புஷ்பகவிமானத்திலேறி அயோத்திக்குப் புறப்பட்டார். பரதாழ்வானுடைய துடிப்பையும் மறந்து வழியிடையில் பரத்வஜாச்ரமத்திலே போஜனத்திற்கு இலையகலப் பாரித்தார். இது எதனாலென்ன [பரத்வாஜஸ்ய சாஸநாத்.] ஆக ப்ரக்ருதத்தில் "கைகேய்யா: ப்ரியகாரணாத்" என்றது அமுக்கிய ஹேதுவாய் "பிதுர் வசந நிர்தேசாத்" என்றதே ப்ரதாநமாகக் கடவது.

840. ["தம் வ்ரஜந்தம் ப்ரியோ ப்ராதா லக்ஷ்மணோநுஜகாம ஹ, ஸீதாப்யநுகதா ராமம் சசிநம் ரோஹிணீ யதா"] இங்கு பெருமாளோடுகூட இளைய பெருமாள் முன்னம் புறப்பட்டதாகவும், பிராட்டி பின்பு புறப்பட்டதாகவும் சொல்லிற்று. மேலே அயோத்யா காண்டத்தில் நிகழ்ச்சியை விரிவாகச் சொல்லுமிடத்து, முற்படப் பிராட்டியும், பிறகு இளைய பெருமாளும் உடன் வரவேண்டிக் கொண்டதாகச் சொல்லப்படுகிறது. இதில் விரோத சங்கை வேண்டா; இவ்விருவரும் பெருமாளுக்கு அநுசரர்களாயினர் என்பதே இங்கு விவக்ஷிதமாகக் கொள்க. வேறுவிதமுமுண்டு. அதை மேலே சொல்லுவோம்.

841. ["குஹமாஸாத்ய தர்மாத்மா நிஷாதாதிபதிம் ப்ரியம், குஹேந ஸஹிதோ ராமோ லக்ஷ்மணேந ச ஸீதயா"] அவாப்த ஸமஸ்த காமனான எம்பெருமான் இவ்விருள்தருமாஞாலத்திலே வந்து அவதரிக்கைக்கு ஹேதுவை ஸ்ரீகீதையில் *பரித்ராணாய ஸாதுநாமித்யாதி ச்லோகம் சொல்லி வைத்தது; அதை மேலெழப் பாராதே உட்புகுந்து ஆர அமரப் படிந்து குடைந்து மருமத்தை யுணர்ந்த ஆழ்வார்களின் திருவுள்ளத்தை யறிந்த ஆசாரியர்களில் தலைவரான கூரத்தாழ்வான், "ஆச்ரிதஜநாந் ஸமாச்லேஷ்டும்........ அவதரஸி" என்று அற்புதமாக வருளிச்செய்தார். அவனைக் காணவும் கண்டு தொழவும் தழுவவும் பேசவுமாசை கொண்டிருக்கின்ற ஸம்ஸாரிகளின் விடாயைத் தீர்ப்பது ஒரு புறமிருக்க, இவர்களோடு கலந்து பரிமாறித் தன் விடாயைத் தீர்த்துக் கொள்ளவே பகவான் இங்கு வந்து அவதரிக்கிறான் என்பது மேலெடுத்த கூரத்தாழ்வான் ஸ்ரீஸூக்தியின் கருத்து.

842. இதில் சிலருடையவோ பலருடையவோ மனம் விப்ரதிபத்தி கொண்டேயிருக்கும் அந்த விப்ரதிபத்தியைத் தீர்க்குமிடங்கள் ஸ்ரீராமாயணத்தில் பலவுண்டு; அவற்றில் தலையானது இவ்விடமென்று கொள்க. இங்கு *குஹேந ஸஹிதோ ராம* என்பதனால் பெருமாள் குஹனோடு கூடினாரென்று சொல்லிற்று. இவ்வளவுதான் இங்குச் சொல்லவேண்டுவது; ஆனால் இவ்வளவோடு நிற்கவில்லை; [லக்ஷ்மணேந ச ஸீதயா] என்றும் சொல்லிற்று. குஹனோடு கூடினவளவேயன்று; இளையபெருமாளோடுங் கூடினார். பிராட்டியோடுங் கூடினார் என்றது. பெருமாளோடுகூட இவ்விருவரும் பின்தொடர்ந்து வந்தார்கள் என்று கீழே சொல்லியாயிற்று. மீண்டுமிங்குச் சொல்வது சர்விதசர்வணமேயாகும். கவிஸார்வபௌமருடைய கவிதைக்கு இக்கொத்தை கூடாது. இங்கு நம்பிள்ளை யருளிச்செய்யும் பொருளாவது; பெருமாள் குஹனோடு சேர்ந்த பின்பே தம்பியோடும் தேவியோடும் சேர்ந்ததாகத் திருவுள்ளம் பற்றினாரென்று. இதை நிலைநாட்டும் ஸ்தலமொன்று காட்டுவோம். *குஹேந ஸஹிதோ ராம:* என்றது மஹர்ஷியின் வாக்யமேயொழியப் பெருமாளுடைய வாக்கியமன்று. பெருமாளுடைய வாக்கியமே கேளீர்.

843. மேலே ஆரண்யகாண்டத்தில் (19-40) *கதா நு அஹம் ஸமேஷ்யாமி பரதேந மஹாத்மநா, சத்ருக்நேந ச வீரேண த்வயாச ரகுநந்தந!* என்பது பெருமாளுடைய திருவாக்கு. சித்திரகூடமலைச்சாரலிலே வந்து அமுதமன்ன மென்மொழிகளைச் சொல்லி



அகங்குழையச் செய்து திரும்பிப்போன பரதாழ்வானையே நினைந்து நைந்து உள்கரைந்துருகி நின்ற பெருமாள் இளையோனை நோக்கிச் சொல்லுகிற மேற்குறித்த வார்த்தையில் "பரதனோடும் சத்ருக்நனோடும் நான் மறுபடியும் எப்போது கூடுவேன்!" என்றது யுக்தம்; இதற்கு மேல் [நான்காவது பாதத்தில்] சொல்லுவதாவது "உன்னோடும் எப்போது கூடுவேன்?" என்று. பிரிந்திருப்பவர்களோடு எப்போது கூடுவேனென்பது ஸம்பாவிதம்; கூடியேயிருப்பவனோடு எப்போது கூடுவேனென்பது ஸம்பாவிதமோ? மதி கலங்கிச் சொல்லுகிற வார்த்தை போலல்லவோ தோன்றுமிது "த்வயா ச ரகுநந்தந!" என்ற விடத்துள்ள சகாரத்தை அநுக்த ஸமுச்சாயகமாக வைத்து உன்னோடும் ஸீதா பிராட்டியோடும் எப்போது கூடுவேன்? என்பதாக வுரைத்து "பரதாழ்வானோடு கூடியிராமையாலே தன்னுடன் கூடியிருக்கின்ற ஸீதாலக்ஷ்மணர்களின் ஸாஹித்யமும் அஸத்கல்பமாகத் தோற்றுகையாலே இங்ஙனே சொல்லலாயிற்று" என்று வியாக்யானம் செய்தருளினார்கள். இதனால், அடியார்களோடு கலந்து பரிமாறிக் களிப்பதில் எம்பெருமானுக்குள்ள அவா அபரிமிதமென்பது தெரியவரும். இந்த அவாவைத் தீர்த்துக்கொள்வதற்கே அவதாரம் செய்தருள்வதாகக் கூரத்தாழ்வானருளிச் செய்ததில் அதிசயோக்தி யொன்றுமில்லை.

844. ["தே வநேந வநம் கத்வா"] இங்கு (தே) என்றும் (வநேந) என்றும் இரண்டுபதமாகப் பிரித்து இடையிடையில் க்ராமமோ நகரமோ ஏதுமின்றிக்கே அடுத்தடுத்து வநபரம்பரைகளே யிருந்தனவாகச் சொல்லுவது ஒரு பொருள். இங்ஙனன்றிக்கே (தேவநேந) என்று ஒரு முழுச் சொல்லாகக் கொண்டு, (தேவநம்) என்பதற்குப் பாதசார மென்று பொருளாகையாலே காலால் நடந்து சென்றமையைக் கூறுவதாகவும் வியாக்கியானமுள்ளது.

845. ["ரம்யமாவஸதம் க்ருத்வா ரமமாணா வநே த்ரய"] இங்கு (த்ரய:) என்றது ராமலக்ஷ்மணஸீதைகளை. 'த்ரய: ரமமாணா:' என்று மூவரும் ஆனந்தமடைந்ததாகச் சொல்லப்படுகிறவிதில் ஒரு சங்கை; பெருமாளுக்கும் பிராட்டிக்கும் பரஸ்பரஸம்ச்லேஷத்தாலே ஆனந்தமுண்டாவது ப்ராப்தம். இளைய பெருமாள் த்வாரபாலகரா யிருக்குமத்தனையே யன்றோ உள்ளது. 'ஸேவா ச்வவ்ருத்தி:" என்று இழித்துரைக்கப்பட்ட ஸேவக வ்ருத்தியிலிருக்கின்ற அவர்க்கு ஆனந்த ப்ரஸக்தி ஏது? 'த்ரய: ரமமாணா:' என்று எப்படிச் சொல்லலாமென்று கேண்மின். ஆனந்தமென்பது ஒரு வகைப்பட்டதன்று, இன்பமோ துன்பமோ அவரவர்களின் புத்தி பேதத்தாலே வெவ்வேறு பட்டிருக்கும். இருவருமான

சேர்த்தியிலே அடிமை செய்கையினுல் இளையபெருமாள் அடையும் ஆனந்தம் திவ்யதம்பதிகளின் ஆனந்தத்திற் குறைந்ததன்று. லௌகிகத்தில் ஒரு சிறிய த்ருஷ்டாந்தம் கேண்மின்.

846. சிலர் பாயஸ பக்ஷ்யாதிகளை யருந்தி யடையுமானந்தத்தைச் சிலர் சாறும் மோருமருந்தியடையக் காண்கிருேம். ஆயிரமும் பதினுயிரமும் பெற்று மஹாதனிகர்களடையுமானந்தத்தை, பத்து மிருபதும் பெற்று அகிஞ்சனனடையக் காண்கிருேம். ஆகவே அடிமை செய்ய வந்த இளையோனுக்கு என்ன ஆனந்தமென்று கேட்கலாகாது. *என்னெஞ்சினுல் நோக்கிக் காணீர்* என்ற கணக்கிலே அவரவர்களது நெஞ்சினுல் பார்த்தன்ருே ஆனந்த பேதங்களை யறியவேணும். ஆக "ரமமாணு வநே த்ரய:" என்றதில் ஒரு குறையுமில்லை. ஆனந்த தாரதம்யவாதிகளென்று சில மதஸ்தர்களுள்ளார்கள். பகவத் ராமாநுஜ தர்சனஸ்தர்களான நாம் அந்த வாதமுடையோமல்லோம். நமக்கு இந்த ச்லோகமும் ஒரு ப்ரமாணமாகும்.

847. ["ஸ காம மநவாப்யைவ ராமபாதாவுபஸ்ப்ருசந், நந்திக் ராமே அகரோத் ராஜ்யம் ராமாகமநகாங்க்ஷயா"] பரதாழ்வான் தன்னுடைய மனோரதம் நிறைவேறப் பெருமலே திரும்பிவிட்டதாக இதில் தெரிவிக்கப்படுகிறது. மேலே அயோத்தியா காண்டத்திலே (113-1) *ஆருரோஹ ரதம் ஹ்ருஷ்ட: சத்ருக்நேந ஸமந்வித:* என்று ஸந்துஷ்டனுய்த் திரும்பியதாகச் சொல்லப்படுகிறது. மனோரதம் நிறைவேறப் பெருதவனுக்கு ஸந்தோஷம் எப்படி உண்டாகுமென்று சங்கிக்க நேரிடும். மனோரதம் நிறைவேறப் பெருததும் உண்மை; ஸந்தோஷ முண்டானதும் உண்மை. எங்ஙனே யென்னில்; பெருமாளை மீட்டுத் திருவயோத்தியிலெழுந்தருளப் பண்ணித் திருவபிஷேகம் செய்விக்க வேணுமென்கிற மநோரதமும் நிறைவேறவில்லை; இளைய பெருமாளைப் போலே தானும் அநுசரகிங்கரனுய்ச் செல்ல வேணுமென்கிற மனோரதமும் நிறைவேறவில்லை. ஆக (ஸ காம மநவாப்யைவ) என்றது பொருந்திற்று. இனி "ஆருரோஹ ரதம் ஹ்ருஷ்ட:" என்னும்படியான ஹர்ஷம் எங்ஙனே யென்னில்; இளைய பெருமாளிடத்தில் சேஷத்வம் மட்டுமிருந்ததேயொழிய அதிலுங் காட்டில் மிகச் சிறந்ததான பாரதந்திரியம் இருந்ததில்லை. அயோத்தியிலேயே யிருந்து தாய் தந்தையர்க்கு சுச்ரூஷை செய்து கொண்டிருக்கும்படி பன்முறையும் நியமித்தும் அதற்கிணங்கவில்லையென்பது ஸுப்ரஸித்தம், அடிமை செய்ய வேணுமென்கிற ஆசை மட்டுமிருந்ததே யொழிய சேஷி



யுகந்த அடிமையே செய்ய வேணுமென்கிற ஸ்வரூபஜ்ஞான பூர்த்தி இளையோனிடம் அமையவில்லை.

848. "சேஷத்வபோக்த்ருத்வங்கள் போலன்றே பாரதந்த்ர்ய போக்யதைகள்" என்கிற ஆசார்ய ஹ்ருதய சூர்ணையினுல் பாரதந்திரியத்தின் சிறப்பு உணரத்தக்கது. திருப்பாணுழ்வார்க்கு முநிவாஹநரென்று திருநாமம். லோகஸாரங்க மஹாமுனிகள் தம் தோளின் மீது ஏறி யுட்காரவேணுமென்று பாண்பெருமாளைப் பிரார்த்தித்தபோது அவர் அதற்கு இசையலாமோ? அவரோ உத்தமாச்ரமி; இவரோ நைச்யம் பாவிக்க வேண்டாதே இயற்கையான நைச்யமுடையவர். இப்படிப்பட்டவர் இருய்த்து ஓட வேண்டியிருக்க அவர் திருத்தோளிலே ஏறி வீற்றிருந்தது அசித்தோடொக்கும் பாரதந்திரியத்தை யநுஸந்தித்ததனுலன்ருே. இதனை அவ்வாழ்வார் தாமே "அடியார்க்கென்னையாட்படுத்த விமலன்" என்று பாசுரத்தின் முகப்பிலும் பொறித்து வைத்தாரன்ருே. பரதாழ்வான் பாரதந்த்ரியஸித்தியைப் பெருப்பேருகக் கொண்டு ஹ்ருஷ்டராணுரென்பது மிகப் பொருத்தம்.

849. தமக்கு ராஜ்யாதிபத்யம் கிடைத்துவிட்டதனுல் ஹ்ருஷ்டராணுரென்று சிலர் பொருள்கூறுவது பரதாழ்வான் படிக்குச் சிறிதும் ஏலாதது. "அரசமர்ந்தானடி சூடு மரசையல்லால் அரசாக வெண்ணேன் மற்றரசு தானே" என்ற குலசேகராழ்வார் அருளிச்செயலின்படி ஸ்வரூபாநு ரூபமான ராஜ்யம் கிடைத்தது பற்றி ஹ்ருஷ்டராணுரென்கை மிகவும் உசிதம்.

850. ["ப்ரவிச்ய து மஹாரண்யம் ராமோ ராஜீவலோசந:, விராதம் ராக்ஷஸம் ஹத்வா சரபங்கம் ததர்ச ஹ."] பெருமாள் சித்திரகூடத்திலிருந்து புறப்பட்டுத் தண்டகாரணியம் புகுந்தாரென்று கீழே சொல்லிற்று. இங்கே "ப்ரவிச்ய ஸ மஹாரண்யம்" என்று சொல்லலாம். து என்பதைப் பிரயோகித்தது சாஸ்த்ரரீதியிலே அர்த்த புஷ்கலம்; முன்னிருந்த விருப்பில் வ்யாவ்ருத்தியைக் காட்டும் துகாரம். அந்த வ்யாவ்ருத்தியை (ராஜீவலோசந:) என்கிற விசேஷண பதம் மிகவும் விசதமாக்குகின்றது. 'ராஜீவலோசந.' என்று இராமபிரானுக்கு விசேஷணமிடுவது ஸ்ரீராமாயணத்தில் பலவிடங்களிலும் காணப்படும். இது ஸ்வபாவோக்தியென்று கருதலாகாது. ஒவ்வோரிடத்தில் ஒவ்வொரு விதமான கருத்தைத் தந்து இன்சுவை பயக்கும்.

851. மேலே (20-2) "ஊநஷோடசவர்ஷோ மே ராமோ ராஜீவலோசந:" என்ற விடத்திலே அற்புதமான கருத்தைக் கொண்

டது இச்சொல். நிசாசரர்களை யழித்து வேள்வியைக் காக்க இராமனைத் தம்மோடு அனுப்பவேணுமென்று வேண்டிக்கொண்ட விச்வாமித்ர முனிவர்க்குத் தயரதன் விடைகூறுமிந்த சுலோகத்தில் [ராஜீவலோசந:] என்றது—முனிவரே! உம்முடைய வேள்விக்கு இடையூறு செய்யும் அரக்கர்களோ நிசாசரர்கள்—இரவிலே வந்து நலிபவர்கள்; என்னுடைய ராமனோ அஸ்தமித்தவாறே கண்ணுறங்குபவன்; இவன் கண்விழித்திருந்து அந்த நிசாசரர்களோடு எப்படி போர்புரியமுடியும்? என்னுங் கருத்துக்கொண்டது. ராஜீவமாவது தாமரை; அது ஸூர்யன் அஸ்தமித்தவாறே எப்படி மூடிக்கொள்ளுமோ அப்படி கண்மூடுமிளமையுடையவன் ராமன் என்று காட்டினபடி.

852. "ப்ரவிச்ய து மஹாரண்யம் ராமோ ராஜீவலோசந:" என்கிற ப்ரக்ருத ஸ்தலத்திலோ வென்னில், இப்போது இருபத்தைந்தாம் பிராயத்திலே யிருக்கிற ராகவனுக்கு அப்பொருள் சொல்லவொண்ணாது. பின்னையோவென்னில், அயோத்யாகாண்டத்தில் வனவாஸக்கட்டளை விளைந்த பின்பு இளையோனை நோக்கிப் பெருமாள் சொல்லுகையில் (22-29). "மா ச லக்ஷ்மண! ஸந்தாபம் கார்ஷீர் லக்ஷ்ம்யா விபர்யயே, ராஜ்யம் வா வநவாஸோ வா வநவாஸோ மஹோதய:" என்றார். இளையா! ராஜ்யலக்ஷ்மியை இழக்க நேர்ந்துவிட்டதே யென்று வருத்தங்கொள்ளாதே; ராஜ்யம் கிடைத்தாலென்ன? வனவாஸம் கிடைத்தாலென்ன? இரண்டும் நமக்குத் துல்யந்தான் என்று முதலில் சொல்லிவிட்டு, உடனே சிறிது விமர்சித்துப் பார்க்கில் இரண்டையும் துல்யமாக நினைக்கவே தகாது, வனவாஸம் நமக்குப் பெரும் பேறுகாண் என்றார். அது மனமாரச் சொன்னதாயிருக்குமோ? அல்லது மேலெழச் சொன்னதாயிருக்குமோ வென்கிற சங்கைக்கு இடமறும்படி மஹாரண்ய ப்ரவேசம் ப்ராப்தமானபோதே உள்ளே பொங்குகிற ஹர்ஷம் கண்ணிலே தொடைகொள்ளலாம்படியானாரென்கிறது ராஜீவலோசந: என்பது. மஹர்ஷிகளின் பாதஸேவையும் அவர்களின் விரோதி நிரஸநமுமாகிற மஹாபாக்யம் ப்ராப்தமாகிறதே யென்று திருக்கண்கள் மலர்ந்தபடி.

853. [விராதம் ராக்ஷஸம் ஹத்வா சரபங்கம் ததர்ச ஹ] இது "பாணிபாதம் ப்ரக்ஷாள்ய ஆசம்ய" போலே அமைந்தது. ஆசமனத்திற்குப் பாணிபாத ப்ரக்ஷாளனம் அங்கமானாப்போலே சரபங்க மஹர்ஷி தர்சனத்திற்கு விராதஹநநம் அங்காநுஷ்டானம் போலும். "ரிக்தஹஸ்தஸ்து நோபேயாத் ராஜாநம் தைவதம் குரும்" ஆகையாலே சரபங்க மஹர்ஷியைக் காண விராதப்ரேதத்தைக் காணிக்கையாகக் கொண்டார்போலும்.



854. ["வஸதஸ் தஸ்ய ராமஸ்ய வநே வநசரைஸ் ஸஹ, ருஷயோப்யாகமந் ஸர்வே வதாயாஸுர ரக்ஷஸாம், ப்ரதிஜ்ஞாதச் ச ராமேண வதஸ் ஸம்யதி ரக்ஷஸாம்".] பெருமாள் தண்டகாரணியத்திலெழுந்தருளியிருக்கும்போது மஹர்ஷிகள் வந்து ராக்ஷஸர்களை வதம் செய்யவேணுமென்று சரணாகதி செய்ததாகவும், பெருமாள் அப்படியே வதம் செய்வதாக ப்ரதிஜ்ஞை பண்ணினதாகவும் இங்குச் சொல்லப்படுகிறது. ஏற்கெனவே திருவவதாரத்திற்கு முன்பு தேவதைகள் ராவணனை வதம் செய்ய வேண்டிக் கொண்டதாக *ஸ ஹி தேவைருதீர்ணஸ்ய ராவணஸ்ய வதார்த்திபி:, அர்த்திதோ மாநுஷே லோகே ஜஜ்ஞே விஷ்ணுஸ் ஸநாதந:* (அயோ 1-7) என்கிறசுலோகம் காட்டுகின்றது. தேவர்களோ மஹர்ஷிகளோ தங்களைக் காப்பாற்றும்படி பிரார்த்திப்பது யுக்தமேயல்லது பிறரை வதம்செய்யவேணுமென்று இதையும் வாய்விட்டுப் பிரார்த்திக்கலாமா? பிறரால் தங்களுக்கு நலிவு ஏற்படாதபடி செய்தருளப் பிரார்த்திப்பதன்றோ அழகியது. மேல் ஆரண்ய காண்டத்தில் "தே வயம் பவதா ரக்ஷ்யா:" என்றும், *ரக்ஷிதவ்யாஸ் த்வயா சச்வத் கர்ப்பபூதாஸ் தபோதநா:* என்றும் கோரினாப்போலே பிறருடைய வதத்தை ப்ரஸ்தாவியாமல் தங்களுடைய ரக்ஷணத்தை மட்டும் ப்ரார்த்தித்தால் போராதா? பெருமாளும் அப்படியே உங்களை ரக்ஷிக்கிறேனென்று வாக்தானம் செய்தால் போதுமே-*ப்ரதிஜ்ஞாதச்ச ராமேண வதஸ் ஸம்யதி ரக்ஷஸாம்* என்னும்படி வதஞ் செய்து விடுகிறேனென்று சொல்லியிருக்க வேண்டாவே. பிறரை வதஞ் செய்யாமல் தேவர்களையும் மஹர்ஷிகளையும் ரக்ஷிக்கத் திருவுள்ளம் பற்றினால் ஸர்வசக்தனான பகவானுக்கு இது ஆகாத காரியமன்றே. என்றிங்ஙனே சிலர் கேள்விகள் கேட்பதுண்டு.

855. *தேவாநாம் தாநவாநாஞ்ச ஸாமாந்யம் அதிதைவதம்* என்றும் *ஸுஹ்ருதம் ஸர்வபூதாநாம்* என்றும் *ஸமோஹம் ஸர்வபூதேஷு* என்றும் ப்ரஸித்தி பெற்றிருக்கிற பகவான் வதம் செய்துவிடுவதாக ப்ரதிஜ்ஞை பண்ணுவதன் கருத்து யாதெனில், ஆர்த்தனையும் பார்த்து வதமேசெய்யவேண்டிவந்தால் செய்வதாகச் சொன்ன வத்தனை; தேவர்களும் ரிஷிகளும் வதப்ரார்த்தனை பண்ணினது அரக்கர்களால் தங்களுக்கு நேர்ந்த பொறுக்க வொண்ணாத துன்பமிகுதியைக் காட்டி நிற்குமத்தனை. "ஹந்யாமஹமிமாம் பாபாம் கைகேயீம் துஷ்ட சாரிணீம்" என்று பரதாழ்வான் தாயை வதம் செய்து விடுவதாகச் சொன்னது தன்னுடைய அஸஹ்ய வேதனையைக் காட்டுமத்தனை யொழிய வேறில்லையே.

856. (அயோ 96-24). "பரதோ வத்ய ஏவ மே.....பரதஸ்ய வதே தோஷம் நாஹம் பச்யாமி ராகவ." என்று சித்ரகூடத்தில் பெருமாளை நோக்கி இளைய பெருமாள் சீறிச் சொன்னதும் இந்த ரீதியில் தானே பொருளைத் தந்து நிற்கும். *ஹநிஷ்யாமி ஸபாந்தவம்* என்று ஸுக்ரீவ மஹாராஜர்க்குப் பெருமாள் சொல்லி யனுப்பினதும் இக்கருத்தில்தானே. *வத்யதாமேஷ தீவ்ரேண தண்டேந ஸசிவைஸ் ஸஹ* என்று சரணாகதனான விபீஷணாழ்வான் விஷயத்திலே ஸுக்ரீவ மஹாராஜர் சொன்னதும் ஸம்ரம்பாதிசயத்தைக் காட்டுவதில் மட்டுமேயன்றோ விச்ராந்தம். *மயைவைதே நிஹதா: பூர்வமேவ* என்று கீதாசார்யன் சொன்னதும் இங்கு நினைக்கத் தக்கது.

857. ["ஸ சாஸ்ய கதயாமாஸ சபரீம் தர்மசாரிணீம், ச்ரமணீம் தர்மநிபுணாமபிகச்சேதி ராகவம்"]. தநுகபந்தனுடைய வார்த்தையானவிதில் சபரியை தர்மசாரிணி யென்றும் தர்மநிபுணா என்றும் விசேஷித்திருக்கிறது. இங்கு விவக்ஷிதமான தர்மம் எதுவென்று பார்க்குமளவில் ஆசார்ய சுச்ரூஷை, ஆசார்யாபிமானம் எனப்படும் உத்தமோத்தம தருமமே யென்று தெரியவருகிறது. மேலே ஆரண்யகாண்ட முடிவில் பெருமாள் சபரியின் ஆச்ரமத்தில் புகுந்து வினவுகையில் "கச்சித் தே குருசுச்ரூஷா ஸபலா சாருபாஷிணி!" என்கிறார். இங்கு சாருபாஷிணி என்கிற ஸம்போதனம் அவளுடைய பேச்சினினிமையில் பெருமாள் மிகமிக ஈடுபட்டதைக் காட்டும். அந்த பேச்சிலினிமையைக் கொண்டே அவள் ஆசார்ய சுச்ரூஷையில் பழுத்தவள் என்பதையும் பெருமாள் தெரிந்துகொண்டார்.

858. அவள் விடை கூறுமிடத்தும் *சக்ஷுஷா தவ ஸௌம்யேந பூதாஸ்மி ரகுநந்தந, பாதமூலம் கமிஷ்யாமி யாநஹம் பர்யசாரிஷம்" என்று, தான் ஆசார்யபாத ஸேவை பண்ணியிருந்ததைச் சொல்லியிருக்கையாலும் சபரி ஆசரித்த தருமம் இதுவே யென்னத் தட்டில்லை.

859. [ப்ராஸங்கிகமான ஒரு ஸந்தோஷ ஸூசனம் கேண்மின். மேலெடுத்துக் காட்டிய *சக்ஷுஷா தவ ஸௌம்யேநேத்யாதி ச்லோகத்தின் உத்தரார்த்தம் "கமிஷ்யாம் யக்ஷயாந் லோகாந் த்வத்ப்ரஸாதாத் அரிந்தம!" என்று மாறியிருக்கிறது. பலபதிப்புகளிலும் இதுவே பாடமாகக் காண்கிறது. கோவிந்தராஜரும் மாறின பாடத்தையே வியாக்கியானித்திருக்கிறார் என்பதுகண்டு வருந்தியிருந்தோம். அந்த கோவிந்தராஜரும் "தர்ம சாரிணீம்" என்கிற ப்ரக்ருதஸ்தலத்தில் "பாதமூலம் கமிஷ்யாமி யாநஹம் பர்யசாரிஷம்



இதி வக்ஷ்யமாணத்வாத்" என்றெழுதியிருப்பதால் இப்பாடம் அவர்க்கும் கிடைத்ததுதானென்று பரமஸந்தோஷமடைந்தோம்.]

860. [ஸோப்யகச்சந் மஹாதேஜாச் சபரீம் சத்ருஸூதந: சபர்யா பூஜிதஸ் ஸம்யக் ராமோ தசரதாத்மஜ:] ["ஸ: சபரீம் அப்யகச்சத்"] சபரியைப்பற்றி முன்னம் தெரிவித்த தநுகபந்தனுடைய வாக்கில் 'அபிகச்ச' என்று வந்திருப்பதும், இங்கு 'அப்யகச்சத்' என்று ருஷிவாக்கில் வந்திருப்பதும் உற்று நோக்கத்தக்கவை. "ச்ரமணீம் தர்மநிபுணாம் அவேக்ஷஸ்வ" என்றோ 'கடாக்ஷய, என்றோ கபந்தன் சொல்லியிருக்கலாம். இங்கும் 'ஸ ப்ராப சபரீம் ராம:' என்றோ 'ஸ சபர்யாச்ரமம் ப்ராப' என்றோ சொல்லியிருக்கலாம்; இங்ஙனன்றிக்கே 'அபிகச்ச' என்று அவன் சொன்னதும், 'அப்யகச்சத்' என்று ருஷி சொல்லுவதும் ஸாமான்யமானதன்று. ஒரு தேவதாவிசேஷத்தில் செய்யும் வழிபாடுதன்னையே அபிகமனம் என்று சொல்லுவது முறை. அந்தரங்க ப்ரதிபத்தி யோடு செய்யும் அணுகுதல் அபிகமன மெனப்படும். அத்தகையதான வழிபாட்டுக்குரிய விலக்ஷண வ்யக்திவிசேஷம் சபரியென்பவள் என்று விளங்குகிறது.

இங்கு (மஹாதேஜா:) என்றும்.(சத்ருஸூதந:) என்றும் பெருமாளுக்கு இரண்டு விசேஷணங்களிட்டது பாத பூரணார்த்தமன்று. ஸாபிப்ராயம். சபரியின் ஆச்ரமத்தருகு எழுந்தருளும்போதே பெருமாளுடைய திருமுக மண்டலம் மிகவும் தேஜஸ்வியாயிற்றென்கிறது மஹாதேஜா: என்பதனால். சரமபர்வ நிஷ்டையைக் காணப்பெறுகிறோமென்கிற மகிழ்ச்சி முகத்திலே தெரியலாயிருந்தது. ப்ரதமபர்வநிஷ்டர்களான பகவத்பக்தர்களைக் காண்பது அரிதன்று; சரமபர்வநிஷ்டர்களெனப்படுகிற ஆசார்ய சுச்ரூஷா நிரதர்களையும் ஆசார்யாபிமானபாத்ர பூதர்களையும் காண்பது பெருந்தவப் பயனென்பர். இதற்கு மேல் (சத்ருஸூதந:) என்றது, அந்த சபரிக்கு ப்ராப்திப்ரதிபந்தகங்களாய்ச் சில விரோதிகளிருந்தனவாக அவளுடைய வாக்கில் நின்றுமே தெரியவருவதனால், அந்த விரோதி நிரஸநத்தைத் தம்முடைய கடாக்ஷவீக்ஷணத்தினால் செய்தருள்வதாக ஸங்கல்பித்தார் பெருமாள் என்று தெரிவிக்கின்றது.

861. இதற்குமேல் 'சபர்யா பூஜிதஸ் ஸம்யக் ராம:' என்றதைப் பற்றிச் சில ஆராய்ச்சிகள் செய்யப்ராப்தமாகிறது. ஸ்ரீ ராமாயணத்திலும் கம்ப ராமாயணத்திலும் பெருமாள் சபரியிடம் கலந்துபரிமாறினவரலாறு விசேஷித்து ஸ்பஷ்டமாகக் கூறப்படவில்லையாயினும், இதரராமாயணங்களிலுள்ளதைக் கொண்டோ, இவ்விடத்தில் "சபர்யா ஸம்யக் பூஜித:" என்றிருப்பதை ஆழ்ந்து

நோக்கியோ நம் ஆசார்யர்கள் அருளிச்செய்த விசேஷம் யாதெனில்; ஸ்ரீவசன பூஷணத்தில் (233) "பெருமாள் ஸ்ரீசபரி கையாலே அமுது செய்தருளினார்" என்றவிடத்து வியாக்கியானத்தில் மணவாள மாமுனிகள்-"ரகு குல திலகராய் ஆசாரப்ரதானரான பெருமாள் 'சபர்யா பூஜிதஸ் ஸம்யக் ராமோ தசரதாத்மஜ:' என்னும்படி வேடுவிச்சியாய்வைத்தே குருசுச்ரூஷையிலே பழுத்து ஜ்ஞாநாதிகையாய்த் தன் நாவுக்கு இனிதாயிருந்த பலமூலாதிகளெல்லாம் இங்குத்தைக்கென்று ஸஞ்சயித்துக் கொண்டு வரவு பார்த்திருந்த ஸ்ரீசபரி, தன் ஆதராநுகுணமாகத் தன் கையாலே அமுது செய்யப்பண்ண அதிஸந்துஷ்டராய் அமுது செய்தார்" என்றருளிச் செய்துள்ள ஸ்ரீ ஸூக்திகள் விசேஷித்து அனுஸந்திக்கத் தக்கவை.

862. இதில் "தன் நாவுக்கு இனிதாயிருந்த" என்கிற வார்த்தையை மாமுனிகள் மூலப்ரமாணமொன்றின்றி யருளிச்செய்யார். "பூர்வே பூர்வேப்யோ வச ஏததூசு:" என்று வேதமோதின ப்ரபலப்ரமாணம் இருந்தே தீரும். இதை யனுசரித்தே கோவிந்தராஜார்யரும் "ராமஸ் ஸமாகமிஷ்யதீதி ஸ்வாதூநி பலமூலாநி ஆஸ்வாத்யாஸ்வாத்ய பரீக்ஷ்ய நிக்ஷிப்தவதீ இதி ப்ரஸித்தி:" என்றெழுதி வைத்துள்ளார். இப்பொருளெல்லாம் (ஸம்யக்) என்பதில் அடங்கியேயுள்ளது. இமே சரபங்க முனிவர் அகஸ்த்ய முனிவர் முதலானோர் செய்தது ஸாமாந்ய பூஜை; இதுவே பெருமாள்திருவுள்ளத்தால் ஸம்யக் பூஜை என்னலாம்படியுள்ளது.

863. வேதாந்தவாசிரியர் தயாசதகத்திலே "நிஷாதாநாம் நேதா கபிகுலபதி; காபி சபரீ." என்று ஸ்ரீ ராமாவதாரத்தில் விசேஷாநுக்ரஹபாத்ரபூத வ்யக்திகள் மூவரை யெடுக்கின்றவர் குஹப் பெருமாளையும் சபரியையும் எடுத்திருக்கின்றார். இவ்விருவர்க்குமுள்ள வாசியைச் சிறிது ஆராய்வோம். சபரியிடத்தில் பெருமாள் இவ்வளவு கலந்து பரிமாறக் காரணமென்ன? என்று ஆலோசிக்கும்போது குஹனிடத்தில் பெருமாள் நடந்துகொண்ட விதமும் ஆலோசிக்கப்படவேண்டும்.

864. குஹன் சில உணவுப் பொருள்களைக் கொணர்ந்து கொடுத்து இவற்றைத் திருவுள்ளம் பற்றியருள வேண்டுமென்று வேண்ட, அதற்குப் பெருமாள் கூறின மறுமொழி (அயோ. 50) "யத் த்விதம் பவதா கிஞ்சித் ப்ரீத்யா ஸமுபகல்பிதம், ஸர்வம் தத் அநுஜாநாமி ந ஹி வர்த்தே ப்ரதிக்ரஹே. அச்வாநாம் காதநே நாஹமர்த்தீ நாந்யேந கேநசித். ஏதாவ்தாத்ர பவதா பவிஷ்யாமி ஸுபூஜித:" என்பது. நான் இந்த வனவாஸத்தில் யாரிடத்திலும் ஏதும் பெற்றுக்கொள்வதில்லையென்று விரதம் கொண்டிருக்கிறேன்; நான் எந்த ரதத்தில் வந்தேனோ அந்த ரதம் இன்னும் அயோத்திக்குத் திரும்பிப் போகாமையினாலே தேர்க்குதிரைகள் விடாய்த்திருக்கின்றன; அவற்றுக்கு வேண்டிய உணவுகளையே நான் விரும்புபவன் என்று சொல்லி அவற்றைத் தாம் கைப்பற்றாமலேயிருந்துவிட்டார் பெருமாள். இங்குப் பெருமாள் "ந ஹி வர்த்தே ப்ரதிக்ரஹே" [நான் தானம் வாங்கக்கூடாதென்று விரதம் வைத்துக்கொண்டிருக்கிறேன்.] என்றது அவசியம் சொல்லியாக வேண்டிய வார்த்தையோ? குஹன் மதுபர்க்கம் முதலிய சிலவுணவுப்பொருள்களைக் கொணர்ந்து கொடுக்கவந்தானேயல்லது தன தான்ய வஸ்த்ராதிகள் எதுவும் கொடுக்க வந்திலன்; அவற்றைக் கொடுக்கவந்தால் அப்போது நான் ப்ரதிக்ரஹம் பண்ணுவதில்லையென்று சொல்லி மறுக்க நியாயமுண்டு. தேன் முதலிய காட்டுணவுப் பொருள்களையே கொடுக்கவந்தபோது "ந ஹி வர்த்தே ப்ரதிக்ரஹே" என்று சொல்லி மறுத்ததானது அவசியம் ஆராயத்தக்கதன்றோ?



865 குஹனிடம் இப்படிச் சொன்ன விவரே சபரியிடம் மறுத்துக் கூறாமல் "அர்ச்சிதோஸ்மி த்வயா" என்று சொல்லி அவளுடைய ஸமர்ப்பணையை உகந்து ஏற்றுக்கொண்டார். இமே நாமெடுத்துக் காட்டியுள்ள ஸ்ரீவசன பூஷண வியாக்கியான ஸ்ரீஸூக்தியில் "குரு சுச்ரூஷையிலே பழுத்து ஜ்ஞாநாதிகையாய்" என்று மாமுனிகள் மருமமாக வருளிச் செய்திருப்பது உயிரான வார்த்தை. சபரியிடம் மிகச் சிறந்ததொரு தருமம் குருசுச்ரூஷையென்பதிருந்தது. இதைக் கபந்தன் பெருமாளுக்குத் தெரிவித்துனன். "ச்ரமணீ சபரீ நாம காகுத்ஸ்த சிரஜீவிநீ, த்வாம் து தர்மே ஸ்திதா நித்யம்" என்றும், "ச்ரமணீம் தர்மநிபுணாம் அபிகச்ச" என்றுமுள்ள கபந்தனது வார்த்தைகளில் தர்ம சப்தத்தினால் விவக்ஷிதம் குரு சுச்ரூஷையேயாகும்.

866 பெருமாளும் சபரியைக் கண்டவுடனே க்ஷேமம் வினவுகையில் "கச்சித் தே குருசுச்ரூஷா ஸபலா சாருபாஷிணி" என்று உன்னுடைய குருசுச்ரூஷை நிறைவேறியதா? என்று கேட்டிருக்கிறார். அவளும் தான் செய்த குருசுச்ரூஷையைப் பற்றி ஆனந்தமாக விடை கூறியிருக்கிறாள்; 'இங்கு என்னுடைய பணிவிடையைக் கொண்ட ஆசாரியர்கள் திருநாடுசென்றிருக்கிறார்கள்; அவர்களின் திருவடிவாரம் சென்றுசேர எனக்குஅனுமதி தந்தருளவேணும் என்றும் கோரியிருக்கிறாள். இத்தகைய தருமம் குஹனிடத்தில் இல்லாமை பற்றியே அவன் தந்த வுணவுகளைத் திருவுள்ளம் பற்றவில்லை என்பர் பேராசிரியர்கள்.

867 ஆர்ஜவமே வடிவெடுத்த பெருமாள் குஹனிடத்தில் "ந ஹி வர்த்தே ப்ரதிக்ரஹே" என்று சொன்னது கபடந்தானே, இது கூடுமோ? என்கிற சங்கையொன்று சேஷித்து நிற்கிறது. கேண்மின்; இந்த வார்த்தைக்கு 'நான் யாரிடத்திலும் எதுவும் பெற்றுக்கொள்ளமாட்டேன்' என்றே பொருள் படவேணுமென் கிற நிர்ப்பந்தமில்லை; 'உன்னிடத்தில் வாங்கிக்கொள்ள எனக்கு விருப்பமில்லை' என்று சொல்லுவதாகவும் பொருள்படும். அப்படி விருப்பமில்லாமைக்குக் காரணம் கீழே நாம் விவரித்ததே.

868 வேதாந்தவாசிரியர் ஸங்கல்ப ஸூர்யோதயத்தில் ஆறுவது அங்கத்தில், விவேகன் ஆனந்தமாகப் பாடுவதாய் வைத்து அற்புதமான வொரு சுலோக மியற்றியுள்ளார்; '.பகவதி பரத்வாஜே புக்திஸ் ததா சபரீகரே" என்பது அதன் முதற்பாதம். "ஜயதி லலிதோத்துங்கா வ்ருத்திர் தசாஸ்யரிபோரிதி" என்பது கடைப்பாதம்; பெருமாளுடைய நடவடிக்கைகளை விமர்சித்துப் பார்த்தால் ஏற்றமான சரிதை ஒரு புறம், அதற்குப் பிரதி கோடியான தாழ்வான சரிதை மற்றொருபுறம் காணநின்றதே! என்கிறார். விச்வாமித்ர முனிவர் பக்கலிலே பணிந்து நின்றாரென்று ஒருபுறம். குரக்கரசனான ஸுக்ரீவனிடத்திலே பணிந்துநின்றாரென்று மற்றொரு புறம். பரசுராமனுடைய தவத்தைச் சிதைத்தாரென்று ஒருபுறம்; ஒரு க்ஷுத்ரஜந்துவான காக்கையின் கண்ணைச் சிதைத் தாரென்று மற்றொரு புறம். மஹர்ஷியான பரத்வாஜருடைய ஆச்ரமத்திலே அமுதுசெய்தாரென்று ஒரு புறம். சபரி கையாலே அமுது செய்தாரென்று மற்றொரு புறம். ஹாஹா! இவையென்ன சேராச் சேர்த்திகள்! என வியந்து கூறுகிறபடி. இத்தால் சபரி கையாலே அமுது செய்தருளினது பரத்வாஜாச்ர மத்திலமுது செய்ததோடொக்க மதிக்கத்தக்கதென்று காட்டினபடி.

869 [பம்பாதீரே ஹநுமதா ஸங்கதோ வாநரேண ஹ] பிராட்டியைப் பறிகொடுத்துப் பெரிய வுடையாரையும் ஸம்ஸ்கரித்து "ராஜ்யாத் ப்ரம்சோ வநே வாஸோ நஷ்டா ஸீதா ஹதோ த்விஜ:, ஈத்ருசியம் மமாலக்ஷ்மீர் நிர்தஹேதபி பாவகம்." என்று பரிதபித்துக்கொண்டே பம்பைக் கரையேறப் போந்த பெருமாள் அந்த பம்பாஸரஸ்ஸின் ஸந்நிவேசங்களைக் கண்டு பொறுக்கொணாத் துயரத்தில் ஆழ்ந்திருந்தார். இந்நிலைமையில் இவர் தேறுவதெங்ஙனேயோ? என்று அனைவரும் வயிறு பிடிக்க வேண்டியிருந்தது. அப்போது விதிவசமாக மாருதாத்மஜரான திருவடி அங்கு நேர்பட்டார் என்று சொல்லுகிற மஹர்ஷி 'ஹநுமதா ஸங்கதோ வாநரேண ஸ:" என்று சொல்லாமல் (வாந



ரேண ஹ) என்றார். (ஹ) என்றது ஸந்தோஷக்குறி. தைவாதீனமாகப் பெருமாளுடைய உயிர்-பிழைத்தது! என்று ஸந்தோஷம் பொங்கிச் சொல்லுகிறவார்த்தை. "காட்டிலே வழிபறியுண்டவர் தாய் முகத்திலே விழிக்குமாபோலே" என்பது ஆசாரியர்களின் அருளிச்செயல்.

870. அதாவது, ஒருவன் காட்டிலே வழிபோகும்போது கள்ளர்கையி லகப்பட்டு ஸர்வஸ்வத்தையும் பறிகொடுத்துவிட்டு வருந்தாநிற்கையில் தாய்வந்துமுகங்காட்டினால் ஆச்வஸிக்க நேருமாபோலே வழிபறியுண்ட பெருமாள் ஆச்வஸிக்கப் பாங்காகத் திருவடி வந்து முகங்காட்டினாரென்கை. மேலுதாஹரித்த ஆசார்ய ஸ்ரீ ஸூக்தியை வடமொழியில் மொழி பெயர்த்த கோவிந்தராஜார்யர் "சோரை: வநே அபஹ்ருதஸர்வஸ்வஸ்ய ஸ்வஜநநீமுகாவலோகநவத் அதீவ ஆச்வாஸநமிதி முநேர் ஹர்ஷ:" என்றெழுதியிருந்தார். (ஸ்வஜநநீமுக) என்பது (ஸ்வஜநமுக) என்று அச்சில் விழுந்திருக்கின்றது. இந்தமாறுபாட்டில் பொருள் சிதையவில்லையென்று நினைக்கலாமானாலும் (ஸ்வஜநநீமுக) என்றே ஆசிரியர்எழுதினதென்று தத்துவமுணரவேணும்.

871. [ஹநுமத் வசநாச் சைவ ஸுக்ரீவேண ஸமாகத:, ஸுக்ரீவாய ச தத் ஸர்வம் சம்ஸத் ராமோ மஹாபல:] அடுத்த சுலோகத்தில் பெருமாளுக்கும் ஸுக்ரீவ மஹாராஜர்க்கும் அக்நிஸாக்ஷிகமாக நட்பு நடந்தமை கூறப்படுகிறது. பெருமாள் ஸுக்ரீவனைசரணாகதி செய்ததாகவும் சொல்லப்படுகிறது. இதைக் கொண்டு சிலர் பெருமாள் பக்கலிலே குறை நினைப்பதுண்டு. ஸுக்ரீவனோடு ஸக்ய்யம் செய்து வாலியை வதைத்தாரே, அது அவ்வளவு பொருத்தமான கார்யமன்று; ராவண ஸம்ஹாரத்திற்குத் துணை தேடுகிற பெருமாள் அந்த ராவணனை வாலில் சுழற்றியுதறின மஹாவீரனான வாலியைத் துணைகொண்டு அநாயாஸமாக ஸமீஹிதம்பெறலாமாயிருக்க, துர்ப்பலனான ஸுக்ரீவனைத் துணைகொண்டது உசிதவேதியின் செயலாக இல்லையே யென்று சங்கிக்க வேண்டாதபடி இங்கு "சம்ஸத் ராமோ மஹாபல:" என்றது. சம்ஸத்—அசம்ஸத் என்றபடி. லங்ரூபம்; ஆர்ஷப்ரயோகம்.

872. [மஹாபல:] பெருமாள் ராவணஸம்ஹாரத்தைத் திருவுள்ளத்தில் நினைத்தவரேயல்லர். அது செய்ய வேண்டினாலும் இதர அநபேக்ஷமானமிடுக்கில் குறையற்றவர். சரித்திரங்களைப் பார்க்கும்போது, இராவணன் ஆயிரந்தோள்வீரனானகார்த்தவீரியனிடத்தில் பங்கப்பட்டவன். அந்த கார்த்தவீரியனை *கோக்குல மன்னரை மூவெழுகால் ஒருகூர்மழுவால்போக்கிய தேவனான பரசு

ராமனிடத்தில் பங்கப்பட்டவன். அந்தப்பரசுராமனே *என்வில் வலிகண்டு போவென்றெதிர்வந்து தன்வில்லினோடும் தவத்தை யெதிர் வாங்கப்பெற்றுப் பெருமாளிடத்தில் பங்கப்பட்டவன் என் பதை நன்கறிகின்றோம். இப்படிப்பட்ட மஹாவீரஸார்வபௌம ரான பெருமாள் *பொல்லாவரக்கனைக் கிள்ளிக்களைந்தானென்று ஆண்டாளருளிச்செய்தபடி இராவணனை அவலீலையாக முடிக்க வல்லவரென்பது நிஸ்ஸந்தேஹமும் நிர்விவாதமுமான விஷயம். ஆகவே ராவணவதத்திற்காக ஸுக்ரீவனைத் துணை கொண்டா னென்பது அஸம்பாவிதம். தீனபந்துவென்றும் தீநதயாளுவென் றும் முறையிடப்படுகிற தமது பெருங்குணத்தை உலகில் விளக்கிக் காட்டவேண்டியே பெருமாள் ஸுக்ரீவனைப் பரிக்ரஹித்தது.

873. "கலையுங் கரியும் பரிமாவும் திரியுங் கானம் கடந்து போய்ச், சிலையும் கணையும் துணையாகச் சென்றான் வென்றிச் செருக்களத்து" என்று திருமங்கையாழ்வார் அருளிச் செய்தபடி பெருமாளுக்குத் தமது சிலையுங்கணையுமே துணையல்லது வேறெது வும் துணையன்று. ஆழ்ந்துபார்க்கில் அந்தச் சிலையும் கணையுங் கூடத் துணையல்ல; விபீஷணபரிக்ரஹப்ரகரணத்தில் "அங்குல்யக் ரேண தாந் ஹந்யாம் இச்சந் ஹரிகணேச்வர!" என்று ஸுக்ரீ வனையே நோக்கிப் பெருமாள் பணித்ததை ஆராயுமிடத்து இது நன்குவிளங்குமன்றோ? (இச்சந்) என்றதற்குப் பொருள் ஸங்கல்ப மாத்ரேண என்பதேயன்றோ? இவ்விஷயங்களையெல்லாம் ஹ்ரு தயத்திலடக்கியாயிற்று இங்கு [ராமோ மஹாபல:] என்றது.

874. [அபிஷிச்ய ச லங்காயாம் ராக்ஷஸேந்த்ரம் விபீஷணம். க்ருதக்ருத்யஸ் ததா ராமோ விஜ்வர: ப்ரமுமோத ஹ]. இந்த ச்லோகத்தில் ஸ்ரீ விபீஷணாழ்வானுடைய பட்டாபிஷேகமும், அத னால் பெருமாளடைந்த திருவுள்ளவுகப்பின்மிகுதியும் அற்புதமாகப் பேசப்படுகின்றன. மேல் யுத்தகாண்டத்தில் விபீஷணனுக்கு முடி சூட்டிய வரலாறு இரண்டிடங்களில் வான்மீகி முனிவரால் கூறப்பட்டுள்ளது. விபீஷணன் அரக்கர்நால்வருடன் ஸ்ரீராம ஸன்னிதானம் வந்து சேர்ந்து, ஸுக்ரீவாதிகளின் வாதவிவா தங்கள் முடிவுபெற்று, பெருமாள் அவனை ஸ்வீகரித்தருளினது (யுத்) பதினெட்டாம் ஸர்க்கத்தில் சொல்லித் தலைக்கட்டப்பட்டது. அடுத்தபத்தொன்பதாவது ஸர்க்கத்தில்—விபீஷணாழ்வானைப் பெரு மாள் அழுந்தக் கட்டியணைத்து மகிழ்ந்து 'ஸமுத்ரத்திலின்றும் தீர்த்தம்கொணர்ந்து இவ்விபீஷணனை ராக்ஷஸராஜனாக எனது விருப்பத்தின்படி அபிஷேகம் செய்வாயாக' என்று இளையோனுக்கு நியமித்து நடத்திவைத்ததாகச் சொல்லப்பட்டது. மேலே ராவண வதமாகி அவனுக்கு அவ்விடத்தில் தஹனச் சடங்கும் நடந்தேறிய



பின்னர், நூற்றுப்பதினைந்தாம் ஸர்க்கத்தில்—விபீடணனை இளைய பெருமாள் சீரிய சிங்காசனத்தில் அமர்த்தி மறுபடியும் பட்டாபி ஷேகம் செய்து வைத்ததாகவும் சொல்லப்பட்டுள்ளது. ஸுக்ரீவ மஹாராஜர்க்கு வாலிவதமான பிறகு கிஷ்கிந்தா ராஜ்யாபிஷேகம்; விபீஷணனுக்கு முன்னும் பின்னுமாக இருமுறை; இதைப்பற்றிப் பிறகு விமர்சிப்போம்.

875. ப்ரக்ருதம் 'அபிஷிச்ய ச லங்காயாம்' என்கிற சுலோகத் தினால் கூறப்படுகிற அபிஷேகம் முடிவாக நடந்ததைமட்டும் தெரி விப்பதாகும். அதிலும் சிறிது வேற்றுமையுள்ளது. அதாவது, பிராட்டி அக்னிப்ரவேசம் பண்ணித் தன்னுடைய பரிசுத்தியை ஸ்தாபித்துப் பெருமாளருகே சேர்வதற்கு முன்னமே விபீஷண பட்டாபிஷேகம் நடைபெற்றுவிட்டதாக மேலே கதாஸந்தர்ப்ப முள்ளது. இங்கு ஸீதாஸமாகமமெல்லாம் முடிந்தபிறகு அது நடைபெற்றதாகச் சொல்லப்படுகிறது. இந்த பௌர்வாபர்யம் கணிசிக்கத் தக்கதன்றென்று கொள்க. இருமுறை நடந்த பட் டாபிஷேகத்தை ஒருசேரச் சொல்லி முடித்தனரென்றும் கொள்ளக் கடவது.

876. விபீஷணாழ்வான் வந்துசேர்ந்தவுடனே நடத்திய பட் டாபிஷேகத்தைப் பற்றிக் கூரத்தாழ்வான் அதிமாநுஷஸ்தவத்திலே விநோதமாகச் சில கேள்விகள் கேட்கும் முகத்தினால் வெளியிட்ட ருளினதொரு தத்வார்த்தத்தை விவரிப்போமிங்குச் சிறிது. (ச்லோ 24) ["அப்திம் ந தேரித ந ஜிக்யித ராக்ஷஸேந்த்ரம் நைவாஸ்ய ஜஜ்ஞித யதா ச பலாபலம் த்வம். நிஸ்ஸம்சயஸ் ஸபதி தஸ்ய பதேப்யஷிஞ்சஸ் தஸ்யாநுஜம் கதமிதம் ஹி விபீஷணஞ்ச."] மநுஷ்ய பாவனை ஒரு புறமிருக்கச் செய்தேயும் பரத்வைகாந்திக மான ஸத்யஸங்கல்பத்வத்தையும் இடையிடையே வெளியிட்ட ருளினமையுமுண்டு என்றுகாட்டுவது இங்கு ப்ரதானவிவக்ஷிதம்.

877. இராமபிரானே! கடலைக் கடக்கவேண்டியகாரியம் பலீயஸ்ஸாக இருந்தது; அதனைக் கடந்து இலங்கைக்குச் சென்றா லும் வரபலபுஜபலங்களாலே அப்ரத்ருஷ்யனான இராவணனை ஜயிக்கவேண்டியகாரியம் அதற்குமேலே பிரபலமாயிருந்தது. இருக்கச்செய்தேயும், கடலைக்கடவாமலும் இலங்கையர்கோனை வெல்லாமலும், அவன்வெல்லக் கூடியவன்தானாவென்று அவனு டைய பலாபலங்களை விசாரித்துத் தெரிந்து கொள்ளாமலும் அவ னுடைய ஸ்தானத்திலே அவன்தம்பியான விபீஷணாழ்வானை அபி ஷேகித்தருளினது என்னதைரியங் கொண்டு? என்பது கேள்வி.

இது பெருமாளையே நோக்கிக் கேட்டிருப்பதால் அவர்தாமே விடையருளிச் செய்யவேணுமென்பது திருவுள்ளம் போலும். இது ஜ்ஞாதப்ரச்நமேயொழிய அஜ்ஞாதப்ரச்நமன்றாதலால் ஆழ்வான் திருவுள்ளத்திலுறையும் விடையை விளக்குவோம்.

878. பெருமாள் கடலருகில் வந்துசேர்ந்தவுடனே இக்கடலைக் கடந்து செல்வது எங்ஙனேயென்று மிகவும் விசாரமுறுவதாகக் காட்டியது ஒரு புறமிருப்பினும், “தபஸா ஸேதுபந்தேந ஸாகரோச்சோஷணேந வா, ஸர்வதா ஸுஸமர்த்தோஸ்மி ஸாகரஸ்யாஸ்ய லங்கநே” என்று தமக்குக் கடல்கடத்தல் மிக வெளிதேயென்றும் காட்டியிருப்பதனாலும், ராவணனையும் வென்ற கார்த்தவீரியனையும் வென்ற பரசுராமனையும் வென்ற தமக்கு ராவணஜயம் ஒருபொருளோ வென்று மதித்திருக்கையாலும் கடல் கடத்தலும் ராவணஜயமும் செய்துவிட்டதாகவே பெருமாளுக்குத் திருவுள்ளமென்னக் குறையில்லை.

879. விபீஷணனுக்கு முதல் மகுடாபிஷேகம் நடத்திவைக்கும் ஸமயத்தில் அவனை நோக்கி “ஆக்க்யாஹி மம தத்வேந ராக்ஷஸாநாம் பலாபலம்” என்று, அரக்கர்களின் பலாபலங்களை உள்ளபடி சொல்லுமாறு கேட்டிருக்கிறார் பெருமாள். இதனால் தமது திருவுள்ளத்தில் ஒரு புறம் விசாரமுமிருப்பதுபோல் தோன்ற நின்றாலும், இக்கேள்வி அந்யார்த்தமென்பதை நம் ஆசார்யர்கள் மருமமறிந்து விளக்கியுள்ளார்கள்.

880. எங்ஙனேயென்னில், ஸ்ரீவசன பூஷணத்தில் (228) “விபீஷணனை ராவணன்*குல பாம்ஸநம்*என்றான்; பெருமாள் இக்ஷ்வாகுவம்ச்யராக நினைத்து வார்த்தையருளிச் செய்தார்” என்று பிள்ளைலோகாசார்யருடைய ஸ்ரீஸூக்தி. இதில் ராவணன் குல பாம்ஸநமென்றானென்றதின் பொருள் அனைவர்க்கும் அநாயாஸவிதிதம்; பெருமாள் இக்ஷ்வாகுவம்ச்யராக நினைத்து வார்த்தையருளிச் செய்தது எங்கேயென்பதை மணவாளமாமுனிகளின் வியாக்கியானங் கொண்டறியவேண்டும். மாமுனிகளின் ஸ்ரீஸூக்தி வருமாறு;—‘இக்ஷ்வாகுகுலநாதரான பெருமாள் இவனை ஆதரபூர்வகமாக அங்கீகரித்தவனந்தரம் *ஆக்க்யாஹி மம தத்த்வேந ராக்ஷஸாநாம் பலாபலம்என்று, ராக்ஷஸருடைய பலாபலமிருக்கும்படியை நமக்குச் சொல்லுமென்கையாலே இவனை ராக்ஷஸஜாதியனாக நினையாதே திருத்தம்பிமாரோபாதியாக அபிமானித்து வார்த்தையருளிச் செய்தாரென்கை” என்று.



881. உண்மையில் பெருமாள் இங்கு ராக்ஷஸஜாதீயனை நேரே நோக்கியருளிச்செய்யும் வார்த்தையில் “யௌஷ்மாகாணாம்” என்றோ, “த்வதீயாநாம்” என்றோ சொல்லியிருக்க வேண்டுமேயல்லது இங்ஙனம் சொல்லியிருப்பது பொருந்தாதன்றோ. பஞ்சவடியில் வந்த சூர்ப்பணகை “விபீஷணஸ்து தர்மாத்மா நது ராக்ஷஸசேஷ்டித;” என்றவள் ராக்ஷஸஜாதீயத்வத்தையிசைந்து ராக்ஷஸசேஷ்டையில்லையென்றாள். பெருமாள் ராக்ஷஸஜாதியையே தொலைத்துப் பேசினாராயிற்று. ஏவஞ்ச *ஆக்க்யாஹி* இத்யாதி ப்ரக்ருதச்லோகமானது பலாபல ஜிஜ்ஞாஸையினால் தோன்றியதன்று; விபீஷணனுக்கு இக்ஷ்வாகுவம்ச்யத்வத்தை ஸ்தாபிக்கத் தோன்றியதத்தனை என்றதாயிற்று.

882. எடுத்துக்கொண்ட அதிமாநுஷஸ்தவச்லோகத்தை இனி முடிப்போம். [நிஸ்ஸம்சயஸ் ஸபதி தஸ்ய பதே விபீஷணம் கதம் அப்யஷிஞ்ச:?] என்கிற வினாவோடே தலைக்கட்டியுள்ளார் ஆழ்வான். ஸத்யகாமத்வ ஸத்யஸங்கல்பத்வங்களை தேவரீர் மறைத்துக் கொண்டு அவதரித்ததாகக் காட்டினாலும் கீதையிலே “ப்ரக்ருதிம் ஸ்வாம் அதிஷ்டாய ஸம்பவாமி” என்றருளிச் செய்தபடி அஜஹத்ஸ்வபாவராயே அவதரித்தீராகையாலே நாம் நினைத்ததை நினைத்தபடியே பத்தும் பத்தாகச் செய்து தலைக்கட்டவல்லோமென்கிற துணிவு கொண்டே முந்துறமுன்னம் அவனுக்கு அபிஷேகம் செய்தருளினீரென்பது ஆழ்வானுடைய திருவுள்ளத்திலோடிக் கிடக்கும் ஸமாதானம்.

883. இங்குச் சிலர் சொல்லுவதொன்றுண்டு; விபீஷணனுக்கு அபயமளித்து அவனைத் தன்பக்கலிலே அழைத்துவரும்படி மஹாராஜர்க்கு நியமித்தபோது ‘விபீஷணோ வா ஸுக்ரீவ! யதிவா ராவணஸ் ஸ்வயம்” என்று ‘என் கண்ணுக்குப் புலப்படாதே கடக்க நின்று அபயம்வேண்டினவன் விபீஷணனன்றிக்கே மாறுவேடம்பூண்ட ராவணனேயென்று தெரிந்தால் அவனையும் விடாதே தாராளமாகக் கொணர்வாயாக’ என்று நியமித்தவராகையாலே லங்கேச்வரனான ராவணனைப் பரிக்ரஹிப்பதிலும் பெருமாளுக்கு நப்பாசையுள்ளதாகத் தெரியவருவதால் ஏதோ வ்யாஜமாத்ரத்தையே நோக்கி அங்கீகரித்தருளுகிற தம்முடைய ஸ்வபாவ விசேஷத்தினாலே ஒருகால் ராவணனை அநுக்ரஹிக்க நேர்ந்து விட்டால் விபீஷணன் அவனுக்கு அடிமைப்பட்டிருக்க நேர்ந்து விடுமோவென்று சங்கித்து அதற்கு இடமறும்படி முன்னாடியே விபீஷணனுக்கு முடிசூட்டிவிட்டாரென்று. இங்ஙனே சொல்லுவதில் அநௌசித்யமொன்றுமில்லை.

884. "செல்வ விபீடணற்கு வேருக நல்லானை" என்று
திருமங்கையாழ் வாரருளிச் செய்தபடி விபீஷணாழ்வான் பக்கலிலே
பெருமாளுக்குத் தனிப்பட்டதோர் அன்பு அபலபிக்க வொண்ணுத
தாகையாலே அவனுலே ஸ்ரீரங்கஸ்ரீ ஸம்ருத்தமாக வேணு மென்
றும், "மின்னிலங்குபூண் விபீடண நம்பிக்கு, என்னிலங்குநாமத்
தளவுமரசென்ற" என்று பெரியாழ்வாரருளிச் செய்தபடியே அவ
னுக்கு சிரஞ்சீவி பதவியையளித்து *மன்னுடைய விபீடணற்கா
மதிளிலங்கைத் திசைநோக்கி மலர்கண் வைத்து மகிழவேணு
மென்றும் பெருமாளுக்குத் திருவுள்ள மிருந்த தென்னத் தட்டில்லை.
ஆக, ஸத்பாத்ர ஸார்வபௌமனை விபீஷணாழ்வான்பக்கலிலே
பெருமாள் காட்டியருளின விசேஷாபிமானம் மிகப் பொருந்து
மென்றதாயிற்று.

885. இனி *அபிஷிச்ய ச லங்காயாம்* என்கிற ப்ரக்ருதச்லோ
கத்தினுள்ளிறங்கிச் சில ரஸவிசேஷங்களையநுபவிப்போம். இதில்
உத்தரார்த்தத்தில் ஒவ்வொரு பதமும் மதிப்பிலாத மாணிக்கம்.
[க்ருதக்ருத்யஸ்ததா ராமோ விஜ்வர: ப்ரமுமோத ஹ] ராம: ததா
க்ருதக்ருத்ய:, ததா ராமோ (பபூவ); ததா விஜ்வர:; ததா ப்ரமு
மோத; இத்தனைக்கும் மேல் (ஹ) என்பதொன்று. இவ்வளவுக்குஞ்
சேரப் பூர்வார்த்தம் எப்படியிருக்கவேணுமென்னில்; "விநிஹத்ய
ச லங்காயாம் ராவணம் ராக்ஷஸேச்வரம்" என்றிருந்தால் நன்ரும்.
அறுக்க அறுக்க அடுத்தடுத்து முளைத் தெழுந்த தலைகளை வெட்டி
வீழ்த்தி அவனை உயிர் மாய்த்துப் பெருமாள் க்ருதக்ருத்யரானுர்.
உள்ளம் பூரித்தார் என்ருல் இது பொருந்தும்; விபீடணன் தலை
யிலே முடியை வைத்து க்ருதக்ருத்யரானுரென்பது என்னே?
க்ருதக்ருத்ய: என்று யாரைச் சொல்லுகிறது? க்ருதாநி க்ருத்யாநி
(ஸகலாநி) யேந ஸ:— க்ருதக்ருத்ய:; செய்யவேண்டிய காரியங்களை
யெல்லாம் செய்து தலைக்கட்டினவர் யாவரோ, அவரையாயிற்று
க்ருதக்ருத்ய ரென்பது. காடேறப்போந்தபெருமாள் மீண்டு திருவ
யோத்திக் கெழுந்தருளித் தாம் திருவபிஷேகம் கண்டருளின
லன்ரோ க்ருதக்ருத்யராவது. அதற்கு முன்னமே க்ருதக்ருத்ய
ரானுர், விஜ்வரரானுர், ப்ரமுதிதரானு ரென்கை கூடுமோவென்று
சங்கிக்க நேரும்.

886. இங்கே நம்பிள்ளையருளிச் செய்வதொரு இன்சுவைப்
பொருளுண்டு; அதாகிறது, பரதாழ்வான் முடி சூடமாட்டே
னென்று இருய்த்ததுபோல இவனும் இருய்க்கில் செய்வதென்?
முடிக்கு இருய்ப்பது இஷ்வாகுவம்ச்யர்களுக்கெல்லாம் பணியா
யிற்றே. இவனும் இக்ஷ்வாகுவம்ச்யனுய்விட்டபடியாலே அவ்
விருய்ப்பு இவனையும் தொடருமோவென்று அஞ்சியிருந்தார் பெரு



மாள். இவன் இருய்க்காதே எளிதாக இசைந்து நின்றபடியாலே
திருவுள்ள முகந்து 'இதாநீம் க்ருதக்ருத்யோஸ்மி' என்ருர் பெரு
மாள்: அதை மஹர்ஷி 'க்ருதக்ருத்யஸ் ததா ராம:' என்று அனு
பாஷித்தார் என்று. இது ரஸோக்தியின் பாற்படும்.

887. சாஸ்த்ரார்த்தமிருந்தபடி கேளீர். விபீஷணாழ்வான்
விஷய மொன்றேயன்று; "ய: கச்சிதேவ யதி கிஞ்சந ஹந்த! ஜந்துர்
பவ்யோ பஜேத பகவந்த மநந்ய சேதா:, தம் ஸோயமீத்ருச இயா
நிதி வாப்யஜாநந் ஹை வைநதேய ஸமமப்யுரரீகரோஷி." என்று
ஆழ்வானருளிச்செய்தபடியே இன்ருக ஒருவன் வந்து அடிபணிந்
தாலுங்கூட அவன் திறத்திலே எம்பெருமான் காட்டியருளும்
அன்பு அப்ரமேயமாய் அவனுடைய காரியத்தைத் தன் காரியமாக
நினைத்து உகப்பது எம்பெருமானுடைய இயல்பாதலால் அது இவ்
விடத்திலே விளங்கிற்ருயிற்று. உலகில் தன்காரியம் தலைக்கட்டி
அதனுல் தன்னைக்ருதக்ருத்யனுக நினைக்குமவன் காபுருஷனல்லனே?
தன்னை யடுத்தவனுடைய காரியத்தைத் தன் காரியமாகக்கொண்டு
அது தலைக்கட்டினவாறே தன்னை க்ருதக்ருத்யனுக நினைப்பவனே
யாயிற்று உண்மையில் க்ருதக்ருத்யனுவான்.

888 "ப்ராயோ ஹ்யக்ருதக்ருத்யத்வாத் ம்ருத்யோருத்விஜதே
ஜந:, க்ருத க்ருத்யா: ப்ரதீக்ஷந்தே ம்ருத்யும் ப்ரியமிவாதிதிம்."
என்று ப்ரஸித்தமான மநுமஹர்ஷிவசனத்திலுள்ள அக்ருதக்ருத்ய
க்ருதக்ருத்ய சப்தங்களை இங்கு ஸ்மரிக்கலாகாது; "விது: க்ருஷ்ணம்
ப்ராஹ்மணுஸ் தத்வதோ யே தேஷாம் ராஜந் ஸர்வயஜ்ஞாஸ்
ஸமாப்தா." இத்யாதிப்படியே க்ருதக்ருத்யர்களாக மதிக்கப்படுகிற
பரமைகாந்திகளின் தன்மை நம் போலியர்க்கு அநுகரணீயமாகு
மத்தனை. நம்மாழ்வார் திருவாய் மொழியில் வானமாமலைப் பதிகத்
திலே "செய்த வேள்வியர்வையத்தேவர்" என்று கொண்டாடின
அதிகாரிகள் பகவத்விஷயத்திலே செய்யவேண்டுவன வெல்லாம்
செய்து தலைக்கட்டி மார்பிலே கைவைத்துறங்குமவர்கள்.

889 ஸ்தோத்ர ரத்நத்தில் (18) *வசீ வதாந்ய:* இத்யாதி
ச்லோகத்தில் க்ருதீ என்பதற்கு வியாக்கியான மியற்ரு நின்ற
வேதாந்தவாசிரியர் 'க்ருதீ - ஆச்ரித ரக்ஷணேந க்ருதக்ருத்ய:;
ததுக்தம் *அபிஷிச்ய* இத்யாரப்ய க்ருதக்ருத்யஸ் ததா* இதி"
என்று பணித்தது இங்குக் குறிக்கொள்ளத் தக்கது. ஆக, ஆச்ரித
ரக்ஷணத்தைத் தன்பேருக நினைத்து அதைத் தலைக்கட்டி யுகப்
பவன் க்ருதக்ருத்யனென்றதாகிறது.

890 பகவத் கீதை ஒன்பதாமத்யாயத்தின் முடிவிலுள்ள *மந்மநா பவ மத்பக்த:*என்னும் சுலோகபாஷ்யத்தின் தாத்பர்ய சந்திரிகையில் "ஆச்ரிதஸ்ம்ரக்ஷணம் ஸ்வலாபம் மத்வா ப்ரவர்த்ததே" என்றருளிச் செய்திருப்பதும் இதனைக் கணிசித்தேயாம்.

891 [ததா ராம:] இங்கு .(ராம:) என்பதை விசேஷ்யவாசக பதமாகக் கொள்வது மட்டுமல்லாமல் 'ததா ராமோ பபூவ' என்று தனிவாக்யமாக்கி இதையுமொரு லாபமாக வைத்துப் பேசுவர்கள் ரஸிகர்கள். ரமயதீதி ராம:' என்றும் 'ரமதே இதி ராம.' என்றும் இரண்டுபடியாக வ்யுத்பத்தியுண்டே. இரண்டாவது வ்யுத்பத்தி இங்கு மிகப் பொருந்தும்; "குஹேந ஸஹிதோ ராம:" என்றவிடத்தில் 'குஹேநஸஹிதஸ்ஸந் ராமோ பபூவ' என்றும் யோஜிப்பதுண்டே, அது போல, விபீஷணனுக்கு அபிஷேகமான பின்பே தம்மை ராமனாக நினைத்தாராயிற்று பெருமாள்.

892 [ததா விஜ்வர:] கார்யே காரணோபசார நீத்யா ஜ்வர கார்யமான துக்கத்தில் ஜ்வரசப்தோபசாரமிருந்தபடி. ஸஹஸ்ர நாமத்தில் (அநிர்விண்ண:) என்றொரு திருநாமமுண்டு. இங்கு நிர்வேதத்தின் அத்யந்தாபாவம் கொள்வதைவிட ப்ரத்வம்ஸாபாவம் கொள்வது சிறக்குமென்பர் ரஸிகர்கள்; நமக்கு நேரும் சோகங்கள் கர்மாதீனம். அவனுக்கு நேரும் சோகம் க்ருபாதீனம். அடியார் குறையுற்றிருக்குமன்று தான் குறையற்றிருந்தானென்கை ஒரு பொருளன்றே.

893 திருவாய்மொழியில் *துயரறு சுடரடி* என்றவிடத்தில் "துயரறுக்குஞ் சுடரடி யென்று பொருள் கொள்வர் முன்னோர் ; துயரறுஞ் சுடரடியென்பர் எம்பெருமானார். அதாவது அடியார்கள் துயர்தீர, தான் துயர்தீர்ந்தானாயிருக்கிறபடி" என்றதற்கும் நிதானமிதுவேயாகும். விபீஷணனும்வான் மகுடாபிஷேகத்தைத் தனக்கொரு புருஷார்த்தமாக நினைத்திருந்ததில்லையாகிலும் ஏற்கனவே ஒருகால் கடற்கரையிலே இது செய்யப் பட்டிருந்ததேயாகிலும் நாகபாசபந்த காலத்தில் "யந்மயா ந க்ருதோ ராஜா ராக்ஷஸாநாம் விபீஷண:, தச்ச மித்த்யா ப்ரலப்தம் மாம் ப்ரதக்ஷ்யதி ந ஸம்சய:" என்னும்படி தம் திருவுள்ளம் தபித் திருந்ததுண்டாகையாலே அந்த தாபம் தீர்ந்தபடி சொல்லிற்று. தாபம் தீர்ந்தவளவேயன்று [ப்ரமுமோத] ஸந்தாபம் நடையாடியிருந்த விடங்களடங்கலும் ஸந்தோஷம் குடிபுகப்பெற்ற தென்கை. 'ப்ராப்தாவும் ப்ராபகனும் ப்ராப்திக்கு உகப்பானுமவனே" என்கிற ஸ்ரீவசந பூஷண திவ்யஸூக்தி இங்கே நினைக்கத்தகும்.



894 ஸஹஸ்ரநாமத்தில் "பரர்த்தி: பரமஸ்பஷ்டஸ் துஷ்ட: புஷ்டச் சுபேக்ஷண:, ராம:" என்றவிடத்தில் துஷ்ட:- ஸந்தோஷித்தவர் ; தசரதாத்மஜத்வலாபத்தாலே ஸந்தோஷித்தவர்" என்று பட்டர் பாஷ்யமருளிச் செய்கிறார். இதன்படி அவதரித்தவன்றே ஸந்துஷ்டராயிருந்தாலும் [ததா ப்ரமுமோத] அது ஸாமாந்ய ஸந்தோஷம்; இது விசேஷஸந்தோஷமென்கிறது. [ஹ] 'ப்ரமுமோத' என்பதனாலே காட்டின ஸந்தோஷம் பெருமாளைச் சேர்ந்தது. கதை சொல்லிப் போருமளவேயன்றிக்கே வான்மீகி முனிவர் தாமும் அநுபவத்தில் ஆழங்காற்பட்ட படி.

895 'மேல் யுத்த காண்டத்தில் நூற்றிருபதாம் ஸர்க்கத்தில் ஒரு சிறு கதை காணப் படுகிறது. (அதாவது) பெருமாள் தேவேந்திரன் முன்னே கைகூப்பி நிற்க, இந்திரன் பெருமானை நோக்கி ஏதாவது வரம் வேண்டிக் கொள்ளுமாறு கூற, பெருமாள் "யதி ப்ரீதிஸ் ஸமுத்பந்நா மயி தே விபுதேச்வர!, வக்ஷ்யாமி குரு மே ஸத்யம் வசநம் வததாம் வர !. மம ஹேதோ: பராக்ராந்தா யே கதா யமஸாதநம், தே ஸர்வே ஜீவிதம் ப்ராப்ய ஸமுத்திஷ்டந்து வாநரா:" என்று வரம் வேண்டிக் கொண்டதாக. அதாவது போர்க்களத்தில் மாண்டொழிந்த வானர வீரர்களனைவரும் பிழைத்தெழுந்து மக்கள் மனைவியரோடு கூடிக் களிக்குமாறு வரமளிக்க வேணுமென்று வேண்டிக் கொள்ள, அப்படியே இந்திரன் வரமளிக்க, ஸகல வாநரவீரர்களும் உறங்கி யெழுந்தாப் போல் எழுந்து திரளில் சேர்ந்து கொண்டதாகக் கூறப்பட்டுள்ளது. அதற்கு இணங்க இங்கு ஸம்க்ஷேபத்தில் "தேவதாப்யோ வரம் ப்ராப்ய ஸமுத்தாப்ய ச வாநராந், அயோத்யாம் ப்ரஸ்திதோ ராம:" என்றுள்ளது. இங்ஙனே மற்றொரு வரமும் பெற்றதாக மேலே கதையுள்ளது. அதைப்பற்றி அடுத்த படியாக எடுத்துக் கொள்ளுவோம். போர்க்களத்தில் மாண்டொழிந்த வானர வீரர்களையெல்லாம் பெருமாள் வரம் வேண்டிப் பிழைப்பித்ததாகச் சொல்லப் படுகிறவிதனில் சில விவக்ஷிதங்களுண்டு, "தத்ஸர்வம் தர்மவீர்யேண யதாவத் ஸம்ப்ரபச்யதி" என்று தேவதாப்ரஸாதம் பெற்று அவதரித்ததும் "ந தே வாகந்ருதா காவ்யே காசிதத்ர பவிஷ்யதி" என்று ப்ரக்க்யாதி பெற்றதுமான ஸ்ரீராமாயணத்தில் விப்லவமோ உபப்லவமோ சங்கிப்போமல்லோம். *ஆத்மாநம் மாநுஷம் மந்யே* என்ற மநுஷ்யபாவனைக்குச்சேரப் பெருமாள் அநுஷ்டித்தவற்றில் நாம் ஆழ்ந்து உண்மையும் காணவேண்டியிராநின்றது.

896 எங்கும் ஸ்ரீராமாயணம் ஸேவிப்பவர்கள் தனியன்களில் சேர்த்து ஒரு பெரிய ச்லோகம் அநுஸந்தித்து வரக்காண்கிறோம்.

974. கூரத்தாழ்வானருளிச் செய்த ஸ்ரீவைகுண்ட ஸ்தவத்தில் *தூரே குணஸ் தவ து ஸத்வரஜஸ்தமாம்ஸி தேந த்ரயீ ப்ரதயதி த்வயி நிர்க்குணத்வம், நித்யம் ஹரே நிகில ஸத்குணஸாகரம் ஹி த்வாமாமநந்தி பரமேச்வர மீச்வராணும்* என்றுள்ள ச்லோக ரத்நம் இங்கு நித்யானுஸந்தேயமாகக் கடவது.

975. நாமெழுதி வெளியிட்டுள்ள ஸ்ரீவைகுண்ட ஸ்தவ வியாக்கியானத்திலிருந்து சில பங்க்திகளை உதாஹரித்தே இதன் பொருளுணர்த்துகிறேம்; (நமது வியாக்கியான பங்க்திகள்) நிர்குணச்ருதிகளுக்கு என்ன கதியென்ன, அவற்றை நிர்வஹிக்க வேண்டும் வழி காட்டுகிருரிதில் *நிர்குணம் நிரஞ்ஜநம்* இத்யாதி ச்ருதிகள் எம்பெருமான் பக்கலிலே குணங்களின் அத்யந்தாபாவத்தைச் சொல்லுகின்றனவல்ல. அப்படியாகில் *யஸ் ஸர்வஜ்ஞஸ் ஸர்வவித்* இத்யாதிகளான பரச்சத வாக்கியங்களினுல் எம்பெருமானுக்குச் சொல்லப்பட்ட குணபௌஷ்கல்யம் வ்யாஹதமேயாகும். ஒரு ச்ருதியும் வ்யாஹதார்த்தமாகாதபடி நிர்வஹிக்க வேண்டுமே. நிர்க்குணத்வத்தைச் சொன்னவிடம் ஹேயகுணராஹித்யத்தைச் சொல்லிற்ருகக் கொள்ளுமளவில் ஒரு விரோதமுமில்லையே. உத்ஸர்க்காபவாத ந்யாயம் இதற்குக் கை கொடுக்குமே. *[ஸத்வ ரஜஸ் தமாம்ஸி குணஸ்து தவ தூரே]* ஸத்வ ரஜஸ்தமோகுணங்கள் தேவரீருக்கு நெடுந்தூரத்திலுள்ளன. எம்பெருமான் பக்கலில் ரஜஸ்தமோ குணங்கள் இல்லையென்று சொல்லலாமத்தனை போக்கி ஸத்வகுணமும் இல்லையென்று சொல்லலாமோ வென்று ஒரு சங்கை தோன்றும். *பரம ஸத்வ ஸமாச்ரய: க:* என்னும்படியுள்ள எம்பெருமான் பக்கலில் ஸத்வ குணமில்லை யென்னப் போகாது: ரஜஸ்தமோமிச்ரமான ஸத்வகுணமில்லை என்கிற தத்தனை. [தேந த்ரயீ ப்ரதயதி நிர்க்குணத்வம்] அதையிட்டே வேதத்தில் நைர்குண்ய வாதம் ப்ரவ்ருத்தமாயிற்று. குணஸாமாந்யாபாவத்தையே ச்ருதி விவக்ஷிக்கிறதென்ன வொண்ணுதோவென்னில் ஒண்ணுமையை உபபாதிக்கிறது உத்தரார்த்தம் - [ஸத்யம் ஹரே! நிகில ஸத்குண ஸாகர மித்யாதி] *ப்ராஸ்ய சக்திர் விவிதைவ ச்ரூயதே ஸ்வாபாவிகீ ஜ்ஞாநபலக்ரியாச* *ஸத்யகாமஸ் ஸத்ய ஸங்கல்ப:* இத்யாதி ச்ருதிகள் எம்பெருமானை ஸகல கல்யாண குண நிதியாக ஓதாநிற்க, அதற்கு முரணுகப் பொருள் கொள்ள வொண்ணுதிறே. *அக்நீஷோமீயம் பசுமாலபேத* இத்யாதிகளில் விஹிதமான ஹிம்ஸையைத் தள்ளியன்றே *மா ஹிம்ஸ்யாத் ஸர்வா பூதாநி* இத்யாதி நிஷேத ச்ருதிகளுக்குப் பொருள் நிர்வஹியா நின்றேம். அது போல வென்க.



## மேல் 25 அமுதமொழிகள் திவ்யப்ரபந்த ஸாரஸங்க்ரஹம்

976. திருப்பல்லாண்டைக் கற்று, அதற்கு ஏற்ப வர்த்திக்க வேண்டிய விதம் யாதெனில், அர்ச்சாவதாரங்களில் எம்பெருமானை ஸேவிக்கும்போது அற்பபலன்களை அபேக்ஷியாமல் ஹ்ருதய பூர்வகமாக அவனுக்கு மங்களாசாஸனம் பண்ணவேணும்; பண்ணினுல் நமக்கு அபேக்ஷிதங்களானவை தன்னடையே ஸித்திக்கும்.

977. பெரியாழ்வார் திருமொழிக்கு ஸாரமாக அநுஸந்திக்க வேண்டுவது—(5-3-3) *உனக்குப் பணி செய்திருக்குந்தவமுடையேன் இனிப்போயொருவன் தனக்குப் பணிந்து கடைத்தலை நிற்கை நின்சாயை யழிவு கண்டாய்* என்கிற பாசுரம். இவ்வத்யவஸாயத்தைத் திடமாகக் கொண்டு வர்த்திக்க வேணும்.

978. திருப்பாவையில் (28) *உன்றன்னேடுறவேல் நமக்கு இங்கொழிக்கவொழியாது* என்னும்படி ஒழிக்கவொழியாத பகவத் ஸம்பந்தத்தை நன்குணர்வதற்கு மேற்பட கர்த்தவ்ய மேதுமில்லை; நமக்கு.

979. நாச்சியார் திருமொழிக்கு ஸாரமாக (10 - 10) *வில்லிபுதுவை விட்டு சித்தர் தங்கள் தேவரை, வல்லபரிசு வருவிப்பரேல் அது காண்டுமே* என்கிற பாட்டை யநுஸந்தித்து ஆசார்ய ஸம்பந்தத்தையே தஞ்சமாகக் கொண்டிருக்குமத்தனையே ஸ்வரூபாநுரூபம். இதுவே சரம பர்வ நிஷ்டை யென்பது.

980. பெருமாள்திருமொழிக்கு ஸாரமாக (5) *தருதுயரம் தடாயேல்* என்கிற பதிகத்தை யநுஸந்தித்து அதில் பாசுரந்தோறும் காட்டியுள்ள த்ருஷ்டாந்தங்களைச் சிந்தனைசெய்து அநந்யகதித்வம் குலையாதபடி வர்த்திக்க வேண்டுவது முக்கியம்.

981. திருச்சந்த விருத்தத்திற்கு ஸாரமாக (101) *நிரந்தரம் நினைப்பதாக நீ நினைக்கவேண்டுமே* என்று எம்பெருமான் திருவடிகளிலே பிரார்த்திக்க வேண்டும். நமக்கு விளையும் நன்மைகள் அவனடியாக விளைந்தவை யென்றிருக்கவேண்டும்.

982. திருமாலையில் (38) *உன் கடைத்தலையிருந்து வாழுஞ் சோம்பரை யுகத்தி போலும் சூழ்புனலரங்கத்தானே* என்ற பாசுரத்தைச் சிக்கனக் கொண்டு பகவத் ஸன்னிதியே கதியாக வர்த்திக்கவேணும். அர்ச்சாவதார ப்ராவண்யமுண்டாகவேணும்

983. திருப்பள்ளி யெழுச்சியில் (10) *உன்னடியார்க்கு ஆட்படுத்தாய் பள்ளியெழுந்தருளாயே* என்ற பாசுரத்தைப் பெரிய சாஸ்த்ரார்த்தமாகக் கொண்டு அடியார்க்கு ஆட்பட்டிருக்கையையே ஸ்வரூபாநுரூபமென்று உறுதி கொண்டிருக்க வேணும்.

984. அமலனாதிபிரானில் (1) *அடியார்க்கென்னையாட்படுத்த விமலன்* என்ற சந்தையைக் கொண்டு அவ்வுறுதியை மேன்மேலும் வளரச் செய்து கொண்டு போக வேணும்.

985. கண்ணிநுண் சிறுத்தாம்பில் (8) *ஆயிரமின் தமிழ் பாடினானருள் கண்டீர் இவ்வுலகினில் மிக்கதே* என்றதை ஸாரமாகக் கொண்டு எம்பெருமானருளைக் காட்டிலும் ஆழ்வாருடைய திருவருளே மேம்பட்டதென்று அநுஸந்தித்திருக்கவேணும்.

986. பெரிய திருமொழியாயிரத்தையும் விட்டிட்டு *எங்கள் கதியே யிராமானுசமுனியே! சங்கைகெடுத்தாண்டதவராசா!— பொங்கு புகழ் மங்கையர் கோனீந்த மறையாயிரமனைத்தும், தங்கு மனம் நீ எனக்குத்தா* என்கிற தனியனையே அநுஸந்தித்திருக்க வேண்டும். எம்பெருமானார் திருவருளினால்தான் பெரிய திருமொழி மனப்பாடமாகும்.

987. திருக்குறுந்தாண்டகத்தில் (19) *உலகமேத்துங்கண்டியூரரங்கம்மெய்யம் கச்சிபேர்மல்லை யென்று மண்டினாருய்யலல்லால் மற்றையார்க்குய்யலாமே* என்ற பாசுரத்தை ஸாரமாகக் கொண்டு உகந்தருளின நிலங்களிலே ப்ரவணனாய் குணாநுபவகைங்கர்யங்களே போது போக்காயிருக்கவேணும்.

988. திருநெடுந்தாண்டகத்தில் (28) *என்னில் அங்கமெல்லாம் வந்தின்பமெய்த எப்பொழுதும் நினைந்துருகியிருப்பன் நானே* என்றபடி எம்பெருமானுடைய சிந்தனையே கொண்டு எப்பொழுதும் நினைந்துருகியிருப்பதற்கு மேற்பட ஒரு புருஷார்த்தமில்லை என்று துணிந்திருக்கவேணும்.

989. பொய்கையாழ்வாருடைய திருவந்தாதியில் (16) *பழுதே பலபகலும் போயின வென்று அஞ்சியழுதேன்* என்கிற பாசுரத்தை ஸாரமாகக் கொண்டு ஒரு க்ஷணகாலமும் பழுதுபடாமே பகவத் பாகவதாசார்ய குணசிந்தனையே போது போக்காயிருக்க வேணும்.

990. பூதத்தாழ்வாருடைய திருவந்தாதியில் (16) *வனத்திடரை ஏரியாம் வண்ணமியற்று மிதுவல்லால் மாரியார் பெய்கிற்பார்* என்கிற பாசுரத்தை ஸாரமாகக் கொண்டு நாம் செய்யும் செய்கைகளிலே உபாயத்வபுத்தி குலைந்திருக்கவேணும்.



991. பேயாழ்வாருடைய திருவந்தாதியில் (14). *மாற்பால் மனஞ்சுழிப்ப மங்கையர் தோள்கைவிட்டு* என்கிற பாசுரத்தை ஸாரமாகக் கொண்டு விஷயாந்தரவைராக்ய அப்யாஸம் நிகழ வேணும்.

992. நான்முகன் திருவந்தாதியில் (63) *தெரித்தெழுதி வாசித்தும் கேட்டும் வணங்கி வழிபட்டும் பூசித்தும் போக்கினேன் போது* என்ற பாசுரத்தை ஸாரமாகக் கொண்டு அவ்விதமாகவே போது போக்கி வரவேணும்.

993. திருவிருத்தத்தில் (97) * தொல்லைமாலைக் கண்ணாரக் கண்டு கழிவதோர் காதலுற்றார்க்குமுண்டோ கண்கள் துஞ்சுதலே* என்ற பாசுரத்தை நித்யாநுஸந்தானம் பண்ணியிருக்க வேண்டும்.

994. திருவாசிரியத்தில் (2) *மாயாப்பெரு விறலுலகம் மூன்றினொடு நல்வீடு பெறினும், கொள்வதெண்ணுமோ தெள்ளியோர் குறிப்பே* என்றபடி *த்ருணீக்ருதவிரிஞ்சாதி நிரங்குச விபூதிகர்களாயிருக்க ஆசைப்பட வேண்டும்.

995. பெரிய திருவந்தாதியில் (86) *சீர்கலந்த சொல் நினைந்து போக்காரேல் — என்னினைந்து போக்குவரிப் போது* என்றபடி போதைப் போக்குவதற்கு பகவத்குணாநுபவ மொழிய வேறொரு உபாயமில்லை யென்று துணிந்திருக்க வேணும்.

996. திருவெழுகூற்றிருக்கையில் *அறுதொழிலந்தணர் வணங்குந் தன்மையை* *நெறிமுறை நால்வகை வருணமுமாயினை* என்கிற சந்தைகளை அநுஸந்திப்பதற்குப் பலன் வர்ணாச்ரமாசாரங்கள்வழுவாமேயிருப்பதுதான் என்று கொண்டிருக்கவேணும்.

997. சிறிய பெரிய திருமடல்களைச் சிந்தித்து, ஸ்வரூபவிருத்தமாக மடலூர்ந்தாகிலும் எம்பெருமானைப் பெறவாசைப்பட்டு *நானவனைக் காரார் திருமேனி காணுமளவும் போய்ச், சீரார் திருவேங்கடமே திருக்கோவலூரே....* என்று திவ்யதேசங்கள் தோறும் புக்குப் புறப்படுவதே பேறென்று உறுதிகொண்டிக்க வேணும். மடலூர்வது திவ்யதேசாநுபவம் பெறுவதற்கே.

998. திருவாய்மொழியாயிரத்தில் புகுவதற்கு முன்னே *ஏய்ந்த பெருங்கீர்த்தியிராமானுச முனிதன், வாய்ந்த மலர்ப்பாதம் வணங்குகின்றேன், ஆய்ந்த பெருஞ்சீரார்சடகோபன் செந்தமிழ்

வேதந்தரிக்கும் பேராதவுள்ளம்பெற* என்றனுஸந்தித்து *மிக்க விறை நிலையும் மெய்யா முயிர்நிலையும், தக்க நெறியும் தடையாகித் தொக்கியலும் ஊழ்வினையும் வாழ்வினையுமோதுங் குருகையர் கோன் யாழினிசை வேதத்தியல்* என்றுமநுஸந்தித்திருக்கு மத்தனையே போதும். "உண்டோ திருவாய் மொழிக்கொப்பதோர் கலைதான்".

999. இராமானுச நூற்றந்தாதியில் (107)* இன்புற்ற சீலத்தி ராமானுச! - உன்தொண்டர்கட்கே அன்புற்றிருக்கும்படி என்னை யாக்கியங்காட்படுத்தே* என்ற ஓர் பாசுரத்தின் அநுஸந்தானமே தலை சிறந்து நிற்கவேணும்.

1000. மணவாள மாமுனிகளருளிச் செய்த உபதேச ரத்தின மாலையில் *அன்னபுகழ் முடும்பை யண்ணலுலகா சிரியன்* என்று தொடங்கி (53-59) ஏழுபாட்டுக்களால் வெளியிட்டருளின ஸ்ரீவசன பூஷண திவ்யசாஸ்த்ரப் பெருமையை நிச்சலும் சிந்தித்திருப்பதே ஸ்ரீவைஷ்ணவர்களுக்குத் தஞ்சமாகும். *எல்லார்க்கு மண்டாத தன்றோவது.*

1001. மணவாள மாமுனிகள் உபதேசரத்தின மாலையில் எம்பெருமானுர்க்குத் திருநாள் பாட்டு அருளிச் செய்கையில் "ஆழ்வார்கள் தாங்களவதரித்த நாள்களிலும் வாழ்வான நாள் நமக்கு - சித்திரையில் செய்ய திருவாதிரை" என்றருளிச் செய்தார். மணவாள மாமுனிகளைப் பற்றிப் பேச வேண்டில் "ஆழ்வாரு மாரியரு மவதரித்த நாள்கள் தமில் வாசாம கோசரநாள் ஐப்பசியில் திருமூலம்" என்றநுஸந்திக்க வேணும். *அல்லும் பகலு மனுவிப்பார் தங்களுக்குச் சொல்லும் பொருளும் தொகுத்துரைத்த நல்ல மணவாள மாமுனிவன்* திருவருள் கண்டீர்! இவ்வுலகினில் மிக்கது - என்றே அநுஸந்தித்திருப்பர் அறிவிற் சிறந்த ஆரியர்கள்.

அண்ணுஸ்வாமியின் அமுதமொழியாயிரத்தின் பிற்பகுதி முற்றிற்று.

நம் அண்ணுஸ்வாமியின் அமுதமொழிகள் ஓராயிரமன்று

ஈராயிரமன்று நாலாயிரமுமன்று ஆயிரமாயிரமாய்ப்

பலவாயிரம் பெருகும்.

ஆழ்வாரெம்பெருமானுர் ஜீயர் திருவடிகளே சரணம்.